# ஆலயப்பிரவேச உரிமை.

## (முதற் பாகம்)

ஆசிரியர்:

P. சிதம்பரம் பிள்ளை, B. A., B. L., M. L. A.

(திருவிதாங்கூர்.)

PUBLISHED BY THE AUTHOR.

Printed at the

CHITHRANJAN PRESS,
Nagercoil.

 1935. விலை அணா 5.




தோழர், E. V. ராமசாமி அவர்கள், ஈரோடு.

# முகவுரை

**'Right of Temple Entry'** (ஆலயப் பிரவேச உரிமை) என்னும் ஆங்கில நூலுக்கு ஈரோடு, தோழர் E. V. ராமசாமி அவர்கள் வரைந்துள்ள முகவுரை வருமாறு:—

சுயமரியாதை இயக்கப் பிரமுகர்களில் ஒருவரும், நம் இயக்கத்துக்கே தூண்போல் பொலிபவருள் ஒருவருமான தோழர், பி. சிதம்பரம் பி. எ. பி. எல் (*Travancore*) அவர்கள் "கோவில் நுழைவு உரிமை" **(Right of Temple Entry)** என்னும் ஓர் அரிய ஆங்கில நூலை நம் பார்வைக்கு அனுப்பியுள்ளார். அது சுமார் 300-பக்கங்கள் கொண்டதோர் நூல். தோழர் சிதம்பரம் அவர்களைப்பற்றியும் அவரது ஆங்கில அறிவு, ஆராய்ச்சி, சட்ட நூல் தேர்ச்சி முதலியவற்றைப்பற்றியும் நம் நேயர்கள் சிறப்பாகவும், தமிழ்நாடு முழுவதும் பொதுவாகவும் உணர்ந்திருக்கும் காரணத்தால் அவற்றைப்பற்றி நாம் அதிகம் கூறவேண்டிய அவசியம் இருக்காது. இவ்வரிய நூல் இனிமேல் நமது தோழரவர்களது ஆராய்ச்சித்திறனையும், அறிவின் நுட்பத்தையும் எழுத்தின் திறனையும், நம் தமிழ்நாட்டு மக்கள் மட்டுமன்றி, இந்திய தேசம் முழுவதும் மெச்சும்படியானவிதமாகப் பரப்பும் என்பதில் சிறிதும் சந்தேகமே கிடையாது.

மேற்படி அரிய நூலின் முதற்பாகமாகிய பல அதிகாரங்கள் முன்பு நம் நாட்டில் உலவி வந்த (Revolt) "ரிவோல்ட்" என்னும் ஆங்கில வாரப் பத்திரிகையில் வாரந்தோறும் வெளிவந்தவையே ஆகும். அவைகளின் அபூர்வ குணங்களைக் கண்ட அறிஞரும் வாசகர்களும் அவற்றை முடித்து ஓர் புத்தகவடிவமாக்கி வெளியிடுமாறு வேண்டினர். அதன்மேல் நமது ஆசிரியர் அவற்றுக்குமேல் அதிகமாகப் பல இன்னும் அரிய பெரிய

விஷயங்களைச் சேர்த்தும் பெருக்கியும் இப்போது நம் முன்பாக உள்ள அழகிய உயரிய நூலாக அமைத்து நம் தமிழ் மக்களுக்கு மட்டுமேயன்றி ஆங்கில உலகம் முழுவதுக்கும் பரிவோடு அளித்துள்ளார். இந்நூல் ஆங்கிலம் தெரிந்தவர்களுக்கு ஓர் அரிய விருந்தே என்று கூறின் அது ஒருக்காலும் மிகையாகாது. கடல்போன்ற பெரிய விஷயங்களை அணுப்போன்ற சிறிய அதிகாரங்களில் சுருங்கச்சொல்லி விளங்கவைத்திருக்கும் ஆசிரியரது திறமை அளவிடற்கரிதாகும். கூர்ந்து தாக்கும் கொடுஞ்சொற்களும், நகையாடி நகைப்பிக்கும் கேலிக்கூற்றும், உணர்ச்சியை ஊட்டும் உன்னத வார்த்தைகளும், பற்பல எண்ணிறந்த பெரியார்களின் விலைமதிப்பில்லாத மேற்கோள்களும் இந்நூலில் ஆதியிலிருந்து இறுதிவரை அழகாய் பொலிந்து வாசிப்பவர்களுக்கு இன்பம் பயந்து வருகின்றன. சுருக்கமாகக் கூற வேண்டின், இந்நூலின் ஆணித்தரமான தர்க்க முறையையும், மேற்கோளோடும் சட்ட முறையின் படியும், சரித்திர சாட்சியத்தோடும் நம் தோழர் சிதம்பரம் அவர்கள் இந்தியாவிலுள்ள கோவில்களுக்குள் நுழைய எல்லா மக்களுக்கும் மறுத்தற்கியலாத உரிமை உண்டு என்று கூறியிருத்தலை அறிவுடைய எம்மனிதனும் நியாயம் என்பதைக்கொண்டு எதிர்த்துப் பதில் கூற முடியாது என்பது முக்காலும் நிச்சயம்.

இந்நூலுக்கு இந்நூலே சமம்; ஆதலால் இதில் கிடக்கும் மதிக்க முடியாத பொக்கிஷத்தை அவரவரே வாங்கிப் படித்தாலொழிய அதை முழுதும் எடுத்துக் கூறிவிடுதல் முடியாத காரியமேயாகும். எனினும் இந்நூல் முழுதும் ஓடிக்கொண்டிருக்கும் நூல்போன்ற கருத்துத் தொடர்ச்சியையும் தர்க்க முறையையும் மட்டும் சுருக்கமாக நம் நேயர்களுக்குச் சொல்லலாமென நினைக்கிறோம். இந்நூலின் முக்கிய கருத்துப் பின் வருமாறு:—

ஒவ்வொரு ஹிந்துவும், தீண்டப்படுபவனாயினும், தீண்டப்படாதவனாயினும், ஜாதியுள்ளவனாயினும், ஜாதிக்குப் புறம்பானவனாயினும் எந்த விதமானதொரு பொதுக்கோவிலுக்குள்

ளும் நுழைந்து அங்குள்ள விக்ரகத்தை ஆராதிக்கும் பிறப்புரிமை உடையவனாகவே இருக்கிறான். பிரத்தியேகமாகவும், தனிமையான முறையிலும் ஒரு தனி மனிதனுக்கோ அல்லது ஒரு தனிப்பட்ட ஜாதிக்கோ கட்டப்பட்டுள்ள கோவில்களைப் பற்றிப் பேச்சே கிடையாது. அவைகளில் நுழைவு உரிமை அவற்றை ஏற்படுத்தியவர்களது இஷ்டத்தையும் விதியையும் பொறுத்ததாகும். ஆனால் பொதுவாக இந்துக்களுக்கென்று ஏற்படுத்தப்பட்ட கோவில்களில் இந்து எனக் கூடியவன் ஒவ்வொருவனும் பிறருக்கு இடர் விளைக்காத முறையில் எங்கு வேண்டினும் செல்லலாம். இதுதான் உண்மையான சட்டம். ஆனால் பொதுக்கோவில்களில் தீண்டப்படாதவர்களுக்கு நுழைவுரிமை அளிக்கும் விஷயத்தில் பொதுவாக நீதிஸ்தலங்களிலும், மற்ற இடங்களிலும் எழும் கூக்குரல் என்னவெனில் "பண்டைக் கால வழக்கம்" (Immemorial usage) என்பதாகும். மற்றொன்று ஏற்படுத்தியவர்களது கருத்து (Intention of the Donor) என்பதாகும். ஆனால் உண்மையில் நம் தமிழ் நாட்டில் உள்ள ஏராளமான கோவில்களை ஏற்படுத்தியவர்கள் யார் என்றும், அவர்களது எண்ணம் என்ன என்றும், ஒருவருக்கும் தெரியவே தெரியாது. அப்படியிருக்கும் போது பண்டைக்கால வழக்கம் என்று கூக்குரல் இடுவது தவறு.

ஆதிகாலத்திலிருந்து இந்துக் கோவில்கள் அரசர்களால் பொது ஜனங்களுடைய பணத்திலிருந்தும், அந்தப் பணத்தைப் பெருக்குவதற்குமே கட்டப்பட்டன. சந்திரகுப்த மௌரியன் என்னும் வட நாட்டுச் சக்கிரவர்த்தியின் பிரதம மந்திரியாகிய சாணக்கியன் என்பவரது "அர்த்த சாஸ்திரம்" என்னும் நூலில் மக்களுடைய மடமையையும் மூட நம்பிக்கையையும் உபயோகப்படுத்தி பேய் பிசாசுகள் தெய்வங்கள் இருப்பதாகப் பாவனை செய்து பல இடங்களில் கோவில்களைக் கட்டி அங்கு வரும் கோடிக்கணக்கான மக்கள் அளிக்கும் காணிக்கைகளைத் தான் கைப்பற்றி அரசியல் விஷயங்களுக்குச் செலவழிக்கும் கடமையைப்பற்றியும், முறைமையைப்பற்றியும் வெகு தெளிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது. எனவே இந்தக்கோவில்களெல்லாம் அர

சனின் கஜானுவுக்குப் பணம் கொண்டுவரும், ஒரு வருவாய் தரும் டிப்பார்ட்மெண்டாகவே கருதப்பட்டு வந்தன. எவ்வளவுக்கெவ்வளவு அதிகமான மக்கள் கோவிலுக்குச் செல்லுகின்றார்களோ அவ்வளவுக்கவ்வளவு மன்னனுக்கு வருவாய் அதிகம். இவ்வாறு ஏராளமான மக்களை இழுக்கும் பொருட்டு அக்காலத்தில் மேளதாளம், நாட்டியம் தாசிப்பெண்கள் முதலியவர்களையும் கோவிலில் வைத்தார்கள். அது மட்டுமன்றி அக்காலத்தில் யாரேனும், காணிக்கை போடக்கூடியவரைக் கோவிலுக்குள் செல்லக்கூடாதெனத் தடுத்தால் அவனுக்குத்தண்டனை விதிக்கப்படும்.

இது மட்டுமல்ல. கோவில் அர்ச்சனைக்குச் சென்ற ஜாதியார்கள் (அவர்கள் பிராமணர்கள் என்பது சந்தேகம்) விக்கிரக ஆராதனை செய்யும் காரணத்தாலும், கோவில் மான்யத்தினின்று வயிறு வளர்க்கும் காரணத்தாலும் வெகு இழிவானவர்களாகப் பார்ப்பனர்களால் கருதப்பட்டு வந்தனர். கோவில் சென்று வணங்கும் பார்ப்பனர்களே ஜாதியை இழந்தவர்கள் ஆகின்றார்கள். அவர்கள் தீண்டப்படாதவரைக் காட்டிலும் ஒரு விதத்திலும் உயர்ந்தவர்கள் அல்லர்; ஆதலால் ஆசிரியர் P. சிதம்பரம் அவர்கள் கூறுகின்றார்கள்:— "கோவில் செல்லும் பார்ப்பனன் பறையனிலும் உயர்ந்தவன் அல்லன். ஆகலால் எந்த எந்தக் கோவிலில் ஒரு பார்ப்பான் செல்லுகின்றானே அந்தக் கோவிலில் நிச்சயமாகத் தீண்டப்படாதவர்கள் நுழையலாம்." வேதம், சாஸ்திரம் இவைகள் கோவில் ஆராதனையை அங்கீகரிப்பவை அல்ல. அவற்றை அனுஷ்டிக்கும் ஸ்மார்த்தப் பிராமணர்களும் கோவிலுக்குள் போகக்கூடாது. போனால் சாதியை இழந்தவர்கள் ஆவார்கள். எனவே கோவில் நுழைவு முதலிய விஷயங்களைப்பற்றி விதிக்கும் நூல், சாஸ்திரங்கள் ஒருபோதும் ஆகா. அவைகள் ஆகமங்களே யாகும். இதை ஐகோர்ட்டிலும் பிரிவி கௌன்சிலிலும் அங்கீகரித்துள்ளார்கள்.

வேத சாஸ்திரங்கள் இருபிறப்பாளருக்குத்தான் உரியன. ஆகமங்களோ ஜாதிவித்தியாசம் பாராட்டாமல் இந்துக்கள் அனைவருக்கும் உரியவை. ஆகமங்களின்படி தீண்டப்படாதவர்களும்

கூட சிவ தீட்சை பெறும் மாத்திரத்தில் எந்தக்கோவிலுக்குள் ளும் நுழையலாம். எனவே ஆகமங்கள் விதிப்படி நம் கோவில் களில் இந்து என்பவன் யாராயினும் நுழையலாம்.

இவ்விடத்தில் "இந்து" என்பவனுக்கு இலக்கணம் என்ன என்று ஆசிரியர் ஆராய்கின்றார். ஆனால் நிரந்தரமான நிச்சய மான தொன்றும் இல்லாததால், அவர் முகம்மதியனையும், கிறிஸ் துவனையும், பௌத்தனையும் இல்லாத இந்தியன் "இந்து" என்று ஒருவாறு இலக்கணம் கூறியுள்ளார்.

மற்றும் கோவில்களின் பரிபாலனம் முழுவதும் 1863-வது ஆண்டுவரையில் இந்து முகமதிய கிறிஸ்தவ அரசாங்கத்தின் கையிற்றான் ஆதியிலிருந்த முறையே இருந்து வந்துள்ளது. 1817-வது வருடச் சட்டப்படி பிரிட்டிஷ் அரசாங்கம் தனது பார்வையில் ரிவின்யு போர்டார் மூலம் எல்லாக்கோவில்களை யும் நடத்தி வந்தது மின்னியில் சுமார் இரண்டு கோடி ரூபா வருடாவருடம் அவற்றின் மூலம் வருமானம் பெற்று அதைப் பொதுச் செலவும் செய்து வந்துள்ளது. அதன்பின் கிறிஸ் துவப் பாதிரிகளின் கிளர்ச்சிக்கு இணங்கி அரசாங்கம் 1863-வது வருடம் அந்தந்த மதக்காரரிடம் அவ்வக்கோவிலை ஒப்ப டைத்து விட்டது. அரசாங்கம் அப்போது "டிரஸ்டி"க்கு அளித்த அதிகாரம் கோவில் நிர்வாகத்தைப் பற்றி மட்டுமே தவிர, யாரை விடுவது யாரை விலக்குவது என்பது ஒன் றைப்பற்றியும் இல்லவே இல்லை. மீண்டும் வேண்டும்போது அரசாங்கம் இதில் தலையிட்டாலும் நியாயத்தோடு நில்லாமல் சட் டப்படிக்கும் "பண்டைய வழக்கப்"படிக்கும் ஒத்ததாகும். இவ்விஷயத்தோடு ஆகமங்களின் விதியையும் ஒத்துப்பார்த்தால் இந்துமக்கள் யாவருக்கும் எந்தப்பொதுக் கோவிலிலும் செல்ல உரிமையுண்டு என்பது விளங்காமல் போகாது.

மற்றும் திருவனந்தபுரத்தில் நடந்த பல ஜாதிச்சண்டை களைப் பற்றியும் வியவகாரங்களைப்பற்றியும் இன்னும் பல அரிய ருசிகரமான விஷயங்களைப் பற்றியும் தோழர். பி. சிதம்பரம்

அவர்கள் அழகாகவும் விரிவாகவும் எழுதியுள்ளார். அவற்றில் சில பாகம் சட்டப்பயிற்சியில்லாத சாதாரண மனிதர்களுக்கு சற்று ருசியற்றதாய் தோன்றினலும், அவற்ருேடு கலந்து விளங்கும் அபே டூபாய்ஸ் முதலிய ஐரோப்பியர்களுடைய மேற்கோள்கள் வெகு ருசிகரமாக இருக்கும் என்பதிற் சந்தேகமே இல்லை.

கோவிலைப்பற்றியே கவலை கொள்ளாத நம்போன்ற சுயமரியாதைக்காரர்களுக்கு ஆசிரியர் எடுத்துக்கொண்ட பிரயாசை அவ்வளவும் வீண் என்று தோன்றினலும் தோன்றலாம். ஆனல் இவ்வளவு ஆராய்ச்சியையும் படித்த எந்த அரசாங்க அதிகாரியும், அகங்காரப் பார்ப்பன வழக்கறிஞனும், எந்த ஜாதிக் கர்வக் காரனும், கோவில் நுழைவின் உரிமையைப் பற்றிக் கிஞ்சிற்றும் சந்தேகம் என்பதே கொள்ள மாட்டான். சாந்திகள் பலர் இதற்காகப் பட்டினி கிடந்தனர்; பலர் சத்தியாக்கிரகம் செய்தனர்; பலர் வாதாடினர்; பலர் சட்ட சபைக்குச் சென்றனர்; ஒரு மசோதாவும் இப்பொழுது அங்கு இருக்கிறது. அதைப்பற்றி மக்களின் அபிப்பிராயத்தைத் தெரிய அரசாங்கம் பல சங்கங்களுக்கும் பிரமுகர்களுக்கும் வேண்டுகோள் அனுப்பியுள்ளது. இத்தருவாயில் இத்தகைய ஓர் ஆராய்ச்சிக் களஞ்சியமும், தர்க்க விருந்தும் ஆன நூல் அவர்கள் கையில் கிடைக்குமேல் அறிவுள்ள மக்கள் அனைவரும் கோவில் நுழைவிற்குச் சாதகமாக அபிப்பிராயம் அளிப்பர் என்று நிச்சயமாகச் சொல்லலாம். ஆங்கிலம் தெரிந்தவர்கள் ஒவ்வொருவருமேயன்றி அரசாங்கத்தாரும் சட்டசபைகளின் அங்கத்தினர் ஒவ்வொருவரும், வழக்கறிஞர் ஒவ்வொருவரும், சீர்திருத்தக்காரர் ஒவ்வொருவரும், இன்னும் கூறவேண்டுமானல் இந்தியர் ஒவ்வொருவரும் தோழர் சிதம்பரம் அவர்கள் இயற்றியுள்ள இந்த நூலைக் கட்டாயம் வாங்கிப் படிப்பதன்னியில் தம் கையிலும் வீட்டிலும் வைத்திருத்தல் மிகவும் அவசியம் என நம்புகிருேம். தற்காலம் நமது தேசம் முழுவதும் நடந்து வரும் கோவில் நுழைவுப் போரில் பலர் தம் பலம் முழுவதும் கொண்டு சண்டை செய்த போதிலும், நம் தோழர் சிதம்பரம் அவர்களது ஆயுதமே மிகவும் சக்தியுடையதும் வெற்றியளிப்பதும் ஆகும்.

இறுதியாக இந்த நூலின் ஆராய்ச்சியையும் ருசிதரும்படியும் விஷயங்களையும் தமிழ் மக்களும் படித்துத் தெளிக்கும் பொருட்டு இது தமிழில் மொழிபெயர்க்கப்படின் அது ஒரு பேருபகாரமாக இருக்கும் என்று அபிப்பிராயப்படுகிறோம்.

ஈ. வெ. ராமசுவாமி.

# முன்னுரை.

இந்நூலின் சில பகுதிகள், ஈரோடு தோழர் E. V. ராமசுவாமி அவர்கள் நடத்தி வந்த "ரிவோல்ட்" (Revolt) என்னும் ஆங்கிலப் பத்திரிகையில் ஆரம்பத்தில் வெளி வந்தன. அப்பொழுதே 'குடி அரசு'வில் மொழி பெயர்த்து வெளியிடக் கருதியும், அது நடைபெறாமல் போய்விட்டது. இது 1929-வது வருஷத்திலாகும்.

பின்னர், மகாத்மா காந்தி அவர்கள் ஆலயப்பிரவேச விஷயமாகத் தீவிர முயற்சி யெடுத்தபோது, இக் காரியத்தைச் சமாளிப்பதற்காகத் திருவிதாங்கூர் அரசாங்கத்தார் அவசரமாக ஒரு கமிற்றியை ஏற்படுத்தினார்கள். அக் கமிற்றியாரது அறிக்கை வெளிவரு முன்னர் இந் நூலை வெளியிட வேண்டுமென்பதாகப் பல நண்பர்கள் கேட்டுக்கொண்டதின் மேல், நானும் அவசரமாகப் பல குறைகளுடன் வெளியிட நேரிட்டது.

வைக்கம் சத்தியாக்கிரகத்தின் போதும், அதன் பின்னர், சுசீந்திரத்தில் சத்தியாக்கிரகம் இருமுறை நடந்தபோதும், நான் நேரிற்கண்ட அனுபவங்களை மேற்கொண்டும், ஈரோட்டில் நடைபெற்ற மாகாண சுயமரியாதை மகாநாட்டில் ஏற்படுத்தப்பட்ட கமிட்டியார், சுசீந்திரம் சத்தியாக்கிரகத்தைக் குறித்து ரிப்போர்ட்டு செய்யும்படி என்னைக் கேட்டுக் கொண்டதை மேற்கொண்டும், அதற்குப் பின்னர், கோர்ட்டுகளில் ஏற்பட்ட அனுபவங்களைக்கொண்டும் நான் இந்த நூலைத் தொகுக்க நேர்ந்தது.

இந் நூலுக்குத் தோழர் E. V. ராமசுவாமி அவர்கள் ஒரு முகவுரை நல்கியதுமன்றி, வேறு பலவிதமான உதவிகளும் செய்தார்கள்.

இந் நூல் ஆங்கிலத்தில் வெளியானபோது, இந்தியாவிலுள்ள பல பத்திரிகைகளுக்கும் பெரியார்களுக்கும் பரிசீலனை (Review) செய்வதற்காக அனுப்பிக் கொடுத்தேன். இதில் ஒருவராவது

மாறுபட்ட அபிப்பிராயம் கூறவில்லை. ஆனால் 'ஹிந்து' பத்திரிகையில் கனம் T. R. வேங்கட்டராம சாஸ்திரியார் அவர்கள் நீண்டதோர் விபாசமெழுதிக் கண்டனம் செய்தார்கள்; கோபித்தார்கள். மாப்பிள்ளை அடித்தான் என்று கோபப்படவில்லை; ஆனால், மாமியார் பார்த்துச் சிரித்தாள் என்பதற்குக் கோபித்ததுபோல, சுயமரியாதை இபக்கத்தைச் சேர்ந்தவன் எழுதினான் என்பதே அவர்களது கோபம்.

பம்பாய் நகரில், உண்மைக் காங்கிரஸ் பத்திரிகையாக நிலவி வரும், 'பம்பாய் கிரானிக்கிள்' (Bombay Chronicle) என்ற பத்திரிகை இப் புத்தகத்தைக் குறித்து நீண்டதோர் மதிப்புரை வரைந்து அடியில் வருமாறு புகழ்ந்திருக்கிறது:—

> இந்நூல் அறிவுக்குப் பெரு விருந்து என்பதில் சந்தேகமில்லை. பெரிய ஆராய்ச்சித்திறன் இதற்குச் சிறப்பளிக்கின்றது. இனிய முறையில் போதனையளிக்கத்தக்கதாக, ஒவ்வொரு அத்தியாயத்திலும் பல முக்கியமான, ஆராய்ச்சிக்குரித்தான விஷயங்கள் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கப்பட்டிருக்கின்றன.........பொதுவாக ஹரிஜன முன்னேற்றத்துக்காகவும், சிறப்பாக, இந்திய சட்டசபை முன்னிருக்கும் ஆலயப்பிரவேச மசோதா குறித்துள்ள பொதுஜன அபிப்பிராயத்தை அறியவும், அவ் விஷயத்தில் பொதுஜனங்களுக்கு வழி காட்டவும், மகாத்மா காந்தி அவர்கள் இப்பொழுதும் தென்னிந்தியாவில் சுற்றுப்பிரயாணஞ் செய்துகொண்டிருப்பதால், இப் புத்தகம் தக்கசமயத்திலேயேவெளிவந்திருக்கின்றது. பொது ஸ்தாபனங்களுடையவும், பொதுஜனத் தலைவர்களுடையவும் அபிப்பிராயங்களைத் தெரிவிக்குமாறு அரசாங்கத்தார் கேட்டிருக்கின்றார்கள். அறிவுக் களஞ்சியமாகவும், தர்க்க சாஸ்திர விருந்தாகவும் விளங்கும் இந்நூல், ஆலயப்பிரவேச மசோதா சம்பந்தமாகத் தங்கள் தங்கள் அபிப்பிராயங்களைத் தெரிவிக்க விரும்புபவர்களுக்கும், இந்திய அரசாங்கத்துக்கும், பேருதவியளிக்குமென்பதிலையமில்லை. முக்கியமாக அரசாங்க உத்யோகஸ்தர்கள் ஒவ்வொருவரிடமும் இப் புத்தகம் இருக்கவேண்டியது அவசியமாகும்......................

மிக்க கவனமாகவும், சாமர்த்தியமாகவும் இந் நூல் எழுதப் பட்டிருக்கிறது. (பம்பாய் கிராணிக்கிள் 14—1—34)

கல்கத்தா ஸர். P. C. ராய் அவர்கள் இந் நூலைப் படித்து விட்டு அடியில் வருமாறு குறிப்பிட்டுள்ளார்கள்:—

"சட்ட விஷயங்கள் சம்பந்தமாகவும், சாஸ்திரவிதிகள் சம்பந்தமாகவும் இந்நூலாசிரியர் அடைந்துள்ள அபரிமிதமான ஞானம் மிகுந்த ஆச்சரியத்தைக் கொடுக்கின்றது. இந்நூல் தக்க சமயத்தில் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. முன்னேறிச் செல்லும் கருத்துக்களைக் கல்வியறிவு பெற்ற எந்த மனிதனும் எவ்வாறு எதிர்க்க முடியுமென்பதுபற்றி நான் அதிசயிக்கின்றேன். இந்த நூலின் மூலம் ஒவ்வொரு இந்துவுக்கும் ஆலயப் பிரவேச உரிமை உண்டு என்பதை நீங்கள் நிலை நிறுத்தியிருக்கின்றீர்கள்."

தாழ்த்தப்பட்ட வகுப்பாரின் பிரதிநிதியாக வட்டமேஜை மகாநாட்டிற்குச் சென்றிருந்த பம்பாய், டாக்டர் அம்பட்கார் அவர்கள் இந் நூலைக் குறித்து அடியிற் கண்ட அபிப்பிராயம் தெரிவித்துள்ளார்கள்:—

"உங்களுடைய நூல் மிகவும் ருசிகரமானதாக இருக்கிறது. ஆலய வணக்கம் எவ்வாறு எப்பொழுது ஏற்பட்டது என்பதைப்பற்றிக் குறிப்பிடும் பாகங்கள் மிகவும் போதனை யளிப்பதாக இருக்கின்றன..................இந்தியர்களை ஒற்றுமைப்படுத்தல் என்ற பிரச்னையையோ, தீண்டாமையை ஒழிக்கும் பிரச்னையையோ, ஆலய நுழைவு தீர்க்கும் என நான் கருதவில்லை. ஆனால் மேற்குறித்த பிரச்னைகளை அது தீர்க்கும் எனக்கருதுகிறவர்களுக்கு உங்களுடைய ஆராய்ச்சி மிகவும் பயன் படுமென நான் நம்புகிறேன்."

நான் சைவர்களைப் பற்றிப் பல இடங்களிலும் கண்டித்திருக்கின்றேன். அங்ஙன மிருந்தும், சுவாமி வேதாசலம் அவர்களுக்கும், திரு. K. சுப்பிரமணிய பிள்ளை அவர்களுக்கும் இந் நூலை அனுப்பினேன். தமிழுலகில் இவ் விருவரை விட சைவப்பற்றிலும், ஆராய்ச்சியிலும் மேம்பட்டவர் மிகச் சிலரே; மிகச் சிலரும் உண்டோ வென்பது எனக்குச் சந்தேகந்தான்.

சுவாமி வேதாசலம் அவர்கள் இந்நூலைப் பற்றி அடியிற்கண்டவாறு எழுதியனுப்பினார்கள்:—

"இந் நூல் காலத்தின் தேவைக் கேற்ற நூலாகும்............... இந்த முக்கிய நூலைத் தமிழில் மொழி பெயர்த்து வெளியிடக் கூடாதா?

திரு. K. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் பார்ப்பன வழக்கறிஞர்கள் மலிந்து கிடக்கும் சென்னை மாகாணத்திலிருந்து முதன் முதலாகத்தெரிந்தெடுக்கப்பட்ட தாகூர் சட்ட விரிவுரையாளராகும். இந் நூலைக் குறித்துள்ள அவர்களது அபிப்பிராயம் அடியில் வருமாறு:—

"ஆலயப் பிரவேச உரிமை பற்றிய திரு. P. சிதம்பரம் பிள்ளை அவர்களது நூல், ஆலய நுழைவுப் பிரச்னை சம்பந்தமாக அழியாப் புகழ்பெறும் நூலாகும். சரித்திர ரீதியாகவும், சட்ட ரீதியாகவும் இவ் விஷயம் மிக விரிவாக இந் நூலில் விவாதிக்கப்பட்டிருக்கிறது........................மத விஷயத்தில் இக் நூலாசிரியருக்குள்ள அசிரத்தையையும், சாதிப் பெருமைகளிலுள்ள வெறுப்பையும் சிலர் உணரக் கூடும். ஆனால் அவர்கள் தமது ஆராய்ச்சிகளின் முடிபுகளைத் தொகுத்து இந் நூலில் பயன் படுத்தியிருப்பதற்கு இந்து சமூகம் அவர்களுக்குப் பெரிதுங் கடமைப்பட்டிருக்கின்றது என்பதை யாரும் மறுக்க முடியாது."

இவ்வாறு பல அறிஞர்களால் பாராட்டிப் புகழப்பட்டுள்ள இந் நூலை, ஒரு பார்ப்பன வக்கில், ஒரு பார்ப்பனப் பத்திரிகையில் கண்டனம் செய்தது ஏன் என்று அறிய ஆசையுடையவர்கள் இப் புத்தகத்தை வாசித்து நான் குறிப்பிட்டிருப்பது சரியல்லவென்று எனக்குத் தெரியப்படுத்தினால், அதைச் சந்தோஷத்துடன் வரவேற்று இனியொரு பதிப்பு ஏற்படுமாகில் அதில் சரிப்படுத்திக் கொள்ளவுந் தயாராயிருக்கிறேன். ஏதோ சுயமரியாதைக்காரன் எழுதி விட்டான் என்று கனம் சாஸ்திரியார் அவர்களைப்போல தள்ளி விடாது, உண்மையை அனைவரும் அறிய வேண்டும் என்ற ஆவலுடன் எழுதியிருக்கின்றேன் என்ற உப

ரிய நோக்கத்தோடு இப் புத்தகத்தைப் பார்வையிடும்படி மிக வணக்கத்துடன் கேட்டுக் கொள்கின்றேன்.

பல வேலைகளுக்கும் நடுவே இம்மொழி பெயர்ப்பும் நடைபெற்றது. நாம் நடத்திவரும் 'தமிழன்' பத்திரிகையின் உதவி ஆசிரியர் தோழர் A. சுப்பையா அவர்களது பெருகவியின் பேரில் இந்த நூல் தமிழில் வெளிவந்துள்ளது. அவர்களுக்கு என் வந்தனத்தைச் செலுத்திக் கொள்கின்றேன். இரண்டாவது பாகம் கூடிய சீக்கிரத்தில் வெளிவரக் கூடும்.

நான் முன்னர் வெளியிட்ட ஆங்கில நூலுக்குத் தோழர் E. V. ராமசுவாமி அவர்கள் நல்கிய முகவுரையை இதிலும் முகவுரையாகச் சேர்த்திருக்கிறேன். இந் நூலைப் பிரசுரிப்பதில் எனக்கு உதவி புரிந்த அனைவருக்கும் எனது நன்றி உரித்தாகுக.

# ஆலயப் பிரவேச உரிமை.

## அத்தியாயம் 1.

"இந்து" என்று சொல்லப்படுகின்றவர் ஒவ்வொருவருக்கும் — அவர் தீண்டத்தக்கவராகவோ தகாதவராகவோ இருப்பினும், அல்லது எந்தச் சாதியிலும் சேர்ந்தவராகவோ, சேராதவராகவோ இருப்பினும் — தம்மைப்போல் கடவுள் வழிபாட்டிற்கு வரும் பிறருக்கு உபத்திரவம் எதுவும் ஏற்படாத முறையில், பொதுக் கோவில்களில் பிரவேசிப்பதற்கும், அங்கு பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கும் கடவுள் விக்கிரகங்களை வணங்குவதற்கும் உரிமையுண்டு என்பதில் சந்தேகமில்லை. இதில் ஏதாவது கட்டுப்பாடு உண்டானால், தம்மைப்போல் கடவுள் வழிபாட்டிற்குவரும் ஏனையோர்களுக்கு உபத்திரவம் எதுவும் உண்டுபண்ணக்கூடாது என்பதொன்றுமட்டுந்தான். சட்டம் இதற்கிடங் கொடுக்கிறது; இதற்கு மாறுபாடாக வேறு சட்டமில்லை. சட்டம் இவ்வாறில்லையென்று யாராவது சொன்னால் அவருக்கு அதைப்பற்றி ஒன்றுந் தெரியாது என்றுதான் சொல்லவேண்டும்.

பொதுவாக, வழக்கறிஞர்களைப் பழமை விரும்பிகள் என்று மட்டுமல்லாமல் காரணமற்றவர்கள் என்றும் அடிக்கடி சொல்வதுண்டு. அவர்களைக் காரணமற்றவர்கள் என்று சொல்வது முழுமையும் சரியாக இல்லாமற்போனாலும், அவர்கள் கைக்கொண்டுள்ள சட்டம் பகுத்தறிவில்லாதது என்பதற்கு யாதொரு சந்தேகமுமில்லை. மந்திரவாதி தனது ஜால வித்தையைக்கொண்டு பிழைப்பதுபோல, வக்கீலும் தனது சட்டத்தைக் கொண்டு காலங் கழிக்கின்றான்.

சட்டத்தின் நிச்சயமற்ற தன்மையே அதன் பெருமையாகும். அதோடுகூட சட்டம் நியாயமற்றதாகவும், தர்க்க சாஸ்திரத்துக்கு விரோதமாகவுமிருக்கின்றது. முக்கியமாக சாதாரண ஜனங்

களுக்காகவே இந் நூல் எழுதப்படுகின்றது. வரிசையாகக் கோர்ட்டுத் தீர்ப்புகளை மேற்கோள் காட்டி, அவை சகல பிரச்னைகளையும் எக் காலத்துக்கும் தீர்த்துவிட்டதாக வக்கீல்கள் பூச்சாண்டி காட்டி சாதாரண மக்களைப் பயமுறுத்துவதுமுண்டு. ஆகையினல், கோர்ட்டுத் தீர்ப்பு என்பது என்ன, எந்தப் பொதுப் பிரச்னையையுந் தீர்க்கும் விஷயத்தில் அது எவ்வளவு தூரம் பயன்படும் என்பதையும் குறிப்பிடுவது நலமாகும். "ஒரு வழக்கானது அதில் என்ன தீர்மானிக்கப்படுகின்றதோ அதற்கு மட்டுமே அத்தாட்சியாகும். தர்க்க ரீதியாக அதிலிருந்து அனுமானிக்கக்கூடிய ஒன்றிற்கு அதை அத்தாட்சியாக எடுத்துக் காட்டமுடியுமென்பதை நான் முற்றும் மறுக்கிறேன். அவ்விதம் அத்தாட்சியாக எடுத்துக் காட்டமுடியுமென்று நினைப்பது சட்டம் நியாயத்தையொட்டியது தான் என்று கருதியேயாகும். உண்மை அப்படியல்ல; ஏனெனில் சட்டம் எப்பொழுதும் தர்க்க சாஸ்திர முறையைத் தழுவியதேயல்லவென்பதை ஒவ்வொரு வழக்கறிஞரும் ஒப்புக்கொண்டே தீர வேண்டும்" என்று இங்கிலாந்தில் உயர்தர நீதிபதியாயிருந்த லார்டு ஹால்ஸ்பரி என்பார் சொல்லியிருக்கின்றார். எளிதில் ஒரு முடிவுக்கு வர இயலாத சிக்கலான விஷயங்கள் வரும்பொழுது, நீதிபதிகள் இந்த அபிப்பிராயத்தையே தமக்குத் தஞ்சமாக நினைத்துக் கொண்டிருக்கின்றார்கள். நியாயவிசாரணைசெய்வது அதிகக்கஷ்டமாக இருக்கும்போதும்—அடிக்கடி அவ்வாறேயிருக்கின்றது—தனித்த மனப்பான்மை சட்டத்தினுள்புகும்போதும், சட்டம் எவ்விதத்திலும் தர்க்க சாஸ்திர முறைக்கு முரண்பட்டதாகவேயிருக்கின்றது; ஒவ்வொரு வக்கீலுக்கும் இது தெரிந்த விஷயந்தான்.

இந்த உண்மையை மனத்திலிருத்திக்கொண்டு, இந்துக்களென்றும், இந்து சட்டத்திற்குட்பட்டவர்களென்றும் கருதப்படுகிற தாழ்த்தப்பட்டவர்களென்போரையும், தீண்டத்தகாதவரென்போரையும் பொதுக்கோவில்களில் நுழையவிடாதபடி தடுக்க, சட்டத்திற்குப் பொருத்தமான காரணங்கள் ஏதாவது இருக்கின்றதா என்று ஆராய்வோம்.

பாமர மக்களை ஏமாற்றுவதற்காக வக்கீல்கள் "பண்டைக் காலத்துப் பழக்க வழக்கம்" என்ற பித்தலாட்டத்தைக் கையாள்

வதுண்டு. ஒரு தலைப் பட்சமாகத் தோன்றிய பொய்ச் சாட்சியத்தைச் சுயநலத்தைக் கருதி ஞாபகமூட்டுவது என்பதுதான் இதன் அர்த்தமாகும். இதுதான் பழக்க வழக்கம்.

ஆனால் வக்கீல் சரியான மனோநிலையிலிருக்கும்போது கேட்டால், பொதுக் கோவில், பொது ரஸ்தா இவைகளைப்பற்றிய விஷயத்தில் ஞாபகத்துக்கு எட்டக்கூடிய அல்லது எட்டாத பழக்க வழக்கத்தைக் குறித்து விசாரணை செய்யவேண்டிய தேவையேயில்லையென்று சொல்வார். அது ஒரு பொதுக் கோவிலாகவோ, ரஸ்தாவாகவோ இருந்தால், எவ்வாறு அல்லது ஏன் அந்தக் கோவில் பொதுவாயிற்று என்பதைப்பற்றி ஆராய்ச்சி செய்வது சரித்திரக்காரரைப் பொறுத்த விஷயமேயன்றி, வழக்கறிஞனையோ, நீதிபதியையோ ஒரு பொழுதும் பொறுத்ததல்ல. இத்தகைய கஷ்டமான ஆராய்ச்சியிலிறங்க வழக்கறிஞரும் நீதிபதிகளும் ஆயத்தமாயில்லை.

ஒரு கோவிலில் நடைபெற்றுவரும் தற்காலமுறையிலிருந்து, 'பழக்கவழக்க'த்திலிருந்து, அந்தக்கோவிலை 'அமைத்தவரின் உத்தேசம்' என்னவென்பதை அனுமானிக்கலாமென பெயர்பெற்ற நீதிபதிகள் சில சமயங்களிற் சொல்லுகின்றார்கள். இது, முழுத் தவறுதல் ஆகும். பொதுக்கோவில்கள் சம்பந்தப்பட்டவரையிலும் இந்த அபிப்பிராயம் சரியானதல்ல.

ஒருக்கால், ஒரு சாதியாரால் அல்லது ஒரு வகுப்பாரால் ஏற்படுத்தப்பட்ட கோயில்களுக்கு இது பொருத்தமாகவிருக்கலாம்; ஆனால் பொதுக்கோவில்களுக்கு இது பொருத்தமாகாது. ஸ்மார்த்தப் பிராமணர்கள், தாங்களாகத் தங்கள் சாதிக்காக முன் காலத்தில் ஒரு கோவிலைக் கட்டினதாக வைத்துக்கொள்ளுவோம். ஏதாவது ஒரு காரணத்தை முன்னிட்டு, அந்தக்கோவிலை 'அமைத்தவரின் நோக்கம்' என்னவென்பதாகத் தீர்மானிக்கவேண்டிய அவசியம் நேரிட்டால், கடந்த வருடங்களில் நடந்துவந்ததிலிருந்தும், இப்பொழுது நடந்து வருவதினின்றும், அது அக்காலத்தில் எவ்வாறிருந்திருக்குமென ஓரளவு ஒருவேளை அறியக்கூடும். இது பகுத்தறிவுக்குப் பொருத்தமாகவும், யாரும் உணரக்கூடிய நிலை

யிலுமிருக்கின்றது. ஸ்தாபித்தவரின் 'உட்கருத்தை'க் கண்டு பிடிக்குமுன், கோவிலை 'ஸ்தாபித்தவர்' யார் என்பதை நாம் திட்டமாக அறிந்துகொள்ளவேண்டுமல்லவா? சுருங்கச் சொல்லுமிடத்து, ஒரு கோவிலை 'ஸ்தாபித்தவர்' இன்னார் என்பதையே அறியாமலிருக்கும்போது, அவரது 'உத்தேசத்தையோ' அல்லது அந்தக்கோவிலின் பழக்கவழக்கத்தையோ குறித்து விசாரணை செய்ய இடமில்லை.

உதாரணமாக, ஒரு காலத்தில் தென்னாட்டுச் சமண மன்னர் ஒருவரால் ஸ்தாபிக்கப்பட்ட சமணக்கோவில் என்று மிகத் திட்டமாகத் தெரிந்த கோவிலை இன்று பார்ப்பனரும் பார்ப்பனரல்லாத உயர் சாதி இந்துக்களும் கொண்டாடிவருகின்றார்கள் என்று வைத்துக்கொள்வோம். இந்நிலையில் இந்தக்கோவில் விஷயமாகத் தற்காலம் நடைபெற்றுவரும் 'பழக்கவழக்க'த்தைக் கொண்டோ, இதற்குமுன் நெடுங்காலமாக நடைபெற்றுவந்ததாகக் கருதக்கூடிய இடைக்காலப் பழக்கவழக்கத்தைக்கொண்டோ, எந்த நீதிபதியும்—அவர் எவ்வகுப்பையோ, சாதியையோ சேர்ந்தவராக இருப்பினும், அல்லது அவர் எவ்வளவு உயர்ந்த அறிவாளியாயிருப்பினும்—சரியான முடிவுக்கு வரமுடியாது. அதாவது, இன்றையதினம் ஒரு இந்துப்பொதுக்கோவிலை யாரெல்லாம் பரிபாலனஞ்செய்துவருகின்றார்களோ, அவர்கள் எந்த சாதியினர் என்பதிலிருந்து, அந்தக்கோவிலை ஸ்தாபித்தவர் யாரென்பதைக் கண்டுகொள்ளமுடியாது என்பதாகும். இதற்கு உதாரணமாக நாகர்கோவிலைச் சொல்லலாம்.

நாகர்கோவில் நகரத்துக்குப் பெயரளிக்கும் இந்தக் கோவிலானது கடந்த இருநூற்றைம்பது வருஷங்களுக்கு முன்னால் வரையிலும் நாகராஜாவுக்குக் கட்டப்பட்ட "மிக முக்கியமான சமணக் கோவிலாகவேயிருந்துவந்தது". அதற்குப் பின்னால் அது "தோற்றத்திலும், வழிபாட்டு முறையிலும் திட்டமாக இந்துக் கோவிலாக மாறிவிட்டதெனத் தெரிகிறது" என்று துரைத்தன சிலாசாசன ஆராய்ச்சியாளர் கூறுகின்றார்.

சமீபகாலம்வரை சமணகோவில் பூசாரிகளுக்குச்சொந்தமான இரு சமண வீடுகள் இந்தக்கோவிலின் தென்புறத்திலிருந்து வந்தன. நாகர்கோவிலில் ஒருகாலத்தில் ஏராளமான சமணர்கள் குடியேறியிருந்திருக்கவேண்டும் என்று இதினின்றும் தெரியவருகிறது. மேல்குறிப்பிட்ட இரண்டு வீடுகளிலும் வசித்து வந்த ஆடவர்கள் இறந்துபோகவே, பூசாரிவீட்டுப்பெண்கள் தங்கள் சுற்றத்தாரிடம் ஓடிவிட்டதாகவும், உடன் பூசாரிவீட்டு மடங்களை நம்பூதிரிப் பார்ப்பனர்கள் கையில் ஒப்படைத்ததாகவும், சமணக்கோவிலை இந்துக்கோவிலாக மாற்றினதாகவும், அப்பொழுது பார்ப்பனர்களும், மற்ற ஜாதியினரும் அந்தக்கோவிலைச் சுற்றிக் குடியேறினதாகவும், சரித்திர ஆராய்ச்சிமூலம் தெரியவருகின்றது. கடைசியாக இந்த இந்துக்கோவில் திருவிதாங்கூர் ஸர்க்கார் ஆதீனத்திலும் வந்து 'இந்து'க் கோவிலாகவேயிருந்துவருகிறது. சமணப்பூசாரிகளுடைய வீடுகளிருந்தவிடத்தில் நம்பூதிரிப்பூசாரிகளுக்காகத் தனி வீடுகள் கட்டப்பட்டிருக்கின்றன. இன்றளவும் உயர்சாதி இந்துக்கள்மட்டுமே இந்தக்கோவிலுக்குள் பிரவேசிக்கலாம். எனினும், இந்தக் கோவிலுக்குள்ளிருக்கும் சமணக்கடவுள் ஆணு பெண்ணு, நாகராஜனு, நாகரம்மனு என்பதைப் பற்றி அங்கு சென்று வழிபடும் இந்துக்கள் இதுவரை முடிவு செய்யவில்லை.

சமணர்கள் சாதியற்றவர்கள். சாதியற்ற சமணர்கள் வசித்து வந்த இடம் பிராமண அக்கிரகாரமாக மாறிவிட்டது. இதோடு நிற்கவில்லை 1918-ம் வருஷம் யுத்த சமாதான விழா (Armistice Day Celebration) கொண்டாடும்பொருட்டு, யானைமீது சக்கிரவர்த்தியின் உருவப்படத்தை வைத்து ஜில்லா மாஜிஸ்திரேட் முதலிய உத்தியோகஸ்தர்களும், மற்ற பிரமுகர்களும் ஊர்வலம் வந்தபோது, சாதிபேதமற்ற சமணர்கள் முன்காலத்தில் வாழ்ந்தவிடத்தில் தோன்றிய இந்த பிராமணர் வீதியில் நுழைய முயலவும், ஊர்வலத்தில் தீண்டாதவர்களுமிருக்கின்றார்களென்ற காரணத்தால் பார்ப்பனர்கள் ஊர்வலத்தைத் தடுத்தார்கள். ஊர்வலம் நடைபெறவில்லை. உத்தியோகஸ்தர்களும், மற்றவர்களும் அவரவர் வீடுபோய்ச் சேர்ந்தனர். ஊர்வலத்தில் கலந்துகொண்ட நாடார் குலத்தைச்

சேர்ந்த கிறிஸ்தவர்கள் பெரிய பட்டங்கள் பெற்று உயர்ந்த பதவிகளை வகித்தபோதிலும், அவர்கள் தாழ்த்தப்பட்டவர்கள்தாமென எண்ணியே பார்ப்பனர் அவ்வாறு தடுத்தனர். சாதிபேதமற்ற சமணர்கள் ஒரு காலத்தில் வசித்துவந்த இடமல்லவா!

இந் நிலையில் நாம் கவனிக்கவேண்டியது என்னவென்றால், சமணக் கோவிலை இந்துக் கோவிலாகவும், சமணர் வசித்துவந்த வீதிகளைப்பார்ப்பனரும் உயர்சாதிக்காரரும் வசிக்கும் கிராமவீதிகளாகவும் மாற்றி, தாழ்த்தப்பட்டவர்கள்—இந்துக்களானலும்சரி, கிறிஸ்தவர்களானலும் சரி (முஸ்லிம்களாக மாறிவிட்டால் தடையொன்றுமில்லை)—இந்துக் கோவிலுக்குள்ளும், அதைச் சுற்றியுள்ள வீதிகள் வழியாகவும் போகாதபடி தடை செய்யப்படுகின்றார்களென்பதாகும்.

இவ்விதம் வேண்டுமானல் இரண்டு அல்லது மூன்று நூற்றாண்டுகளாக நடந்துவருவதாக வைத்துக்கொள்ளலாம். எனவே இப்பொழுது நடப்பிலிருக்கும் பழக்கவழக்கத்தைக் கொண்டு மட்டும் இந்தக்கோவில் இந்துக்கோவில் என்றோ, இந்தப்பூசாரி மடம் இந்துக்கள் மடமென்றோ, இந்த வீதிகள் பார்ப்பனர் வீதிகளென்றோ ஏற்பட நியாயமில்லை. சரித்திர ஆராய்ச்சியினல் இவ்வுண்மை வெளிப்படுகின்றது. ஆனல் கோர்ட்டில் வழக்கு ஏற்படும்பொழுது சரித்திர ஆராய்ச்சிக்கு அங்கு இடமில்லை; பழக்கவழக்கத்தையே பார்க்கின்றார்கள்.

ஆகையினல் ஒரு பொதுக் கோவிலின் ஸ்தாபன விஷயமாக ஒன்றுந் திட்டமாகத் தெரியாமல் இருக்கும்போது, அதை ஸ்தாபித்தவர் யார்? எப்பொழுது ஸ்தாபிக்கப்பட்டது? அவரது சாதி மதம், கொள்கையென்ன? அவரது உத்தேசத்தை விளக்கும் அறிகுறியேதேனும் விட்டுவைத்திருக்கிறாரா? அவர் ஒரு அரசரா? அல்லது குடியானவரா? அரசராயிருந்தால் பொதுஜனங்களுடைய பணத்தைச் செலவிட்டு ஸ்தாபித்தாரா? குடியானவராயிருந்தால் சமுதாயத்தார் அல்லது ஊரார் பணத்தைச் செலவிட்டாரா? இவற்றைப்பற்றியெல்லாம் ஒன்றுந் தெரியாமலிருக்கும்போது "பழக்க வழக்கத்தை"க்குறித்து ஆராய்ச்சி செய்வதும் தீர்ப்புச்

செய்வதும் அசட்டுத்தனமாகுமென்று பகுத்தறிவுக்குப் படுகின்றது. இதுதான் சட்ட முறையுமாகும். ஏனெனில் பிற்காலத்து நடவடிக்கையைக்கொண்டு முற்காலத்திற்கொண்ட உத்தேசத்தை ருசுப்பிக்க முயல்வது சட்டப்படி அர்த்தமற்ற செயலாகும்.

ஆகவே, பழைய இந்துப் பொதுக்கோவிலைப் பொறுத்தமட்டில், அதன் ஸ்தாபனத்தைப்பற்றி ஒன்றுமே தெரியாதிருக்கும் வரையிலும், 'ஆதிகாலப் பழக்க வழக்கம்' என்பதை சாட்சியமாக வைத்து நாம் எதையும் தெளிவுபடுத்த முடியாது என்று திட்டமாகச் சொல்லலாம்.

அப்படியானல், வக்கீல்களிடத்தும், வழக்கறிஞர்களிடத்தும் பண்டிதர்களிடத்தும், பெரிய நீதிபதிகளிடத்துங்கூட 'பழக்க வழக்க'மென்னும் மூட நம்பிக்கையானது குடிகொண்டிருப்பானேன்? சட்டசம்பந்தமாகவும் சரித்திர வாயிலாகவும் முழு விஷயத்தையும் ஆராய்ச்சிசெய்ய அவர்களுக்கு மனமில்லாததினலோ சக்தியில்லாததினலோ, அறியாமையினலோ அல்லது சாதி சமய உணர்ச்சியினலேற்படும் மனப்பான்மையினலோதான் இவ்வாறு ஏற்படுகின்றது.

பண்டைக்காலத்து இந்துப் பொதுக் கோவில் ஒவ்வொன்றிலும், ஒவ்வொரு இந்தியனுக்கும், இல்லாவிட்டால் ஒவ்வொரு இந்துவுக்கும்—அவர் உயர்ந்த சாதியிற் சேர்ந்தவராயினும் சரி, சேராதவராயினுஞ் சரி, தீண்டத்தக்கவராயிருப்பினுஞ் சரி, தீண்டத்தகாதவராயிருப்பினுஞ் சரி — நுழைவதற்கும் வணங்குவதற்கும் உரிமையுண்டு என்பதை மிகப் பணிவுடனும், அதேபோன்ற தைரியத்துடனும் கூறுகின்றேன். இத்தகைய கொள்கைதான் சரித்திரபூர்வமாகவும், மதக்கோட்பாடுகளின்படியும் நியாயமானதாக இருக்கமுடியும். ஒரு முஸ்லிமோ, கிறிஸ்தவரோ, ஆரிய சமாஜத்தைச் சேர்ந்தவரோ, பௌத்தரோ, சமணரோ, எம்மதத்தினராயினும் சரி, எவ் வகுப்பினராயினும் சரி, எச் சாதியினராயினும் சரி, எத்தேசத்தாராயினும் சரி, அவர் விரும்பினல் எக் கோவிலுக்குள்ளும் பிரவேசிக்கவும், வணங்கவும் அதிகாரமுண்டு. இது சில வைதீகப் பிடுங்கல்களுக்கு அதி தீவிரமான கொள்கை

யாகத் தோன்றலாம்; எனினும், இக் கோயில்களை ஸ்தாபித்த பெரியார்களின் பரந்த நோக்கம் இப்படித்தான் இருந்தது அல்லது இருந்திருக்கவேண்டும் என்று நான் கருதுகிறேன்.

—:o:—

## அத்தியாயம் 2.

சென்னை தர்ம ரக்ஷண சபையைச் சேர்ந்தவரும், 'மத ஸ்தாபனங்கள்' என்ற நூலை இயற்றிய பேராசிரியருமான திரு. P. R. கணபதி ஐயரவர்களை இந்துக் கோவில்களெல்லாம் சர்வ தேச சாதிமத சமரஸத் தன்மையுடையன (Cosmopolitan) என்பதாக ஒப்புக்கொண்டிருக்கிறார். "கிறிஸ்தவ ஆலயங்களையும், ஆங்கிலக் கோவில்களையும்போலல்லாமல், இந்துக்களுடைய ஆலயங்கள் அவர்களுடைய மதத்தைப்போலவே சர்வதேச, சாதிமத சமரஸத் தன்மையுடையவையா யிருக்கின்றன. கிறிஸ்தவ ஆலயங்களிலும், ஆங்கிலக் கோவில்களிலும் அந்தந்த இடங்களில் வசிப்பவர்கள் மட்டுமே தொழுவதற்கு உரிமையுண்டு; அவர்கள் அவ்வாறு தொழுவதற்குக் கடமைப்பட்டுமிருக்கிறார்களெனவுந் தோன்றுகிறது" என்று திரு. கணபதி ஐயரவர்கள் கூறினபோதிலும் அவரது சர்வதேசாபிமான சமரஸத் தன்மை கொஞ்சம் குறுகியதாகவே காணப்படுகிறது. ஏனெனில் அவரே "நான்கு சாதிகளையுஞ் சேர்ந்த இந்துக்களனைவர்க்கும் யாதொரு தட்டுத் தடையுமின்றி இந்துக் கோவில்களில் நுழைந்து வணங்க உரிமையுண்டென்பது வெளிப்படை"யென முடிக்கின்றார். இதுதான் அவரது சர்வதேசாபிமான சமரஸத் தன்மை! இதைப்பற்றி அதிகமாகப் பின்னால் கூறுவோம்.

சென்னை ஹைக்கோர்ட்டில் முதலாவது இந்தியன் ஜட்ஜியாக விருந்த காலஞ்சென்ற ஸர் டி. முத்துசுவாமி ஐயரவர்கள் "இந்துக் கோவில்கள், சில குறிப்பிட்ட பழக்க வழக்கங்களை ஒப்புக்கொள்ளும் சாதியார்களுக்காகவும், இந்த சமுதாயப் பிரிவினர்களுக்காகவும் ஸ்தாபிக்கப்பட்டுப் பரிபாலிக்கப்பட்டுவரும் ஸ்தாபனங்களாகும்" என்று அபிப்பிராயப்பட்டுள்ளார். இதிலிருந்து அவரு

டைய திட்டமான கருத்து என்னவென்பது நமக்கு வெளிப்படையாக விளங்கவில்லை. ஆனால் மற்றோரிடத்தில், மகமதியர், கீழ் சாதிக்காரர்கள் முதலியோர்களுடைய நன்மைக்காக இந்துக் கோவில்கள் ஸ்தாபிக்கப்படவுமில்லை, பரிபாலிக்கப்பட்டுவரவுமில்லை'' யென்று அவர் சொல்லியிருப்பதிலிருந்து அவரது கருத்து தெளிவாகின்றது.

அவருடைய அபிப்பிராயத்தைப் பரிசீலனை செய்யப்புகுமுன் ஒரு ஜட்ஜியென்ற நிலைமையில் அவரது பொது மனப்பான்மை என்னவென்பதைக்குறித்து கவனிப்போம்.

"ஸர். டி. முத்துசுவாமி ஐயரவர்கள் எப்பொழுதாவது ஒரு தூக்குத் தண்டனையை ஸ்திரப்படுத்தும்படி நேரிட்டால், வீடு சேர்ந்ததும் அவர் பிராயச்சித்தஞ் செய்துகொள்வார் என்று சொல்லப்படுவதுண்டு. ஒரு சமயம் அவரது வைதீகக் குருக்களுக்கு ஒரு கிரிமினல் வழக்கில் இருநூறு ரூபாய் அபராதம் போடவேண்டிவந்தது. ஜட்ஜி அவர்கள் வீடு சேர்ந்ததும், குருவுக்கு ஒரு மன்னிப்புக் கடிதம் எழுதி அதோடு இருநூறு ரூபாயும் அனுப்பிவைத்தார். இவ்வாறு இப் பெரியார், தான் ஒரு இந்துவென்ற ரீதியில் மதபக்தியுடனும், நீதிபதியென்ற முறையில் மனச் சாட்சிக்கு விரோதமில்லாமலும், சிஷ்யன் என்ற அளவில் பயபக்தியுடனும் தமது கடமையைச் செலுத்திவந்தார்'' என்று அவரைப் புகழ்ந்துரைக்கும் ஒருவர் எழுதியிருக்கிறார்.

நாலாவது ஹென்றி அரசர் காலத்தில் நிகழ்ந்த ஒரு சம்பவத்தை விக்மோர் என்பவர் குறிப்பிடுகிறார். சாட்சியத்தைக் கொண்டு ஒரு ஜட்ஜி ஒரு கைதியைத் தண்டித்தார்; ஆனால் தமது சொந்த அறிவில் அவன் குற்றவாளியல்லவென்று தெரிந்ததால் அரசரிடம் முறையிட்டு அவனை மன்னிக்கும்படி செய்தார். "ஒரு வழக்கில் சொந்த அனுபவத்தை உபயோகிக்காததால் அதன் முடிவு எவ்வளவு அசம்பாவிதமாகப் போய்விடக்கூடுமென்பது இந்த சம்பவத்தினின்றும் விளங்குகின்றது. கிராமப் பஞ்சாயத்தார்களை நீதிபதிகளாக நியமிக்கவேண்டுமென்று இதனாலேயே நாட்டில் கிளர்ச்சி செய்யப்படுகின்றது. வழக்கைப்பற்றியும், சாட்சிகளின்

குணங்களைப்பற்றியும் தங்களுக்கு நேராகத் தெரிந்தவற்றை அவர்கள் தீர்ப்புக்கு உபயோகப்படுத்தமுடியுமல்லவா? ஆனால் ஒரு நீதிபதி தமக்குத் திட்டமாகத் தெரிந்த ரகசிய விஷயங்களையாவது உபயோகித்துக்கொள்ள அனுமதிக்கப்படவேண்டியது அவசியம்; கட்சிகளிடம் தாம் அறிந்த விஷயங்களைச் சொல்லி, அவர்கள் ஆட்சேபிக்காதிருந்தால் மட்டுமே அவர் விசாரணைசெய்து தீர்ப்புச் சொல்லலாம்'' என்று ஜஸ்டிஸ் சதாசிவ அய்யாவர்கள் மற்றொரு சென்னைக் கேஸில் குறித்துள்ளார்.

நீதிமுறைப்படியும், பட்சபாதமின்றியும், மனச்சாட்சிக்கு நேர்மையாகவும் நியாயம் வழங்கவேண்டிய நீதிபதியென்னும் உயர்பதவி வகித்த ஜஸ்டிஸ் முத்துசுவாமி ஐயரவர்கள், ஒருவருக்கு மரண தண்டனை விதிப்பதினிமித்தம் மதக் கோட்பாடுகளைத் தாம் மீறிவிடுவதாகக்கருதி இந்துமதக்கொள்கைப்படி அதனாலேற்படும் பாவத்தைப் பிராயச்சித்தத்தின்மூலம் நிவர்த்தித்துக்கொண்டார். இதிலிருந்து அவர் தமது நீதிபதியென்ற உத்யோகத்தையும், மதத்தையும்பற்றி எவ்வாறு விசித்திரமான அபிப்பிராயங் கொண்டிருந்தாரென்பது வெளிப்படையாகும்.

இனி, தாழ்த்தப்பட்டவர்கட்காகவும், தீண்டாதார் முதலியோர்கட்காகவும் இந்துக் கோவில்கள் ஸ்தாபிக்கப்படவில்லையென்று கூறிய ஜஸ்டிஸ் முத்துசுவாமி ஐயரவர்களுடைய தீர்ப்பைக் கவனிப்போம். இதை நான் மறுக்கின்றேன். முதலாவது இவ்விதமாக இப்பெரியார் திருவாய் மலர்ந்தருளினதற்கு யாதொரு ஆதாரமுமில்லை. ஒருக்கால் ஸ்மார்த்த பார்ப்பனர்களால் ஸ்தாபிக்கப்பட்டதென்று ருசுப்பிக்கப்பட்ட கோவில் சம்பந்தப்பட்டவரையிலும் இக் கூற்று உண்மையாயிருக்கக்கூடும் என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன்; ஏனெனில் அவர்களுடைய குறுகிய மனப்பான்மையையும், மக்களைப் பிளவுபடுத்தும் மதக்கோட்பாட்டையும், ஆரிய சாதிப் பாகுபாட்டின் இழிவான தன்மையையும், தமிழ் நாட்டுப் பார்ப்பனர்களுடைய போலித் தன்மையையும், ஆரிய தெய்வங்களை மட்டும் பிரதிஷ்டை செய்வதையும், வேதங்களை மாத்திரம் பாராயணம் பண்ணுவதையும் இவைபோன்ற பலவற்றையும்

அவர்களுடைய ஸ்தாபனத்தில் நாம் நன்கு காண முடியும். பொதுப் பணத்திலிருந்து நிர்வகிக்கப்படும் வேத பாடசாலைகளும், பிராமண விதவா விடுதிகளும், சர்வதேசாபிமான பிராமணனுடைய தயாள குணத்துக்குத் தக்க சான்றுகளாக இன்றுமிருந்துவருகின்றனவன்றோ?

ஆனல், தென்னிந்தியாவில் ஸ்மார்த்தமும், பிராமணீயமுங்கூட தலைகாட்டுவதற்கு நெடுங்காலத்துக்கு முன்னர் தமிழ்நாட்டில் ஸ்தாபிக்கப்பட்ட நமது பண்டைப்பொதுக்கோவில்களைப்பொறுத்த மட்டிலும் ஜஸ்டிஸ் முத்துசுவாமி ஐயரவர்களுடைய கூற்று ஒரு பொழுதும் உண்மையாக இருக்கமுடியாது; அதை ஒருபொழுதும் அங்கீகரிக்கவும் முடியாது. அக்காலத்தில் நாடு முற்றும் புத்த, சமணக் கோவில்களும், மடங்களும் மலிந்து கிடந்தன; இம் மதங்கள் ஒவ்வொன்றும் போட்டி போட்டு ஆள் திரட்டிக்கொண்டிருக்கிருக்க வேண்டுமன்றோ? இந்தக் கோவில்களை ஸ்தாபித்த அரசர்கள் தாமே நிமிஷத்திற்குநிமிஷம் சைவத்திலிருந்து சமணத்திற்கும் சமணத்திலிருந்து பௌத்தத்திற்கும் தங்கள் இஷ்டம்போல் மதம் மாறிக்கொண்டிருந்தனர்; மதப்பொறுமையும், மதச் சுதந்திரமும் தாராளமாக நிலவி வந்தன. அக்காலத்தில் சாதிவித்தியாசம் தமிழ் நாட்டிலில்லை; அல்லது மெல்லமெல்ல தலைகாட்டத் தொடங்கிற்று என்று சொல்லலாம். ஆரியக் கடவுள்களுக்காகவன்றி, ராக்ஷஸர்கள், அசுரர்களென ஆரியர் மதித்த திராவிடத் தெய்வங்களுக்காகவே இந்தக் கோவில்கள் ஸ்தாபிக்கப்பட்டன. இந்தக் கோவில்களுக்குள் வேத சுலோகங்களைப் படிக்கக்கூடாது. கர்ப்பக் கிரகத்துக்குள் பார்ப்பான் நுழைந்தால் நாட்டிற்கும், அரசனுக்கும் கேடு விளையுமென்று நம்பப்பட்ட காலம். இவையெல்லாவற்றையும்விட மிக முக்கியமானவிஷயமென்னவென்றால், இந்தப்பொதுக் கோவில் வருமானமெல்லாம் பிராமணர் வயிற்றுக்குள் போகாமல் அரசன் பொக்கிஷத்தைச் சேர்ந்ததென்பதாகும். இத்தகைய காலத்தில் ஏற்பட்ட பொதுக்கோவில்கள்விஷயத்தில் கற்றறிந்த பிராமண நீதிபதியான ஜஸ்டிஸ் முத்துசுவாமி ஐயரவர்களின் கூற்றைப் பொருத்துவது மிகப் பெரிய அநீதியாகும் என்று நான் மிகப் பணிவுடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஒரு பிரபல இந்திய நீதிபதி 1929-ம் வருஷத்தில் அடியில் வருமாறு எழுதியுள்ளார்:—

"உயர்சாதிக்காரர்களுக்காகவே கோவில்கள் ஸ்தாபிக்கப்பட்டிருப்பதாகவும், நெடுங்காலமாக இந்த உயர் சாதிக்காரர்களனுபவித்துவந்த தனித்த உரிமைகளைப்பறிமுதல் செய்வது நியாயமாகவோ, சட்டத்திற்குப் பொருத்தமாகவோ இருக்காதென்பதாகவும் வாதிக்கப்படுகிறது. இருந்தாலும், தற்பொழுதுள்ள அமிதமான சாதிபேதமானது சமீபகாலத்தில்தான் தலைகாட்ட ஆரம்பித்திருக்கவேண்டுமெனக்கருதயிடமிருக்கிறது. பிராமணர்கள் கோவில்களை ஸ்தாபிப்பது மிகமிக அபூர்வமான சம்பவமாகும். தென்னிந்தியாவிலுள்ள கோவில்களில் மிகப்பெரும்பாலானவையும் சூத்திரமன்னர்களாலோ, அல்லது சூத்திரர்களுடைய தர்மங்களிலிருந்தோதான் கட்டப்பட்டிருக்கவேண்டும். திருவிழாக்காலங்களிலும், பூஜைகாலங்களிலும் திரட்டப்படும் காணிக்கைகளின் பெரும்பாகம், இன்று ஆலயவழிபாட்டினின்றும் தடைப்படுத்தப்பட்ட வகுப்பார்களாலேயே அளிக்கப்படுவதைக் காண்கின்றோம். இம்மாதிரி திரட்டப்பட்ட நிதியைக் கவனமாகப்பாதுகாத்து, அதைக்கொண்டு பெரிய ஆலயங்களைக்கட்டி, பெரும்பொருள் கொடுத்த மக்கள் இக்கோவில்களுக்குள்பிரவேசிக்காமலிருக்கும் பொருட்டு அவற்றைச்சுற்றிக் கோட்டைகளைவிட பலமான சுவர்களையும் எழுப்பிவிடுகிறார்கள்...... ஆரம்பத்திலிருந்த கோவில் அனேகமாக சூத்திரக் கோவிலாகவே இருந்தது. அங்குமிங்கும் இதற்கு மாறுபாடாகச் சில கட்டப்பட்டிருக்கலாம். ஒரு பணக்காரப் பார்ப்பனன் ஒரு கோவிலை ஸ்தாபித்து அதற்கு மான்யமும் விட்டிருக்கக்கூடும். ஆனால் நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது கோ

வில்களின் ஸ்தாபனத்துக்கும், வழிபாட்டுக்கும், பரிபாலனத்துக்கும் பார்ப்பனரல்லாத மக்களே பணங்கொடுத்திருக்கிறார்கள் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை. இன்றையதினம் இவர்களிற் பெரும்பாலாரைக் கோவிலுக்குள் போகக்கூடாதென்றும், போகக்கூடியவர்கள் இரண்டாவது சுற்றுப்பிரகாரம்வரைத்தான் செல்லலாமென்றும் தடுக்கிறார்கள்."

## அத்தியாயம் 3.

இந்தியாவிலுள்ள பண்டைக்காலக்கோவில் ஒவ்வொன்றும், வழிபடுகிறவர்களிடமிருந்து காணிக்கையாக ஏராளமான பொருளை இக்கோவில்மூலம் வசூலிக்கலாமென எதிர்பார்த்த அரசர்களாலேயே ஸ்தாபிக்கப்பட்டதாகும். இதைத் தவிர மத சம்பந்தமான குறிக்கோளுடனோ, அன்றி மோட்சத்தை உத்தேசித்தோ ஸ்தாபிக்கப்படவில்லை. இது பொருள் தேடுவதற்குரிய அரசியல் தந்திரங்களில் ஒன்றாகும். இன்று அரசாங்கச் செலவுகளுக்காக ஜனங்களைக் கள் குடிக்கச் செய்வதுபோல அக்காலத்து அரசர்கள் கோவில்களை ஏற்படுத்திப் பொருள் சேர்த்துவந்தார்கள். இக்கொள்கை மனுஸ்மிருதிக்கு முன்னரிருந்தே கைக்கொள்ளப்பட்டு வருவதாகும். இக்காலத்தும், அரசாங்கத்தார் அனுமதியின்றிக் குடிஜனங்கள் கோவில் கட்டக்கூடாது என்ற முறையானது இந்திய சுதேச சமஸ்தானங்களில் கைக்கொள்ளப்பட்டு வருவதைக் காணலாம். இதிலிருந்து, முன்காலத்தில், ஆலயம் கட்டும் அதிகாரம் அரசர்களுக்கு மட்டுமே உரித்தாயிருந்தது என்பது வெளியாகின்றது.

இற்றைக்கு இரண்டாயிரத்து இருநூறு வருஷங்களுக்கு முன் கௌடிலியர் அல்லது சாணக்கியர் என்ற பெயருடன் விளங்கிய பார்ப்பனப் பெரியாரைக் கவனிப்போம். "இவர் அரசர்களை ஆக்கவும் அழிக்கவும் திறம்படைத்திருந்ததுமன்றி, அரசாங்கப் பரிபாலன முறையைப்பற்றியும், மன்னர்கள், மந்திரிகள், உத்யோகஸ்தர்கள் இவர்களுடைய கடமைகளைப்பற்றியும் விளக்கிய மிகப் பெரிய இந்தியப் பண்டிதராகவும் திகழ்ந்தார்." இவரியற்றியுள்ள சாணக்கிய சூத்திரம் அல்லது "அர்த்த சாஸ்திரம்", மனு யக்ஞிய வல்கிய ஆகிய ஸ்மிருதிகளின் காலத்திற்கும் முற்பட்டதாகும்.

சாணக்கியரது "ராஜ தந்திர"த்தைப்பற்றி அபிப்பிராயங்கள் எவ்வாறு கொள்ளப்பட்டிருந்தபோதிலும், ஆலய வழிபாட்டைப் பொறுத்தமட்டிலும் அவர் உண்மையையே விளம்பியிருக்கின்றார் என்பது அவரது அர்த்த சாஸ்திரத்திலுள்ள அடியிற் கண்ட சுலோகங்களினின்றும் தெளிவாகும்:—

"மத ஸ்தாபனங்களை மேற்பார்வைசெய்யும் அரசாங்க அதிகாரி, கோட்டை கொத்தளங்களுள்ள நகரங்களிலும் கிராமங்களிலுமுள்ள தெய்வங்களுக்குச் சொந்தமான பலவித சொத்துக்களையும் ஓரிடத்தில் சேகரித்து, அரசரது பொக்கிஷத்திற்குக் கொண்டுபோய்விடலாம்."

"அன்றியும், ஓரிரவு ஒரு தெய்வத்தையோ, பீடத்தையோ மடத்தையோ, ஏற்படுத்தவேண்டியது; அல்லது ஒரு கெட்ட சகுனத்தைக்காட்டி (தீமைகள் நேரிடாவண்ணம் தடுக்கும் பொருட்டு) திருவிழாக்களும் கூட்டங்களும் நடத்துவதாகப் பாசாங்குசெய்து பொதுஜனங்களிடமிருந்து அரசரது செலவுக்காகப்பணம் வசூலிக்கலாம்."

அரசருடைய செலவுகட்காகப் பணம் திரட்டும் வினோதமானவழிகளை இன்னும் பார்ப்போம்.

"ஒரு மரத்தில் பிசாசு தோன்றிவிட்டதாக முதலாவது பொதுஜனங்களிடையே பீதியை உண்டுபண்ணிவிடவேண்டும். இந்த மரத்துக்குள் ஒருவனை நுழையச்செய்து, பயங்கரமான

பேய்க்கூச்சலிடும்படியாக அரசன் ஏற்பாடுசெய்யவேண்டும். இந்த துஷ்ட தேவதையைச் சாந்தப்படுத்தி அனுப்பாவிட்டால் நகரத்துக்குப் பெருங்கேடுவிளையுமென்று ஜனங்கள் நம்பி, அதைச்சாந்தப்படுத்த அவர்கள் முயலும்படி செய்யவேண்டும். அரசாது ஒற்றர்கள் சந்நியாசிகள் மாதிரி வேடம் பூண்டு இந்தத் தந்திரத்தைச் செய்து பணத்தை வசூலிக்கவேண்டியது.'' பிசாசு நகரத்தை விட்டுப் போய்விடுகிறது; பணம் அரசாது பொக்கிஷத்தைச் சேர்கிறது. அந்தக் காலத்தில் அரசனுக்குப் பணம் தேடிக் கொடுக்கும் வேலை, அதிகாரிகளுக்குக் கடுமையான வேலையாகவே இருந்திருக்கவேண்டும்.

பாம்பைக் காட்டிப் பணம் பறிக்கும் தந்திரம் இதைவிட விசித்திரமானது; இது இன்றுங் கூடச் சிறிது மாற்றத்துடன் —ஒரு கோவிலிலாவது—இருந்துவருவதாகத்தெரிகிறது. சாணக்கியர் காலத்தில் 'தீர்த்தம்' எவ்வாறு பயன்படுத்தப்பட்டிருக்குமென்பதை எளிதாக உணர்ந்துகொள்ளலாம். சாதாரணமாக எளிதில் இம்மாதிரி விஷயங்களை நம்பாத மக்களிடத்தில்தான் இந்த 'தீர்த்தம்' உபயோகிக்கப்பட்டது. இதை அவர்களுக்கு நம்பிக்கையூட்டும் 'மருந்'தாக உபயோகித்தார்கள். ஆனால், இந்த தந்திரங்களையெல்லாம் அரசருடைய காரியத்துக்காக உபயோகித்தார்களேயன்றி இன்று நடப்பதுபோல ஒரு சிலருடைய சுயநல வாழ்வுக்காகவன்று என்பதை ஞாபகத்திலிருத்திக்கொள்ளவேண்டும். தந்திரம் இரண்டும் ஒன்றுதான்.

"பார்ப்பான், தன்னலத்தையும் ஆதாயத்தையுங் கருதி, கோவிலில் வழிபடுகிறவர்களை ஏமாற்றிப் பணம் பறிக்க எவ்வித தந்திரத்தையும் உபயோகிப்பான்'' என்று பிரஞ்சுப் பாதிரியாரான கற்றறிந்த ஆபி டோபாய் ஒரு நூற்றாண்டுக்குமுன் எழுதியிருக்கிறார். மேலும் சாணக்கியர் கூறுவதாவது:—

"அரசனது தோட்டத்தில் ஏதாவது ஒரு மரம் அகாலமாகப் பூக்கவோ, காய்க்கவோ செய்திருந்தால் அதில் கடவுள் தோன்றியிருக்கிறார் என்று பொதுஜனங்களிடம் காட்டிப் பிரசித்தப்படுத்த வேண்டும்."

"அல்லது, ஒரு கிணற்றில் அனேக தலைகளையுடைய பாம்பு ஒன்றிருப்பதாகச் சொல்லி அதைப் பார்க்க வருபவர்களிடமிருந்து ஒற்றர்கள் பணம் வசூலிக்கலாம்."

"ஒரு பாம்பு விக்கிரகத்தில் துவாரமிட்டோ, அல்லது கோவிலின் இருட்டு மூலையிலோ, அல்லது ஏதாவது பொந்திலோ பசியால் வாடிக்கிடக்கும் பாம்பொன்றை வைத்து, ஜனங்களைப் பார்க்கச் சொல்லிப் பணம் வசூலிக்கலாம். இம்மாதிரித் தந்திரங்களை எளிதில் நம்பாத ஜனங்களுக்கு மயக்க மருந்து கலந்த நீரைத் தீர்த்தமென்றும் பிரசாதமென்றுஞ்சொல்லிக் குடிக்கும்படி செய்து, அவர்கள் குடித்து மயங்கியவுடன், அதற்குக் காரணம் கடவுள் கோபமென்றும் சொல்லவேண்டியது. அல்லது தாழ்ந்த சாதியானொருவனைப் பாம்பு கடிக்கும்படிசெய்து, இம்மாதிரி துர்ச்சகுனம் நேரிடாது தடுக்கப்போவதாகப் பாசாங்குசெய்து ஒற்றர்கள் பணம் வசூலிக்கலாம்."

தெய்வங்களுக்குச் சமர்ப்பிக்கப்படும் காணிக்கைகள் அரசனது பொக்கிஷத்தைச் சேரவேண்டும்! அரசனது செலவுக்காக, அரசன் வாழும்பொருட்டுப் பணம் வசூலிக்க ஒரே இரவில் தேவதைகளையும் பீடங்களையும் ஸ்தாபித்துத்திருவிழாக்கள்நடத்தவேண்டும்! காணிக்கைகளைப் பெறுவதற்காகக் கடவுள்கள் தோன்றும்படி செய்யவேண்டும்! "சாதாரணமாக மிக வெளிப்படையான தந்திரங்கள்தான் அதிகமான பலனை அளிக்கின்றன. கடவுள் தம் மூலம் பேசுவதாகப் பாசாங்குசெய்து பணம் திரட்டும் வழி முன் காலத்தில் மற்ற நாட்டுப் புரோகிதர்களால் கையாளப்பட்டுவந்தது. ஆனால் இந்தியாவில் இன்றும் இவ்வழக்கம் ஒயவில்லை. இங்கு விக்கிரகங்களே பேசுகின்றன. இவற்றை வழிபடுகிறவர்கள் மிகக் கவனமாகக் கேட்டுப் பரவசமடைகிறார்கள்; ஆனால், கல் விக்கிரகத்தின் உள்ளோ, பக்கத்திலோ வஞ்சகனொருவன் மறைந்திருந்து விக்கிரகத்தின் வாய் வழியாகப் பேசுகின்றான் என்பதை இவர்கள் அறிவதில்லை"யென்று ஆபி டுபாய் கூறுகின்றார். இவைபோன்று இன்றளவும் கையாளப்பட்டுவருகிற பலவித தந்திரங்களையும் அவர் விரிவாக விளக்குகிறார்.

இனி, நமது சாணக்கியரைக் கவனிப்போம். சாணக்கியர் காலத்தில் கோவில் வருவாயிலிருந்து ஒரு பைசாவாவது அரசனது பொக்கிஷத்தைச் சேரத் தவறிவிட்டால், அந்த இடத்திலேயே கோவில் அதிகாரி ஏன் தூக்கிலிடப்பட்டிருப்பார் என்பதை நாம் மேற்சொன்னவற்றிலிருந்து அறிந்துகொள்ளலாம்.

அது மிகவும் நியாயமே. ஏனெனில் அக்காலத்தில் 'விக்கிரகங்களும், பீடங்களும்' அரசனது வியாபாரத்திற்காக ஏற்பட்டவைகளாகும். பொதுஜனங்களின் பணத்தை, அதாவது அரசனது பணத்தைச் செலவிட்டே விக்கிரகங்களையும், பீடங்களையும் மடங்களையும், கோவில்களையும் உண்டுபண்ணி, பரிபாலித்து அவற்றைப்பற்றிப் பெரிதாக விளம்பரப்படுத்தியும் வந்தார்கள். இக்காலத்தில் அரசாங்கத்தார் எவ்வாறு பெரும் பொருள் செலவிட்டு மேட்டூர் தேக்கத்தையும், சுக்கூர் அணைக்கட்டையும் கட்டி, அவற்றினின்றும் லாபத்தை எதிர்பார்க்கின்றார்களோ, அதேபோல முன்காலத்து அரசர்கள் கோவில்களை உற்பத்திசெய்ததும் லாபத்தைக் கருதியேயாகும்.

இம்மாதிரி 'மதஸ்தாபனங்க'ளை ஏற்படுத்திய முற்கால மன்னர்களைச் சுற்றி விரோதிகள் எப்பொழுதும் இருந்துவந்ததால் இடைவிடாது யுத்தங்கள் நேரிட்டுக்கொண்டேயிருந்தன; இதற்காக அவர்கள் பெருஞ் சேனைகளை வைத்திருந்தனர். யுத்தங்களுக்கும், சேனைகளுக்கும் வேண்டிய பணத்திற்காக ஏராளமான வருவாய் தேவைப்பட்டது. கோவில் வருவாயைக்கொண்டு பார்ப்பனருக்கு மட்டும் சோறு போடுவது என்றிருந்தால், அரசும் கோவிலும் அன்றே மறைந்திருக்கும். இக் கோவில்களையும், பீடங்களையும், கடவுள்களையும் படைத்த அக்காலத்து அரசர்களுக்கு அரசாங்கத்தை நடத்தும் கஷ்டம் எவ்வளவு என்று தெரியும். உதாரணமாக, பூரண மதுவிலக்கு ஏற்பட்டால், நாட்டில் உயர்தரக் கல்வியை நிறுத்த நேரிடுமென்று இன்று நமது மந்திரிகள் சொல்வதுபோல, தங்களது க்ஷேமமும், ராஜாங்கத்தின் க்ஷேமமும் கோவில் வருமானத்தில் தொங்கிக்கிடந்தனவென்பதை அக்காலத்து அரசர்கள் அறிந்திருந்தார்கள். ஆதலால் அவர்கள் அதன்மீது

மிகுந்த கவனஞ் செலுத்தி வந்தார்கள். இவ்வுலக சுகதுக்கங்களைக் குறித்து அவர்கள் நினைத்தார்களேயன்றி மோக்ஷ லோகத்தைப் பற்றி நினைக்கவில்லை. இக்காலத்து சுதேச மன்னர்களில் பெரும் பாலோர் யாதொரு பொறுப்பும் கவலையுமெடுக்காது மோக்ஷ லோகத்தைப்பற்றி நினைக்கின்றார்கள். பார்ப்பானைத் திருப்தி செய்தால் மோட்சத்துக்குச் சீட்டுக் கிடைத்துவிடுமென நம்புகி றார்கள். அங்ஙனம் செய்துவிட்டு, தங்கள் ராஜ்யங்களைவிட்டு, தற்கால மோட்ச பூமியான பாரிஸ் முதலிய மேனாடுகளுக்குச் சென்றுவிடுவதுமுண்டு.

திரு. கே. எம். பணிக்கர் அவர்கள் "இந்திய சமஸ்தானங்களும், இந்திய அரசாங்கமும்" என்ற தமது புத்தகத்தில் அடியில் வருமாறு எழுதுகிறார்:—

"பல சிற்றரசர்கள் மிதமிஞ்சிய சுகபோகங்களுடன் இழிவான வாழ்க்கை வாழ்வதற்குக் காரணம் அவர்கள் ராஜ்யபாரத்தில் நேராகப் பொறுப்பேற்று நடத்தாததேயாகும். முன் காலங்களில், குடிகளைத் துன்புறுத்தும் கொடுங்கோல் மன்னனையும், தனது சுகமொன்றையே கருதும் துர்நடத்தைக்காரரையும் சும்மா விட்டு வைத்திருக்கமாட்டார்கள். வெளியிலிருந்தேற்படும் படையெடுப்போ, அன்றி உள்நாட்டுக் கலகமோ அவனது வாழ்க்கையை முடித்துவிடும். ஆனால் இக்காலத்தில் அப்படியல்ல. ஒரு அரசன் தான் பிரிட்டிஷ் அரசாங்கத்தோடு செய்துகொண்ட உடன்படிக்கையை மீறாதிருப்பதுவரையும், நாகரீக ஆசாரங்களை வெளிப்படையாகப் புறக்கணியாதிருப்பதுவரையும் அவனுக்கு பிரிட்டிஷ் அரசாங்கத்தார் ஆதரவிருக்கின்றது. அவன் தனது சுகபோகங்களுக்காகத் தன் இஷ்டம்போல் பொக்கிஷத்தை உபயோகிக்கவும், குடிகளைக் கொள்ளையடிக்கவும் விட்டுவிடுகிறார்கள்."

ஸர் தாமஸ் மன்றோவின் அடியிற்கண்ட குறிப்புகளையும், திரு. பணிக்கர் அவர்கள் எடுத்துக்கூறுகிறார்:—

"இந்தியாவில் மோசமான ராஜ்யபாரம் ஏற்படுமாயின், அரண்மனையில் புரட்சி உண்டுபண்ணியோ அல்லது உள்நாட்டுக் கலகத்தாலோ அதைச் சரிப்படுத்துவதுதான் வழக்கம். ஆனால் உள்

நாட்டு வெளிநாட்டு விரோதிகளினின்றும் மன்னனைக் காப்பாற்ற பிரிட்டிஷ் படைகளிருப்பதால், அவ்விதம் கொடுங்கோன்மையைப் பரிகரிக்கும் வழி யெதுவுமில்லாமற் போய்விடுகின்றது. தனது பாதுகாப்புக்கு அன்னியர் உதவியிருக்கின்றதென்ற நம்பிக்கையால் அவன் சோம்பேறியாய்விடுகின்றான்; தனது குடிமக்களுடைய வெறுப்பு தன்னையொன்றுஞ் செய்யமுடியாதென்ற எண்ணத்தால் அவன் கொடியவனாகவும், பேராசை பிடித்தவனாகவும் ஆய்விடுகின்றான்."

கோவில்களிலிருந்து தனக்குப்பணம் வந்துகொண்டேயிருக்க வேண்டும் என்பதொன்றையே அரசன் கவனித்தான் என்பது இதுகாறும் எடுத்துக் காட்டியவற்றிலிருந்து விளங்கும். யார் பணம் கொடுத்தார்கள்; யார் கோவில்களுக்குப் போய் வணங்கினார்கள்; யார் மதுவருந்தினார்கள் என்பதைப்பற்றியெல்லாம் அவன் கவனித்ததில்லை. இவர்கள் சண்டாளராகவும், சூத்திரராகவும், வைசியராகவும், க்ஷத்திரியராகவும், பிராமணராகவு மிருக்கலாம். சண்டாளனாகவிருந்தாலும், அவன் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாகப் பணங் கொடுக்கின்றானோ அவ்வளவுக்கவ்வளவு அரசனுந் திருப்தியடைந்திருப்பான். பணம் வருமென்று தெரிந்தால், அரசன் தனது விக்கிரகங்களையும், பீடங்களையும், ஸர்ப்பங்களையுங் கொண்டு சண்டாளருக்கு விசேஷ வேடிக்கைகளையுங் காட்டியிருப்பான். ஒரு சண்டாளன் தனது கோவிலுக்குள் நுழையவோ, விக்கிரகத்தையோ, பாம்பையோ, மரத்தையோ வணங்கவோ செய்யவொட்டாமல் ஒரு வர்ணாச்சிரமதர்மி தடுப்பதினிமித்தம் தனக்கு நியாயமாக வரவேண்டிய வருவாய் தடைப்படுவதாகத் தனது காதுக்கு எட்டினால், இம்மாதிரித் தடை செய்பவர்கள் பார்ப்பனராக இருந்தபோதிலும், இவர்களைச் சமீபத்திலிருக்கும் மரத்தில் கட்டித் தூக்கியிருப்பான்.

அக்காலத்தில் இந்துக் கோவில்கள் அரசனுடைய வருவாய்க்கு அவ்வளவுதூரம் மூலகாரணமாயிருந்தன. ஆகவே எக்காரணத்தைக் காட்டியேனும், இவன் சண்டாளன், இவன் தாழ்ந்த சாதி ஆகையால் கோவிலுக்குள் போகவோ, வணங்கவோ கூடா

தென்று யாரேனும் சொன்னால், அவன் அந்த இடத்திலேயே கொடிய ராஜத்துரோகக் குற்றஞ் செய்தவனாகக் கருதப்பட்டிருப்பான்.

சண்டாளர்முதல் பிராமணரீறாகவுள்ள அனைவரும் கோவிலுக்குள் போய் வணங்கி, தம்மாலியன்ற பொருளை அரசனுக்குக் கொடுக்கும்படி செய்வதே அரசர்களின் கொள்கையாக இருந்தது அல்லது இருந்திருக்கவேண்டும் என்பது இந்தக் கோவில்களின் உற்பத்தியினின்றும் மிகத் தெளிவாகத் தெரிகின்றது. பார்ப்பான் விஷயத்தில்கூட யாதொரு வித்தியாசமும் பாராட்டவில்லை. அதாவது, ஒவ்வொருவரும் கோவிலுக்குள்போய்வணங்கி அதற்காகப் பொருளும் கொடுக்கவேண்டுமென்று கட்டாயப்படுத்தப்பட்டிருப்பார் என்பதாகும்.

## அத்தியாயம் 4.

கோயில்கள் அரசாங்க ஸ்தாபனங்களாக இருந்தன; ஏதேனும் ஒரு ஸ்தாபனம் 'பொதுச் சொத்து' என்று சொல்லக்கூடியதாக இருந்திருந்தால் அது இந்தக் கோயில்களாகும். இப்பொழுது உயர் சாதி இந்து வக்கீல்கள் கோயில்களைப் 'பொது ஸ்தாபனங்கள்' என்று சொல்லும்போது ஒரு புதுமாதிரியான விசேஷ அர்த்தத்துடன் சொல்லுகின்றார்கள். "பிரதம திருஷ்டியில், நான்கு ஜாதியாருக்கும் தட்டுத்தடையின்றி இக்கோயில்களில் பிரவேசித்து வழிபட உரிமையுண்டு" என்பது இவர்கள் கூற்றாகும். கோயில்களையும், தெய்வங்களையும் ஸ்தாபித்தவர் பார்ப்பனர்கள் அல்லவென்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும்.

"வேதங்களை அடிப்படையாகக் கொண்ட ஆரிய மதத்தில் விக்கிரக ஆராதனையில்லை. இது பின்னர் தோன்றிய இழிவுபட்ட ஆராதனையாகும்" என்று காலஞ் சென்ற மாக்ஸ் முல்லர் என்னும் உகலப்பிரசித்திபெற்ற மேனாட்டு ஆசிரியர் கூறுகின்றார்.

வங்காள தேசத்துப் பிரபல வழக்கறிஞரான மிஸ்டர் ஜே. ஸி. கோஷ் தமது தாகூர் சட்டப் பிரசங்கத்தில் அடியில் வருமாறு குறிப்பிடுகிறார்:—

“மக்கள் யாகம் முதலியவற்றை நடத்திவந்த காலத்தில் கோயில்களையும் விக்கிரகங்களையும் ஸ்தாபிக்கவேண்டிய அவசியம் ஏற்படவில்லை. பிராமணர்கள் மட்டுமே அக்கினியை வளர்க்கலாம். இதனால்தான் அவர்களை “அக்கினி ஹோத்திரிகள்” என்றழைத்தார்கள். மற்ற சாதியாரும் உயர்ந்தபோது, அவர்கள் வழிபடத் தெய்வங்கள் வேண்டியதாயிற்று. பிராமணரது ஆதிக்கம் குறையவும், அக்கினி வணக்கம் தனது செல்வாக்கை இழந்தது; இதிலிருந்து விக்கிரக வணக்கம் ஆரம்பமாயிற்று. இந்த விக்கிரக ஆராதனை, ஆரியர் வருமுன் இந்தியாவில் இருந்தவர்களிடமிருந்தும், பழங் குடிகளான திராவிடர்களிடமிருந்தும் கடன் வாங்கப்பட்டிருக்கவேண்டும். புத்த விக்கிரகங்களையும், ஸ்தூபிகளையும் ஸ்தாபித்து புத்த மதத்தினர் வழிபடவாரம்பித்தது, இந்துக் கோயில்களையும், விக்கிரகங்களையும் ஸ்தாபிப்பதற்குத் தூண்டுகோலாயிற்று.”

பணகுடி கோயில் வழக்கில் ஜஸ்டிஸ் சதாசிவ ஐயரவர்கள் அடியில் வருமாறு தமது தீர்ப்பில் குறிப்பிட்டார்:—

“விக்கிரக ஆராதனையை (சாஸ்திரங்கள்) எல்லாச் சாதியார்களுக்கும் எவ்வித வித்தியாசமுமின்றி வகுத்திருந்தபோதிலும், அது அவ்வளவு உயர்ந்த கடவுள் வழிபாடல்லவென்பதாகவும் தெளிவாக அங்கீகரிக்கப்பட்டிருந்தது. அக்கினி, சூரியன் இவற்றின் மூலமாக வழிபடுவதே பிராமணர்களுக்கு உரித்தானதென்றுங் கொள்ளப்பட்டது.”

“ஆதியில் பொதுஜன உபயோகத்திற்காகவே விக்கிரக ஆராதனை ஏற்படுத்தப்பட்டதென சாஸ்திரங்கள் கூறுகின்றன. புத்த மத உணர்ச்சி இந்தியாவில் விக்கிரக ஆராதனையின் வளர்ச்சிக்கு முக்கிய ஆதாரமாயிருந்தது. புத்தர்பெருமானை வணங்கும்பொருட்டு அவரது ஞாபகச் சின்னங்கள்மீது எழுப்பப்பட்ட ஸ்தூபி

களிலிருந்து பௌத்த கோவில்கள் தோன்றின" என்று மற்றொரு கேஸில் அவர் கூறியிருப்பதோடு "விக்கிரக ஆராதனை பொதுமக்களுக்காகவே ஏற்படுத்தப்பட்டதென்பது தெளிவாகின்றது" தென்னும் குறிப்பிட்டுள்ளார்.

"புத்தமதக் கோயில்களைப் பின்பற்றி இந்துக் கோயில்களும், பௌத்த 'விகாரங்க'ளைப் பின்பற்றி இந்து மடங்களும் பிற ஸ்தாபனங்களும் எழுந்தன. எந்த முறையிற் செய்யப்பட்ட தர்மங்களும் மத சம்பந்தமானவையென்றே கருதப்பட்டன. மனிதனுக்கும், விலங்கினுக்கும் ஏற்படும் கஷ்ட நிவாரணத்துக்கும், துறவிகள், சந்நியாசிகள் இவர்கள் கூடுவதற்கும் தானங்கள் வழங்கப்பட்டன. இவையெல்லாம் மத தர்மங்கள்; பொதுச் சொத்துக்கள். இந்து மதம் புத்துயிர்பெற்றெழுந்தபோது தயாளகுணமுடைய வியாபாரிகளும், பிரபுக்களும், அரசர்களும் ஏராளமான மடங்களை ஸ்தாபித்து நடத்திவந்தார்கள். பொதுமக்களனைவரும் வழிபடும் பொருட்டு அரசர்களும் தனவந்தர்களும் பெரிய கோயில்களைக் கட்டினார்கள். இப் பெரிய கோயில்களின் சமீபம், ஜனங்கள் தங்கள் குடும்ப தேவதைகளைப் பிரதிஷ்டைசெய்து, அவற்றிற்குப் பூஜைகளையும் ஏற்படுத்திச் சொத்துக்களும் விட ஆரம்பித்தார்கள். இந்தக் குடும்ப தேவதைகளும், இச் சொத்துக்களும் தனிப்பட்ட மனிதர்களுக்கு மட்டும் சொந்தமான தனிச் சொத்துக்களாக இருந்தன" என்று திரு. ஜே. ஸி. கோஷ் அவர்கள் கூறுகின்றார்.

மேற்குறிப்பிட்ட பீடங்களும், விக்கிரகங்களும், ஆலயங்களும் பார்ப்பனரல்லாத ஏனையோரால் ஏற்படுத்தப்பட்டவைகளாகும். இந்தியாவின் பூர்வீகக் குடிகளுள்பட்ப் பொதுமக்களனைவருடையவும் உபயோகத்திற்காகவே இவை ஆதியில் ஏற்படுத்தப்பட்டன. இதில் சாதி வித்தியாசமோ, தீண்டாமை வித்தியாசமோ யாதொன்றுங் கிடையாது. சரித்திரம் இதை மெய்ப்பிக்கின்றது. முற்கால அரசர்கள் தங்கள் லாபத்தைக் கருதி ஆலய வழிபாட்டுக்கு உற்சாகமளித்தார்கள் என்றுந் தெரிகிறது. மேலும் அது பிறரை வசீகரப்படுத்தும்படி நடனத்தையும் சங்கீதத்தையும் கோயிலுக்குள் நுழைத்தார்கள்.

"விக்கிரகங்களையும், கோயில்களையும் ஏற்படுத்தியபோது, அவற்றைப் பரிபாலிக்க சொத்துக்களை விடவேண்டியதும் அவசியமாயிற்று. எனவே, நிலங்களை விட்டதுமன்றி, பல பழைய கோயில்களில் (அடிமைப்பெண்களையும்) தாசிகளையும் விட்டார்கள். இதிலிருந்து இந்தியாவில் என்ன நோக்கத்துடன் விக்கிரக ஆராதனை ஆரம்பிக்கப்பட்டது என்பது புலனாகும். இப்பொழுது ஒவ்வொரு கோயிலிலும் நடனசாலையிருப்பதாகவே கருதப்படுகிறது" என்று மிஸ்டர் கோஷ் சொல்லுகிறார்.

ஆலயங்களுக்குச்சென்று வணங்கின பிராமணர்களைச் சாதிப் பிரஷ்டம் செய்தார்களென்றும் தெரிகிறது. இது சரித்திரவாயிலாகவும், வேதமுறைப்படியும் உண்மையாகவே இருக்கின்றது. "ஆலயத்திற்குச் சொத்துக்கள் விடுவது அவ்வாலயத்தில் தொழுவதற்கு வரும் பிராமணர்களது பரிபாலனத்தின்பொருட்டேயாகுமென்பதை நாம் அறியவேண்டும். ஏனெனில், அங்ஙனம் ஆலய வழிபாடு நடத்தும் பிராமணர்கள் தேவாலர்கள் என்று அழைக்கப்பட்டதோடுமட்டுமன்றி, தங்கள் ஜாதியினின்றும் நீக்கப்படவுஞ் செய்தார்கள். இங்ஙனம் புறக்கணிக்கப்பட்ட பிராமணர்களது சௌகரியங்களுக்காகச் சொத்துக்களும், அடிமைப் பெண்களும், தாசிகளும், சங்கீதமும், வேலையாட்களும், மற்றும் சாமான்களும் கொடுக்கவேண்டியதாயிற்று. இதிலிருந்து, ஆலய வழிபாடு எவ்வளவு இழிவான முறையில் ஆரம்பிக்கப்பட்டதென்பதையும், எவ்வளவு இழிவான நிலையில் இருந்துவந்ததென்பதையும், இவ்வாலய வழிபாடு நடத்திவந்தவர்களும் எவ்வளவு இழிவான நிலையிலிருந்தார்களென்பதையும் நாம் உணர முடியு"மென மிஸ்டர் கோஷ் சொல்லுகின்றார்.

பண்டைக் காலத்தில், இக்காலத்திலிருப்பதுபோலவே, கோயில்கள் வேடிக்கை விநோத ஸ்தலங்களாகவே யிருந்து வந்தன; இவ்வுத்தேசத்துடன்தான் அக்கால அரசர்களும் ஆலயங்களை ஏற்படுத்தியிருந்தார்கள். எனவே "இந் நாட்டிலிருக்கும் பல கோயில்கள் வேசையர் விடுதிகளைவிடச் சிறந்தவையல்ல"வென்று மகாத்மா காந்தி குறிப்பிட்டது சரித்திரப்படியும் மிகையாகாது. இங்

நோக்கத்துடனேயே ஆலயங்களை ஸ்தாபித்தார்கள் என்பது சரித்திரபூர்வமான உண்மையாகும்.

எவ்வாறாயினும், சாணக்கியர் காலத்தில்—அதாவது கி. மு. 300–வது ஆண்டில்—"பீடங்கள், விக்கிரகங்கள் முதலிய மத ஸ்தாபனங்களுக்கும், சகல சாதி ஆண், பெண், குழந்தைகளுக்கு மது வளித்துவந்த ஸர்க்கார் கள்ளுக்கடைகளுக்கும்" அக்காலத்து அரசர்கள் யாதொரு வித்தியாசமும் ஏற்படுத்தினரில்லை. இந்த இரண்டு அரசாங்க இலாகாக்களும் தனித்தனி அதிகாரிகளால் நிர்வகிக்கப்பட்டுவந்தன. ஒரு அதிகாரி தேவஸ்தான சூப்பிரண்டண்டு என்று அழைக்கப்பட்டுவந்தார்; மற்றவர் மதுபான சூப்பிரண்டண்டு என அழைக்கப்பட்டுவந்தார். இந்த இரு ஸ்தாபனங்களையும் தாரதம்மியப்படுத்தி ஆராய்ச்சி செய்வது வேடிக்கையாகவும் அறிவு புகட்டுவதாகவுமிருக்கும்.

இந்த அரசாங்க சாராயக்கடைகளை நிர்வகிக்கும் விஷயமாக சாணக்கியர் வகுத்துள்ள சட்டதிட்டங்கள் எவையென்பதை ஆராய்வோம். இவை காலத்துக்குத்தக்க விதத்தில், போதிய திறமையுடன் ஏற்படுத்தப்பட்டு மிக வெற்றிகரமாக நிர்வகிக்கப்பட்டுவந்தன. இதைப் பின்பற்றியே ஆலய இலாகாவிலும் பல சீர்திருத்தங்கள் ஏற்பட்டிருக்கவேண்டும் என்று தெரிகிறது.

"மது வகைகளைத் தயாரிக்கும் முறை தெரிந்தவர்களை வேலைக்கமர்த்தி, கோட்டைகளிலும் நாட்டுப்புறங்களிலுமட்டுமின்றி, முகாம்போடுமிடங்களிலும் மது விற்பனை செய்யவேண்டியது கள்ளுக்கடை அதிகாரியின் கடமையாகும்.

"தேவைக்கும் செலவுக்குந் தக்கபடி, கள்ளை ஒரு இடத்தில் தயாரித்துப் பல இடங்களுக்கும் கொண்டுபோகவோ, அல்லது பல இடங்களிலும் தயாரித்து ஆங்காங்கு விற்கவோ செய்யலாம்.

"சாராயத்தை அந்தந்தக் கிராமத்திலிருந்து வெளியேகொண்டு போகக்கூடாது; அடுத்தடுத்தும் கடைகளை ஸ்தாபிக்கக்கூடாது.

"மீறி நடப்பவர்கள்மீது 100 பணம் அபராதம் விதிக்கப்படும்.

"வேலையாட்கள் கெட்டுப்போகாமலிருக்கவும், ஆரியர்கள் தங்கள் யோக்கியதையையும் நன்மதிப்பையும் இழக்காமலிருக்கவும், துஷ்டர்கள் புத்திகெட்ட செய்கைகளைச் செய்யாமலிருக்கவும், தெரிந்தவர்களுக்குமட்டுமே சாராயம் சிறிதளவில் விலைக்குக் கொடுக்கப்படவேண்டும். நன்றாகத் தெரிந்தவர்களும், நன்னடத்தையுடையவர்களும் மட்டுமே சாராயத்தைக் கடைக்கு வெளியே கொண்டுபோகலாம்.

"அல்லது, எல்லோரும் கடையிலிருந்துதான் சாராயம் குடிக்க வேண்டுமென்றும், உடனேயே வெளியே போய்விடக் கூடாதென்றும் கட்டுப்பாடு செய்யலாம்.

"கெட்டுப்போன சாராயத்தையன்றிப் புதிய சாராயத்தை அதன் விலையிலிருந்து குறைத்துக் கொடுக்கக்கூடாது. கெட்டுப்போன சாராயத்தை வேறெங்காவது விற்கவோ, அடிமைகளுக்குக் கொடுக்கவோ, சம்பளத்திற்குப் பதிலாக வேலையாட்களுக்குக் கொடுக்கவோ, அல்லது பன்றி முதலிய மிருகங்களுக்குக் கொடுக்கவோ செய்யலாம்.

"சாராயக் கடைகளில் தனித்தனி இருக்கைகளும், படுக்கைகளும் உடைய பல அறைகளிருக்கவேண்டும். குடிக்கும் அறையில் வாசனைத் திரவியங்கள், புஷ்ப மாலைகள், தண்ணீர் முதலிய பல சௌகரியமான சாமானங்களை வைத்திருக்கவேண்டும்.

"இந்தக் கடைகளுக்கு வரும் குடிகாரர்கள் செய்யும் செலவு கிரமமானதா, கிரமத்துக்கு மிஞ்சினதா என்பதையும், அன்னியர்கள் யாராவது இருக்கின்றார்களா என்பதையும் ஒற்றர்கள் மறைந்திருந்து கவனிக்கவேண்டும். மது மயக்கத்தில் கிடப்பவர்களணிந்துள்ள ஆடை, ஆபரணாதிகளின் விலை மதிப்பையும் அவர்கள் கவனிக்கவேண்டும்.

"குடிக்க வருபவர்கள் எப்பொருளையாவது இழக்க நேரிட்டால், இழந்த பொருளுக்குப் பதிலுக்குப் பதில் சாராயக்கடை வியாபாரிகள் கொடுப்பதோடு, அதைப்போன்று ஒரு பங்கு அபராதமும் செலுத்தவேண்டும்.

"மதுவருந்தித் தம் அழகிய வைப்பாட்டிகளுடன் தூங்கும் உண்மையான அல்லது போலி ஆரியர்களின் தோற்றத்தை சாராயக்கடை சொந்தக்காரர்கள் பாதி மூடியிருக்கும் அறைகளில் ஒளித்திருந்து கவனித்துக்கொள்ளவேண்டும்." இவை சாணக்கியர் வகுத்துள்ள சட்டங்கள்.

விக்கிரகங்களையும், ஆலயங்களையும்விட அரசாங்க சாராயக் கடைகளே மிகவும் பழமையான ஸ்தாபனங்கள் என்பதை வருணசிரமதர்மிகள் ஒப்புக்கொள்ளவேண்டும். இன்று இந்தியாவிலிருக்கும் எந்த ஸ்தாபனத்தையும் "பண்டையப் பழக்க வழக்கம்", "முன் நடப்பு" என்ற காரணத்தைக்கொண்டுமட்டும் நிலைநிறுத்த வேண்டுமென்றிருந்தால் இப்பொழுது நடைமுறையிலிருக்கும் "பூரண மதுவிலக்குப் பிரசார"த்தைவிட அதற்கு ஆபத்தைத் தரக்கூடியது வேறொன்றுமேயில்லை. சாணக்கியர் காலத்தில் இவ்விதப் பிரசாரம் மிக மிகப் பெரிய ராஜத்துரோகமாகக் கருதப்பட்டிருக்கும். இது நிற்க,

சாணக்கியர் காலத்தில் சகல ஜாதி ஆண்களுக்கும், பெண்களுக்கும், குழந்தைகளுக்கும் அரசாங்கத்திலிருந்தே புதிய சாராயம் கொடுக்கப்பட்டது என்பதைக் கவனிக்கவேண்டும்; அவரவர் சக்திக்கும், திருப்திக்குந் தக்கபடி சாராயம் அளிக்கப்பட்டது. விலை மிக நியாயமானது. 'தூய குணமுடைய ஆரியர்'க்குக்கூட அதிகக் கஷ்டமில்லாமல் கிடைக்கும். இந்த சாராயக்கடைகளில் தனிச் சாப்பாட்டு அறைகளும், படுக்கையறைகளுமிருந்தன. இவை மட்டுமா? பருவ கால மாற்றத்துக்குத்தக்கபடி சௌகரியமான சாமானங்கள்! இவற்றுடன் வாசனைத் திரவியங்கள், பூமாலைகள், தண்ணீர்! இவையெல்லாவற்றையும்விட, யாரையும் கவரத்தக்க "அழகிய விலைமாதர்கள்"! இவற்றையெல்லாம் மதுபான இலாகாத் தலைவர் ஏற்பாடு செய்யவேண்டும். ஒருவர், ஆரியராயினுஞ் சரி, அனாரியராயினுஞ் சரி, இவற்றைத் தவிர அவருக்கு வேறென்ன வேண்டும்?

ஒரு காலத்தில், இந்த அரசாங்க "சாராய ஸ்தாபனங்க"ளுடன் அரசாங்க "மத ஸ்தாபனங்க"ளும் ஒன்றுசேர்க்கப்பட்டிருக்க

வேண்டுமென்பது சாணக்கியர் கூற்றிலிருந்து வெளிப்படுகிறது. சாராயக்கடைகளிலிருந்த "அழகிய விலைமாதர்கள்" ஆலயங்களிலும் தோன்றியிருக்கவேண்டும். "புஷ்பங்கள், பூமாலைகள், வாசனைப் பொருள்கள்" இரண்டிலும் கிடைக்கும். மதுவை எந்தெந்தப் பொருள்களைக் கொண்டு தயாரித்தார்களோ, அதே பொருள்களைக்கொண்டே ஆலயத்திலுள்ள "தீர்த்த"மும் தயாரிக்கப்பட்டது. சாராயக் கடைகளுக்குச் செல்வதால் யோக்கியதைக் குறைவு ஏற்படுமென்று "தூயகுணமுடைய ஆரியர்"க்கு ஏற்பட்ட பயமும், கோயிலில் "தீர்த்த"மாக இந்த மது பரிணமித்ததினிமித்தம் நீக்கப்பட்டுவிட்டது. இன்றளவும் எவ்வாறு ஒழுக்கத்தைக் காப்பாற்ற மதம் உபயோகிக்கப்படுகின்றதோ அதே மாதிரி அன்றும் ஒழுக்கத்தைப் பாதுகாக்க மதத்தையே உபயோகித்தார்கள்.

இவ்வித ஆசாபாசங்களினால், அக்னிஹோத்திரிகளாக இருந்த பார்ப்பனர்களைக் கோயிலுக்குள் கொண்டுவந்தார்கள். இவ்வாறு கோயிலுக்குள் சென்று வணங்கிய பார்ப்பனரை மற்ற பிராமணர்கள் ஜாதிப் பிரஷ்டஞ் செய்தார்கள். பொதுவாகவே, பிராமணன் வராத கோவிலுக்குக் கவுரவமில்லை என்ற எண்ணம் பார்ப்பனரல்லாதாருக்குண்டு; அந்த கவுரவத்தை உண்டுபண்ணும்பொருட்டே,பார்ப்பனருக்கு இவ்வளவு சௌகரியங்களையுஞ் செய்து கோயிலுக்குள் அழைத்து வந்திருக்கக்கூடும். பார்ப்பனரும், ஜாதிப் பிரஷ்டஞ் செய்யப்படுவதையும் பொருட்படுத்தாது, இவ்வித சௌகரியங்களில் மயங்கி ஆலய வழிபாட்டிற்கு இணங்கியிருக்க வேண்டும். எனவே, இவ்விதம் ஜாதியிழந்த, கீழ்தரப் பார்ப்பனர்களுக்கு, அவர்கள் கோயிலுக்குள் நுழைந்து வணங்கிய காரணத்தால், அவர்களுக்கும், தாசிகள், சங்கீதக்காரர்கள் இவர்களுடன் உணவுக்கும் செலவுக்கும் சொத்துக்கள் விடவேண்டியதாயிற்று.

திருவிதாங்கூர் மாஜி திவான் திரு. வி. கிருஷ்ண ராவ் அவர்கள் 1844-ம் வருஷத்தில் வெளியிட்ட "திருவிதாங்கூர் நிர்வாக

முறை விளக்கம்" என்ற தமது நூலில் அடியில் வருமாறு குறிப்பிடுகிறார்:—

"பொது ஊட்டுப்புரை அல்லது 'அக்ரசாலை' திருவனந்தபுரத்திலிருக்கிறது. இது பத்மநாபசுவாமி கோவிலைச் சேர்ந்தது. வெளி ஜில்லாக்களிலிருந்து திருவனந்தபுரத்திற்கு வருகிற பார்ப்பனர்களனைவர்க்கும், திருவனந்தபுரத்திலிருக்கிற சகல பார்ப்பனர்களுக்கும் இந்த ஊட்டுப்புரையில் இரவும் பகலும் சாப்பாடு உண்டு.

"இது தவிர, 'ஈசுவர சேவை'க்காகவென்றுஞ் சில பார்ப்பனர்களை வேலைக்கமர்த்தியிருக்கிறார்கள். பல கோயில்களிலும் இவர்களுக்கு மாதச் சம்பளம் கொடுக்கப்படுகிறது. இத்தகைய பார்ப்பனர் சுமார் முன்னூற்றைம்பது பேரிருக்கின்றனர். இவர்கள் தினந்தோறும் பூஜை சமயத்தில் மட்டுமே கோவிலுக்குள் வரவேண்டும்; மீதி நேரமெல்லாம் அவர்கள் வேலையில்லாமலே கழிக்கிறார்கள்."

மேற் சொன்னபடி, ஒரு இந்துக்கோவிலுக்குள் நுழைந்து வழிபட பிராமணனுக்கு இவ்வளவு சங்கடங்களிருந்திருந்தால், வேத விரோதமான அனாரியக் கடவுள்களுக்கு ஒரு காலத்திலும் பார்ப்பனர்கள் பூஜை செய்திருக்கவேமாட்டார்கள் என்று சொல்லவேண்டியதில்லை. இன்றுங்கூட, தென்னிந்தியாவில் பேர்பெற்ற பொதுக்கோவில்களிலிருக்கும் பூசாரிகள் பிராமணர்கள் அல்ல. அங்ஙனமாயின், இந்த பூசாரிகள் யார் என்பதைப்பற்றிப் பின்னர் ஆராய்வோம்.

கோவிலுக்குள் சென்ற பிராமணர் ஜாதியிழந்தார்; இவ்வாறு ஜாதியிழந்தவர்களைப் போற்றவேண்டியதேற்பட்டதாலேயே இவர்கள் கோவிலுக்குள் உண்ணவும், இவர்களை உண்பிக்கவும் நேரிட்டது. இவ்வாறு உண்ணுவதே, பிராமணர்களது குறைவைக் காண்பிக்கும் அறிகுறியாயிற்று.

ஆகையினால், பண்டைக்காலத்தில் பொதுஜனங்களைத் திருப்திப்படுத்தவும், தங்களது வருமானத்தைக் கருதியுமே அரசர்கள்

இக்கோவில்களை ஸ்தாபித்தார்கள். பின்னர், இக் கோவில்களுக்குள் தாசிகளையும், சங்கீதத்தையும் கொண்டுவந்து, வருமானந் தரும் விநோதக் காட்சிசாலைகளாக்கினார்கள். இவற்றிற்கு சமூக மதிப்பு ஏற்படும்பொருட்டு சில பிராமணர்களையும் வணங்கும்படி செய்தார்கள். அவ்விதம் வணங்க முன்வந்த பிராமணர்கள் தங்கள் ஜாதியை இழக்க நேர்ந்தமையால், அவர்களுக்கு உணவளிக்கவும் ஏற்பாடு செய்தார்கள்.

இச் சந்தர்ப்பத்தில், பிரஞ்சுப் பாதிரியாரான ஆபி டுபாயின் குறிப்புகளைக் கவனிப்போம்:—

"வேசையுடனே, கன்னிகையுடனே சம்பந்தம் வைத்துக் கொள்வது குற்றமாகப் பார்ப்பனர் கண்ணுக்குத் தோன்றவில்லை. மாமூலுக்கு விரோதமாகச் சிறிதளவு மாறினால் கொடிய குற்றமாகக் கருதும் இப் பார்ப்பனர்கள், எவ்வளவோ கொடிய தூர்த்தத்தனமான செய்கைகளிலும் குற்றங் காண்பதில்லை. முக்கியமாகப் பார்ப்பனரின் உபயோகத்திற்காகவே, ஆதியில் தேவதாசிகளையும், பரத்தையர்களையும் கோவில்களில் ஏற்படுத்தினார்கள். இவர்கள் அடிக்கடி 'வேசிய தர்சனம் புண்ணியம், பாபநாசம்' என்ற சுலோகத்தைச் சொல்லிக்கொள்வதைக் கேட்கலாம். 'வேசையைத் தரிசித்தால் பாவம்போய் புண்ணியம் ஏற்படும்' என்பது இதன் பொருளாகும்.

"ஆதியில், கோவிற் பரத்தையர்களும், நடனமாதர்களும், தேவதாசிகளும், பார்ப்பனர் சுகபோகத்துக்காக மட்டுமே தனிப்பட ஒதுக்கப்பட்டிருந்தார்கள் என்று தெரிகிறது. ஒரு பிரத்தியேக முறையில் இவ் விலைமாதர்கள் பொட்டுக்கட்டப்படுகிறார்கள். ஒவ்வொரு முக்கியமான கோவிலிலும் எட்டு, பன்னிரண்டு அல்லது கூடுதலான தேவதாசிகளிருக்கின்றனர். இவர்கள் தினந்தோறும் இருமுறையும், திருவிழாக் காலங்களிலும் ஆடல் பாடல் நிகழ்த்தவேண்டும்."

இன்றளவும் பிராமணர்களுக்கும் தேவதாசிகளுக்கு மிருந்து வரும் அதிசயிக்கத்தக்க தொந்தம் இதினின்றும் சரித்திர பூர்வமாக வெளியாகின்றது. தேவதாசிமுறையை ஒழிக்கவேண்டு

மென்று சீர்திருத்தக்காரர்கள் முயலும்போது, அதை எதிர்க்கும் பிராமண மேதாவிகளின் வைதீக ரகசியம் இதிலிருந்து புலனாகின்றதல்லவா? இதை முன்னிட்டேபோலும், திருவிதாங்கூர் அரசாங்கத்தார் கோவில்களில் தேவதாசி முறையை ஒழித்தபோது, அவ் வேலைகள் பிராமணர்களுக்கே கொடுக்கப்பட வேண்டும் என்று கட்டளையிட்டார்கள்!

இதுகாறும் சொல்லப்பட்டது சரித்திரபூர்வமாக உண்மையானால், எந்த இந்துக் கோவிலிலாவது ஒரு பிராமணன் பிரவேசிக்கவோ, தரிசிக்கவோ உண்ணவோ செய்தால், அதைப்போன்ற ஒவ்வொரு கோவிலிலும் ஒவ்வொரு இந்துவுக்கும் — அவர் உயர் சாதிக்காரரானாலும், தாழ்ந்த சாதிக்காரரானாலும், தீண்டத்தக்கவராகவோ, அல்லது தீண்டத்தகாதவராகவோ இருந்தாலும், — பிரவேசிக்கவும், தரிசிக்கவும் உரிமையுண்டென்பது பகுத்தறிவுக்கு ஒத்ததாகும். ஏனெனில் பின் சொன்னவர்களுக்காகவே பண்டைக் காலத்தில் கோவில்கள் கட்டப்பட்டன. மற்ற சாதி இந்துக்கள், தீண்டாதார், தாழ்த்தப்பட்ட வகுப்பினர் இவர்களுடன் சேர்ந்து தரிசித்ததினால் பிராமணன் தன் ஜாதியை இழந்து 'சர்வதேசாபிமானி' (Cosmopolitan) ஆகிவிட்டபடியால் அவனுக்கு உணவு அளிக்கவேண்டியதாயிற்று.

பிராமணனைப் பொறுத்தமட்டிலும், ஆலய வழிபாட்டினால் தீண்டத்தகாதவனாகிவிட்டபடியால், இந்தக் கோவில்களைப் பரிசுத்தப்படுத்த, முதன்முதல் பிராமணனையே ஒவ்வொரு கோவிலிலிருந்தும் வெளியேற்றவேண்டும். மேலும் தன்னைப் பிராமணன் என்று சொல்லிக்கொள்ளும் ஒவ்வொருவனும் ஆலயத்தில் பிரவேசிக்கவோ, தரிசிக்கவோ, உணவருந்தவோ கூடாது.

ஆலயப் பிரவேசப் பிரச்னையைப்பற்றிப் பேச, சரித்திரபூர்வமாக, வர்ணாசிரமதர்மப் பார்ப்பானுக்கு—அவன் உத்யோகஸ்தனாயினுஞ் சரி, உத்யோகமில்லாதவனாயினுஞ் சரி, சாதாரணப் பார்ப்பானாயினுஞ் சரி — வாயில்லை; அவன் வாய் திறக்கக்கூடாது.

எந்தக் கோவிலாயினும், அங்கு பார்ப்பானுக்குப் பிரவேசிக்க உரிமையுண்டாவென்று பார்க்கவேண்டும்; உண்டானால், அக் கோவிலுக்குள் மனிதரனைவர்க்கும் பிரவேசிக்க உரிமையுண்டு. எந்த இந்துக் கோவிலிலாவது பார்ப்பானுக்கு உணவு அளிக்கப்பட்டால் அந்தக் கோவில் மிகத் தாழ்வாகக் கருதப்படும் பறையனுக்கும் சண்டாளனுக்குங்கூடத் திறந்திருக்க வேண்டுமென்பது சரித்திர பூர்வமாகவும், சட்ட ரீதியாகவும் ஏற்படுகின்றது. ஏனெனில் அந்தச் சண்டாளனுடைய பாவத்தையே அந்தப் பார்ப்பான் சாப்பிடுகின்றான்.

——:o:——

## அத்தியாயம் 5.

"பொதுக் கோவில்களைக்குறித்தும், அவற்றின் சொத்துக்களைக்குறித்துமுள்ள சரித்திரத்தையும், ஆதி அமைப்பையும் அறியாத குறையே இப்பொழுது சட்டத்தில் ஏற்பட்டுள்ள குழப்பத்திற்குக் காரணமாக இருக்கிறது" என்று திரு. ஜே. ஸி. கோஷ் அவர்கள் எழுதுகிறார். இது, நமது வழக்கறிஞர்கள்—அதிலும் இந்து வழக்கறிஞர்கள்மீது சுமத்தப்படும் பெரும் பழியாகும். இதன் பொருள் என்னவென்றால், நமது வக்கீல்கள் பூரண அறியாமையில் மூழ்கிக்கிடக்கின்றார்கள் என்பதுமன்றி, பொதுக்கோவில்களையும் அவற்றைச் சேர்ந்த தர்ம சொத்துக்களையும்பற்றி இவர்கள் அறிந்து அமுல் நடத்தும் சட்டமானது பெருங் குழப்பத்தின் காரணமாக ஏற்பட்டதென்பதுமாகும். ஆலயப் பிரவேசப் பிரச்னையைப் பொறுத்தமட்டிலும் இது முற்றிலும் உண்மையே.

இந்து சமூகத்தைச் சேர்ந்த எவரையும், இந்துக் கோவிலுக்குள் போகவும், வணங்கவும் கூடாதெனத் தடுக்க, 'டிரஸ்டிகள்' (டிரஸ்டிகள் என்றழைப்பதே சட்டரீதியான பிழையாகும்) என்பவருக்கோ, தேவஸ்தானக் கமிட்டிகளுக்கோ, அல்லது சாதி

இந்துக்கள் என்று சொல்லப்படுபவருக்கோ சட்டப்படி உரிமை யில்லையென்பதை நிரூபிக்க முயல்வோம். மேலும், மதசம்பந்தமான அல்லது சமுதாய சம்பந்தமான அல்லது சரித்திர சம்பந்தமான காரணங்களைக்கொண்டும் இந்த நாசகரமான ஆலயப் பிரவேச மறுப்பு நியாயமானதுதான் என்று சொல்லவும் முடியாது. ஆனால், இந்த நிலையிலேயே சாதி இந்துக்கள் இன்னும் நிற்பார்களானால், இந்து மதத்திற்கும், இந்து சமூகத்திற்கும் இது வரை ஏற்பட்டிராத கேடு உண்டாகுமென்பது திண்ணம். நியாயவிரோதமானதும், ஒழுக்கவீனமானதும், மதத்துரோக மானதும், இழிவானதும், சுயநலத்தை அடிப்படையாகக்கொண்ட அநீதியானதுமான இத் தடை இந்து மதத்தினுடையவும், இந்து சமுதாயத்தினுடையவும் நலனைக் கருதாதவர்களிடமிருந்தே புறப் பட முடியுமென்பதை வற்புறுத்த வேண்டியதில்லை. சுருங்கச் சொல்லுமிடத்து, இந்துக்கள் என்று சொல்லிக்கொண்டு எதை யாவது சாக்குப்போக்காகக் காட்டித் தம்மைப்போன்ற சகோதர இந்துக்களை ஆலயத்தில் பிரவேசிக்கவும் வணங்கவும் விடாமல் தடுப்பவர் யாராயினும் அவர் இந்து மதத்திற்கும், சமூகத்திற்கும் துரோகிகள் ஆவார்கள்.

ஒரு பேர்பெற்ற இந்திய சட்ட நிபுணர் அடியில் வருமாறு குறிப்பிடுகிறார்:—

"தற்பொழுதுள்ள பழக்க வழக்கங்களைப்பற்றிய சரித்திரத் திற்குரிய ஆதாரம் சந்தேகப்படத்தக்கதாகவும், நிச்சயமற்றதாக வும், உண்மைக்கு மாறானதாகவுமிருப்பதால், கூலி கொடுப்பவரே வேலை வாங்கவேண்டும் என்ற பொதுவான கொள்கையை அனுச ரிப்பதே நலமெனத் தோற்றுகிறது. ஆலய அதிகாரிகள் யார் யாரி டமிருந்தெல்லாம் பணம் பெறவோ, வசூலிக்கவோ செய்கின்றார் களோ, அவரவர்களுக்கெல்லாம், ஒரு காசுங் கொடாதவர்களுக் கிருக்கும் உரிமையையாவது கொடுத்து அவர்களுடன் வணங்கும் படி அனுமதிக்கவேண்டும். சில வகுப்பினர் கோவிலுக்குக் கொடுத் துக்கொண்டும், செலவுசெய்துகொண்டுமிருப்பதும், ஒரு செம்புக் காசுகூடக்கொடாத மற்றவர்கள் சகல உரிமைகளையும் மேலாதா யங்களையும் அனுபவிப்பதும் பெரிய அநீதியானமுறையென்பதில்

கிஞ்சிற்றும் ஐயமில்லை. இந்த நியாயமானது உரிய காலத்தில் அங்கீகரிக்கப்படாவிட்டால், டிரஸ்டிகள் வருவாயில்லாத திண்டாடிக் கடைசியாக ஒப்புக்கொள்ளும்வரையிலும் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் காணிக்கைகள் செலுத்த மறுக்க நேரிடுமென்றோ, அல்லது அவர்கள் இன்னும் ஒரு படி மேற்சென்று, அநியாயமாகவும், பொறுமை காரணமாகவும் தடுக்கப்பட்ட கோவில்களுக்குள் விரைந்தோடிப்புகுவார்களென்றோ எண்ண இடமிருக்கிறது."

கோவில் சம்பந்தமான சட்டவளர்ச்சியைக் கொஞ்சங்கூட ஆராய்வோம். இந்துக்கோவில்கள் வருவாயைக்கருதி ஸ்தாபிக்கப் பட்டவையென்றும், அவைகளிலிருந்து கிடைத்த லாபம் அரசனைச் சேர்ந்ததென்றும் சாணக்கியரிடத்திலிருந்து அறிந்தோம். இரண்டாவதாக, இன்றையதினம் இந்துக்கோவில்களிற் பார்ப்பனனைக் காண்பது எதிர்பாராத சம்பவத்தால் ஏற்பட்டதென்பதையும் கண்டோம். கோவில் பார்ப்பானுக்காகக் கட்டப்பட்டதல்ல; அவன் கோவிலுக்குள் பிரவேசிப்பது அவனுக்கே சமூக இழிவை உண்டுபண்ணும். மேலும் அதனால் அரசனுக்கும் தேசத்துக்கும் ஆபத்துண்டாகும். "விக்கிரக ஆராதனையை மனு இலேசாகச்சுட்டுகிறார்; கோவிலுக்குள் நுழைந்து தொண்டுசெய்யும் பார்ப்பனர்கள் இழிகுலத்தவர் என்பதையும் அவர் குறிப்பிடுகிறார்." என்று ஸ்பென்ஸ் ஹார்டி என்ற மேனாட்டு வடமொழி ஆசிரியர் கூறுகிறார். இந்துக்கோவிலில் பிராமணருக்குப் போஜனமளிக்கும் வழக்கமில்லை; ஆனால் இந்துக்கோவிலிற் புகுந்து வழிபடுவதால் சாதியை விட்டு நீக்கப்பட்ட பிராமணர்களை நடனமாதர் சங்கீதக்காரர்களுடன் சேர்த்து அவர்களுக்கும் போஜனமளித்து வந்தார்கள். சாணக்கியர் காலத்தில் கோவில்களில் பிராமணர்களுக்குப் போஜனமளித்ததாகச் சொல்லப்படவேயில்லை; அங்ஙனம் நடந்திருக்கவுமாட்டாது; ஏனெனில் அது அரசனது வருவாயைப் பாதிக்கும். இவ்விடத்தில் மற்றொரு விஷயத்தைக் கவனிப்போம்.

ஆலயத்திற்குள் வணங்கும் பொருட்டுச் சென்றதினால், பிராமணர்களை அக்காலத்தில் சாதியிலிருந்து நீக்கினார்கள்; ஆனால் இக் காலத்தில் அதே பிராமணர்கள்தாம் எந்தெந்த சாதியார்

கோவிலுக்குள் பிரவேசிக்கலாம், எந்தெந்த சாதியார் பிரவேசிக்கக் கூடாது என்பதைப்பற்றிச் சட்டமியற்ற முன் வந்துவிட்டார்கள்! இவ்விஷயத்தில் பிராமணருடன் சூத்திரர்களான வேளாளர் முதலியோரும் ஒன்றுசேர்கிறார்கள். தென்னிந்தியா முழுவதும், எந்தக் கோவிலுக்குள்ளும் இவ்விரு சமுதாயத்தார்க்கும் (கிழக்குக்கரை வேளாளரும் மேற்குக் கரை நாயர்களும் சமமானவர்) போக உரிமையுண்டென்று கருதப்படுகிறது. இதுமட்டுமல்ல; கோவிலுக்குள் யார் யார் போகலாம், யார் யார் போகக்கூடாதென்று நிர்ணயிக்கும் உரிமை தங்களுக்கிருப்பதாகவும் அவர்கள் கருதுவதாகத் தெரிகிறது.

எந்தக்கோவிலிலாவது ஒரு பிராமணன் புகுவதைக்கண்டால், ஒவ்வொரு இந்துவுக்கும் அதில் பிரவேசிக்க உரிமையுண்டு என்பதை சரித்திரம் ருசுப்பிப்பதாக ஏற்கனவே குறிப்பிட்டுள்ளோம். அதேபோன்று, எக் கோவிலிலாவது ஒரு வேளாளனோ அல்லது மற்றொரு 'சற் சூத்திர'னோ புகக் கண்டால் அக் கோவிலுக்குள் வேறு யாருக்கும், இந்துவல்லாதவருக்குங்கூட, பிரவேசிக்கவும், வணங்கவும் உரிமையுண்டென்பதற்குத் தடையேயில்லை.

இந்துக்கோவிலுக்குள் ஒரு பிராமணன் நுழைவதை இன்று யாரும் தடை செய்யவில்லை; அதுபோலவே ஒரு தேவதாசியையோ, நடன மாதையோ, அல்லது தாசி மக்களையோ தடுப்பதுமில்லை. இத் தாசிமக்களை முன் காலத்தில் தாசிபுத்திரர்களென அழைத்து வந்தார்கள். இந்த தாசி புத்திரர்கள்தாம் இக்காலத்து சூத்திரர்களாவார்கள். அது எவ்வாறாயினும், வேளாளர்கள் உள்பட சூத்திரர்களுக்கு ஆலயப்பிரவேச உரிமையுண்டு என்பதில் சந்தேகமில்லை.

தாசி புத்திரர்களையே சூத்திரர் என அழைத்தார்கள் என்று குறிப்பிடுவதை 'சூத்திரப் பெரியார்கள்' தர்க்கித்தாலும், இந்த 'தாசி மக்கள்' யார் என்பதையும், தென்னிந்திய சமூகத்தில் அவர்கள் எந் நிலையிலிருக்கின்றார்களென்பதையுங் கவனிப்போம்.

"முற்காலத்தில், கோவிற் பணிவிடை காரணமாகத் தாசிகளுக்கு சமுதாயத்தில் ஒரு உயரிய அந்தஸ்திருந்தது. ஆனால் பிற்காலத்தில் அவர்கள் விலைமாதராக மாறிவிட்டபடியால் சமுதாயத்திலும் கீழ் நிலை எய்தினார்கள். எல்லா தாசிகளும் பொட்டுக் கட்டப்படுவதில்லை. மிகச் சிலரே அவ்விதம் செய்கிறார்கள். பலர் தாமாக வேசித்தொழிலி லிறங்குகிறார்கள். ஆனால் பெரும்பாலானவர் கல்யாணஞ் செய்துகொண்டு குடும்ப ஸ்திரீகளாக வாழ்கின்றார்கள். ஆண்களிற் பலர் அந்த சாதியிலேயே கல்யாணஞ் செய்துகொண்டு நடனம், மேளவாத்தியம் இவற்றிற் பழகிப் பெண்களுக்குக் கற்பித்துக்கொண்டும், இத்தொழில்களை நடத்திக் கொண்டும் காலங் கடத்துகிறார்கள்; மற்றும் பலர் வேறு சாதிகளில் மணமுடித்து, வேறு தொழில்களைக் கைக்கொண்டு, தம் பிறப்பினால் ஏற்பட்ட குறையை மாற்ற முயல்வதோடு கவுரவமான சூத்திர சமுதாயத்தில் இரண்டறக்கலந்தும் விடுகிறார்கள்" என்று பேர்பெற்ற மேனாட்டு சரித்திராசிரியர் ஒருவர் குறிப்பிடுகின்றார். இது மணிமேகலை காலத்திலேயே நடைபெற ஆரம்பித்துவிட்டது. (இக்காலத்து தேவதாசிகள், பாத்தையர் என இழிவாகக் கூறப்படுவோர் முற்காலத்து நம் முன்னோர்களால் தம் குடும்பங்களினின்றும் உயரிய நோக்கத்துடன் ஆலயத் தொண்டிற்காக விடப்பட்டவர்களின் சந்ததியார் என்பது சரித்திரமூலம் வெளியாகின்றது.)

பிராமணனது கொடிவழி அல்லது உற்பத்தி எவ்வாறு அவனது ரிஷிகளில் மறைந்து கிடக்கின்றதோ அதேபோன்று வேளாளர்கள் அல்லது சூத்திரர்களது உற்பத்தியும் தேவதாசியிடம் மறைந்து கிடக்கின்றது என்று சொன்னால், தமிழ்நாட்டார் வம்ச சரித்திரத்திற்கு எத்தகைய அவமானமும் ஏற்பட்டுவிடாது. வம்சத்தைப் பொறுத்தவரையில் பிராமணன் எவ்வளவு 'சர்வதேசாபிமானி'யோ அவ்வளவு சூத்திரனும் 'சர்வதேசாபிமானி'தான். தமிழ் மகள் மணிமேகலையை விட ஒரு உயரிய பெண்மணி இந் நாட்டில் அவதரித்ததில்லை. தமிழ் நாட்டில் தாசி மக்கள் கவுரவ சூத்திரர்களானார்கள்; அச் சூத்திரர்களே பின் தென்னாட்டுப் பார்ப்பனராகத் திரிந்தார்கள்.

நீதிபதி ஸர். டி. சதாசிவ ஐயரவர்கள் பணகுடி ஆலய வழக்கில் அடியில் வருமாறு குறிப்பிட்டார்:—

"சூத்திரர்க்குள்ளும் மேல்சாதிக்காரர்களென்று கருதிக்கொள்பவர்கள், சூத்திரக்கீழ்சாதிக்காரரைத் தீண்டுவதில்லை; அவ்வாறு தீண்டுவதால் மத ஆசாரப்படி தீட்டு ஏற்படுமென்பதில்லையாயினும் தீண்டுவதில்லை. இந்தக் கேஸில் பிரதிவாதி தரப்பில் முதலாவது சாக்ஷி 'நான் சூத்திரன். வெள்ளாள சாதி; ஆனால் கீழ்சாதி வெள்ளாளர்களை நான் தீண்டுவதில்லை' என்று சொல்லுகிறார். இவ்விதம் தீண்டாதது மத சம்பந்தமான கொள்கையாலல்ல; ஆனால் தற்கால சாதிச்செருக்கினால் ஏற்பட்டதாகும். வகுப்பு உயர்வு தாழ்வு உணர்ச்சியைப் பெருமிதப்படுத்துவதினால் ஏற்படும் கொள்கையாகும். ஏற்கனவே யிருந்துவரும் சாதிபேதவுணர்ச்சிக்குப் பக்கபலமாக, சாதிகளுக்குள்ளேயே 'வகுப்பு' பேதவுணர்ச்சியானது சமீபகாலத்தில் தோன்றியுள்ளது."

தாசிமக்களின் தந்தையைக் குறிப்பிடுவது பெரும்பாலும் கஷ்டமாகவே முடியும். அதைக்குறித்து நாம் இங்கு விவாதிக்கப்போவதில்லை. ஆனால் அது (Cosmopolitan) 'சர்வதேசாபிமான'த் தன்மையுடையது என்பதை மட்டிலும் குறிப்பிடுவோம். ஆனால் இங்கு சட்டசம்பந்தமான ஒரு விஷயத்தை மட்டும் கவனிப்பது அவசியமாகின்றது. எப்படி தாசிகளுக்குள் சொத்து வார்சுரிமை விஷயத்தில் தகப்பன் அந்தஸ்தைக் கவனியாது தாயின் அந்தஸ்தைமட்டும் கணக்கிடுகிறார்களோ அதேபோன்று மலையாளிகளுக்குள்ளும் தாயின் அந்தஸ்தை மட்டுமே கவனிப்பார்கள்.

ஆகவே, இதுகாறும் கூறியவற்றிலிருந்து பிராமணனோ, தாசியோ, கௌரவமான சூத்திரர் உள்ளிட்ட தாசி புத்திரரோ பிரவேசிக்கும் எந்தக் கோவிலிலும், ஒவ்வொரு இந்துவுக்கும்—எந்த சாதியைச் சேர்ந்த இந்துவுக்கும், தீண்டாதவராகவோ, தாழ்த்தப்பட்டவராகவோ, ஒதுக்கப்பட்டவராகவோ இருந்தாலும், இந்துவென அழைக்கப்படும் ஒவ்வொருவருக்கும், அரசாங்கத்தார் இந்துவென அங்கீகரிக்கும் ஒவ்வொருவருக்கும், பிரவேசிக்கவும், தரிசிக்கவும் உரிமையுண்டு என்பதற்கு சரித்திரபூர்வமாக ஏராளமான ஆதாரமிருக்கின்றதென்பதைக் கண்டோம்.

# அத்தியாயம் 6.

இந்தியாவை இன்றுவரையிலும் ஆண்டுவந்த இந்து முஸ்லீம், கிறிஸ்தவ அரசர்களெல்லாம் கோவில் வருமானத்தை அரசாங்கப் பொது வருமானமாகவே கருதி நடத்தி வந்தார்கள்.

“கடவுளுக்கு அர்ப்பணஞ்செய்த சொத்தை அரசன் எடுக்கக்கூடாது” என்று (சாணக்கியர் காலத்திற்குப் பின் ஏற்பட்ட) இந்து ஸ்மிருதிகள் வரையறுத்திருக்கின்றனவென்பதில் சந்தேகமில்லை. ஒருவேளை இங்கிலாந்தில் இம்மாதிரி ஸ்மிருதிகளில்லாத காரணத்தாலேயே, ‘எட்டாவது ஹென்ரி அரசரும், கிராம்வெல் என்பாரும் மதஸ்தாபனச் சொத்துக்களைத் தயக்கமில்லாமல் அபகரித்தார்கள்போலும்!” ஆனல், இந்தியாவில் ஸ்மிருதிகளிருந்தபோதிலும், முற்கால இந்து மன்னர்கள் தங்களது ‘தூர்ந்துபோன பொக்கிஷங்களை நிரப்புவதற்கு’ இக்கோவில் வருமானத்தையே உபயோகப்படுத்திக்கொண்டிருந்தார்கள்.

ஸ்மிருதிகளுக்கு விரோதமாக அரசர்கள் இவ்வாறு நடப்பதைக் கண்டித்து இந்து வழக்கறிஞர் ஒருவர் அடியில்வருமாறு எழுதுகிருர்:—

“முற்கால இந்து அரசர்கள் தேவஸ்தானச்சொத்துக்களை மனம்போல் கொள்ளையடித்தார்கள்; ஆனல் போலி மடங்களையும் வேஷ சந்நியாசிகளையும், பொய்க்கடவுள்களையும் சிருஷ்டித்து ஏமாந்த மக்களிடமிருந்து பணம் வசூலிக்கத்தக்க முறையைக் கௌடில்யர் (சாணக்கியர்) அரசர்களுக்கு வகுத்தது வேறெந்தக் கொள்ளையையும் தோற்கடித்து விட்டது. எனவே அரசர்கள் தர்ம சொத்துக்களுக்குப் போஷகர்களாகவும் பாதுகாப்பாளர்களாகவு மிருப்பதைவிட்டு அவற்றைக் கொள்ளையடிப்பவர்களாக இருந்தார்கள். சாணக்கியரது அர்த்த சாஸ்திரத்தைப் பின்பற்றி இவர்கள் ஸ்மிருதிகளைக்காற்றில் பறக்கவிட்டார்கள். கோவில்களையும் மற்ற புண்ணியஸ்தலங்களையும் தமக்கு ஆதாயம் தரக்கூடிய கருவிகளாக அரசர்கள் உபயோகப்படுத்தி வந்தார்கள்.”

இதிலிருந்து அறியக்கிடப்பது என்ன? பண்டைக்கால இந்து மன்னர்கள் இந்த 'நல்ல' ஸ்மிருதிகளைக் குப்பைத்தொட்டியிற் போடும் காகிதமாகக்கருதினார்கள் என்பதேயாம். 'தயக்கமற்ற' சாணக்கியரைப் பின்பற்றுவதே நலமெனக்கொண்டார்கள்.

சாணக்கியர் ஸ்மிருதிகளுக்கு முற்பட்டவர். சாணக்கியரது அர்த்தசாஸ்திரத்தைச் சீர்திருத்தவே பிற்காலத்துப் பார்ப்பனர்கள் தங்கள் மனம் போனவாறு ஸ்மிருதிகளை வகுத்தார்கள். அர்த்த சாஸ்திரத்துக்கும் ஸ்மிருதிகளுக்கும் ஏற்பட்ட போரில் அர்த்த சாஸ்திரமே வெற்றிபெற்றதனால், ஸ்மிருதிகளைப் பின்பற்றினவர் யாரும் இருந்ததில்லை. சரித்திர சம்பந்தமாகவும், சட்ட சம்பந்த மாகவும் இது மிக முக்கியமானதாகும்.

ஸ்மிருதிகள் ஏற்பட்ட காலம் முதல், இங்கிலீஷ் கோர்ட்டு கள் ஏற்பட்ட காலம்வரை, இந்த ஸ்மிருதிகள் பார்ப்பானது முற்றுப்பெறாத ஆசைப்பொருள்களாகவே இருந்து வந்தன. ஐரோப்பியர்கள் வந்தபிறகு இந்த ஸ்மிருதிகள் புத்துயிர் பெற்றன. அவர்கள் வடமொழி மீது அளவற்ற ஆர்வங்கொண்டார்கள். காலஞ்சென்ற ஜே. டி. மெயின் போன்ற மேனாட்டு வழக்கறிஞர்களையும் இத் தொத்துவியாதி பீடித்தது. ஏனெனில் அக்காலத்தில் இதனால் இவர்களுக்கு லாபம் கிடைத்தது. இவர்களோ தாங்கள் வடமொழியறிந்தவர்களுமல்ல, சரித்திரக்காரர்களுமல்லவென்றும் ஒப்புக்கொண்டுவிட்டார்கள். எனினும் ஸ்மிருதிகள் வெறும் கதைகளல்ல; சரித்திரத்தை வெளிப்படுத்துபவைதான் என இவர்களைப் போன்றவர்கள் வானளாவக் கதை கட்டிவிட்டார்கள். பார்ப்பன வக்கீல்களும் ஜட்ஜிகளும் இதைக்கண்டு மட்டற்ற மகிழ்ச்சியுற்றார்கள். காட்டுத்தீப்போல் இக்கொள்கை பரவிற்று. இதன் முடிவு என்ன ஆயிற்று? ஸ்மிருதிகளிலில்லாத எதுவும் 'பழக்கவழக்க'த்தை ஒட்டினதுமல்ல, சரித்திரத்தின்படி ஒப்பக்கூடியதுமல்லவென்பதேயாம். அந்தோ! திரு. எம். ஆர். ஜெயகர் அவர்கள் பெண்கள் சொத்துரிமையைப்பற்றி வாதித்தபோது பிரிவிகௌன்ஸில் கூட ஸ்மிருதிகளால் ஏமாற்றமடைந்தது என்று சொன்னது போல, இந்துச் சட்டம் சம்பந்தப்பட்ட ஒவ்வொரு பிரிவிலும்,

பிரிவி கௌன்சில் ஜுடிஷியல் கமிட்டிகூட ஸ்மிருதிவாலாக்களின் கட்டுக்கதைகளை நம்பி மோசம்போனார்கள் என்று வளர்ந்து கொண்டேவரும் சரித்திர ஆராய்ச்சிமூலம் நன்கு தெளிவாகின்றது. இங்கிலீஷ்காரர்கள் பார்ப்பன வலையிற் சிக்கினார்கள். பார்ப்பனருடைய அதிசயிக்கத்தக்க சிருஷ்டிப்பொருள்களான இந்த ஸ்மிருதிகள் பெரிய வஞ்சனைப் பொருள்களாகும். சட்டத்தின் சரித்திரத்திலே இது ஒரு கறையாக இருந்து வருகிறது. எனவே ஸ்மிருதிகளெதுவும் சரித்திரத்தை ஒட்டியதுமல்ல; சட்டத்தை ஒட்டியதுமல்ல. 'ஒரு குலத்துக்கொரு நீதி' வழங்கிய பார்ப்பனக் குறும்பேயாகும்.

சென்னைச் சட்ட நிபுணர் ஒருவர் அடியில் வருமாறு எழுதுகிறார்:—

"சாஸ்திரங்களிற் கண்டுள்ள இந்துச் சட்டமானது இந் நாடு முற்றிலுமுள்ள இருபது கோடி இந்துக்களுக்கும் பொதுவானதாகக் கருதப்பட்டிருக்கவில்லை. வட மாகாணங்களிலுள்ள ஆரியப் பார்ப்பனர்களுக்காக மட்டும், அல்லது பார்ப்பனருடைய விதிகளை அனுஷ்டிக்கும் ஒரு சில சாதிகளுக்காவும் ஒருவேளை இந்தச் சட்டம் வகுக்கப்பட்டிருக்கக்கூடும். இந்த விஷயத்தை ஆராய்ச்சி செய்தவர்கள், மானவர்கள் (Manavas) என்ற சாதியார்களுக்காகவே மனு தனது சாஸ்திரத்தை எழுதினதாகச் சொல்லுகிறார்கள். சாம வேதத்தைப் பின்பற்றிய சண்டோஜர்களுக்காக கௌதமர் தமது சட்டத்தை வகுத்தார். யஜுர் வேதத்தைப் பின்பற்றிய (Vajasanyeji) வாஜஸன்யேஜிப் புரோகிதர்களுக்காக யக்ஞவல்கியர் தமது சட்டத்தை வகுத்தார். மீதியுள்ள சமூகங்களெல்லாம், இலங்கையிலிப்பொழுது மிருப்பதுபோல அந்தந்த சாதிக்கேற்ற தேசவழமைப்படி பழக்க வழக்கங்களைக் கைக்கொண்டார்கள். ஒன்றுக்கொன்று முரணான பண்டைக்காலச்சட்ட திட்டங்களையெல்லாம் சகல சாதி மக்களுக்கும் பொதுவாக்கி முன் காலத்தில் ஒரு சிறு சாதியினருக்காக ஏற்படுத்தப்பட்ட கட்டுப்பாடுகளைக் கொண்டு எல்லா சாதியினரையும் கட்டுவதற்கு அதிஷ்டான மெதுவுமில்லை. வேறெந்த தேசத்திலும் இதைப்

போன்ற சட்டமுறையில்லை. தற்கால சமூகங்களின் நிலைமைகளையோ, தேவைகளையோ இந்துக்களது சட்டம் கவனிப்பதில்லை. முன்னேற்றம், சமாதானம், நீதி இவற்றின் தேவைகளை மறந்துவிட்டதனால், பொதுமக்களை ஒரு பிசாசு பிடித்து அழுத்துவதுபோலிருந்துவருகிறது. அவர்களுடைய துன்பத்தையும், ஓலத்தையும் சட்டைசெய்வாரில்லை. முன்னர் கைக்கொண்டிருந்த சிறந்த பழக்கவழக்கங்களைப் பல சமூகங்கள் முற்றிலும்விட்டுவிட்டுச் சில வகுப்பாருடைய கேடுதரத்தக்க குறுகிய மனப்பான்மையை வளர்க்கும் பழக்கவழக்கங்களைப் பின்பற்ற ஆரம்பித்துவிட்டன.''

திரு. ஜே ஸி. கோஷ் அவர்கள் சொல்வதுபோல முற்காலத்து இந்து அரசர்களே ஸ்மிருதிகளைப் பின்பற்றவில்லையானால், அதற்குப் பின் இந்தியாவைக் கைப்பற்றிய முஸ்லிம் அரசாங்கத்தாராவது கிறிஸ்தவ அரசாங்கத்தாராவது இந்த ஸ்மிருதிகளைப் பின்பற்றினார்களா?

"தனவந்தர்கள் கோவில்களுக்குக் கொடுக்கும் காணிக்கைகளைப் புரோகிதர்கள் தங்களுடைய கௌரவத்துக்கும் அந்தஸ்துக்குந்தக்கபடி பகிர்ந்துகொள்வது வழக்கம். பல முக்கியமான கோவில்களில் இவ்வாறு பகிரப்படும் பாகமானது சில சமயங்களில் அரசர்களும், முக்கியமாக முஸ்லிம் மன்னர்களும் ஆசைப்படும்படி அவ்வளவு ஏராளமாக இருந்தது. மகமதிய மன்னர்கள், இந்து மதத்தை வெறுத்தபோதிலும் அதை எதிர்க்காது, இந்துக் கோவில்களில் ஏற்படும் காணிக்கைகளில் பெரும் பகுதியை எடுத்துக்கொள்வது சரியென நினைத்தார்கள்'' என்பதாக ஆபிபோய் என்ற பிரஞ்சுப் பாதிரியார் ஈஸ்டு இந்தியக்கம்பனி சிப்பந்திகள் அறிந்துகொள்ளுமாறு 1816-ல் தமது புத்தகத்தில் எழுதியுள்ளார். எனவே மகமதிய அரசாங்க காலத்தும், இந்து மன்னர்கள் செய்துவந்த மாதிரியே இந்துக்கோவில் வருமானத்தை அரசாங்கத்தார் கைப்பற்றி வந்தார்களென்று தெரிகிறது.

மதுரைக் கோவிலுக்கு சம்பந்தப்பட்ட ஒரு கட்டளை விஷயமாக ஏற்பட்ட வழக்கில் பிரிவி கௌன்ஸிலார் அடியில்வருமாறு கூறியிருக்கின்றார்கள்:—

"இந்தக் கட்டளை ஏற்படுத்திய உடன்தானே (1704, 1735 இவ்வாண்டுகளுக்கிடையில்) மகமதிய அரசாங்கத்தார் இந்தக் கிராமங்களைக் கைப்பற்றி, கி. பி. 1790 வரையிலும், அதாவது சென்னை கவர்ன்மெண்டார் கையில் மதுரை ஜில்லா சேரும் வரையிலும் வைத்திருந்தார்கள். 1801-ல் இந்தக்கிராமங்கள் ஈஸ்டு இந்தியக் கம்பனியார் கைக்குவந்து 1849-வரையில் அவர்கள் வசமேயிருந்தன. அதன்பிறகு (1817-ம் வருஷத்து 7-வது சட்டப்படி அளிக்கப்பட்ட அதிகாரங்களின்படி 1842-ல் கம்பெனியாரால் நியமிக்கப்பட்ட) மதுரைக்கோவில் மானேஜரிடம் இந்தக் கிராமங்கள் ஒப்புவிக்கப்பட்டன.

"இக்காலங்களில், இந்தக்கிராமங்களிலிருந்து வந்த வருமானம் பல வழிகளிலும் செலவிடப்பட்டது. மகமதிய அரசாங்கத்தார் கையிலிருந்தபோது, வருமானத்தில் ஒரு பாகத்தை ஸ்தாபனத்துக்காகச் செலவிட்டுவிட்டு, மீதியை மகமதிய அரசாங்கத்தாரே எடுத்துக்கொண்டார்கள். சென்னை அரசாங்கத்தார் வசமிருந்தபோது அதாவது 1790-முதல் 1801-வரையிலும் இந்த வருமானம் எங்கு போயிற்று என்று விளங்கவில்லை. 1801-முதல் 1849-வரையிலும் கம்பெனியார் கையிலிருந்தபோது, சிலசமயங்களில் முழுவதும், சிலசமயங்களில் கொஞ்சபாகமும் அந்த ஸ்தாபனத்துக்காகச் செலவுசெய்யப்பட்டதாகத் தெரிகிறது. ஆரம்பத்தில் முழுவதையும் கட்டளைக்காகக் கொடுத்துவந்தார்கள். ஆனால் 1817-ம் ஆண்டுமுதல் வருஷந்தோறும் ஒரு வரவு செலவு கணக்குப்போட்டு அதன்படி தேவைப்பட்டதைமட்டும் கொடுத்துவிட்டு, மீதி முழுவதையும் கம்பெனியாரே எடுத்துவந்தார்கள். 1849-ம் ஆண்டுக்குப்பிறகு, வருமானம் முழுவதையும் கட்டளைச் செலவுக்கும் கோவிற்செலவுக்குமாகக் கோவில் மானேஜரும் தேவஸ்தானக்கமிட்டியாரும் சொன்னபடி கொடுத்துவந்தார்கள்." இந்தக்கட்டளை சம்பந்தமான தஸ்தவேஜிகள் எதுவுமில்லை;

எக்காலத்தில், எப்படி இந்த கிராமங்கள் தர்மத்துக்கு விடப்பட்டன என்பதுந் தெரியாது; இப்பேர்ப்பட்ட கட்டளையைக் குறித்தே, மேற் கண்டவாறு பிரிவி கவுன்ஸிலார் அபிப்பிராயம் வெளியிட்டுள்ளார்கள். இதைப்பற்றிப்பின்னர் கவனிக்கநேரிடும். எனினும் இங்கு குறிப்பிடவேண்டியது ஒன்றுண்டு; அது, இந்தக் கோவில் சொத்துக்களின் மேல் வருமானமானது சிறு சிறு பாகமாகவோ அல்து முழுமையாகவோ அரசாங்கத்தார்கையில் பொது வருவாயாகச் சேர்ந்துகொண்டேயிருந்தது என்பதாகும்.

பொதுவாக, பிரிட்டிஷ் அரசாங்கத்தார் இந்த மதஸ்தாபனங்களின் பரிபாலனத்தை விட்டொழிந்து கைகைக்கழுவிய காலம் வரையிலும் அதாவது 1863-ம் வருஷம் வரையிலும் "கடவுளுக்கு அர்ப்பணம் செய்யப்பட்ட சொத்தை அரசன் எடுக்கக்கூடாது" என்று சொன்ன பழைய ஸ்மிருதிகள் காற்றில்பஞ்சாய்ப் பறந்தன. எக்காலத்தும் ஆதி முதற்கொண்டு, கோவில்வருமானத்தை, நியாயமான பொதுவருமானமாகவே, இந்து மகமதிய, கிறிஸ்தவ அரசாங்கத்தாரும் கூடக் கருதிவந்தார்கள். ஸ்மிருதிகள் யாரையுங் கட்டுப்படுத்தவில்லை. சாணக்கியரை ஒருவரும் மறக்கவில்லை.

திருமலை திருப்பதி தேவஸ்தானங்கள் (மொத்தம் 34) சம்பந்தமாக ஏற்பட்ட ஒரு வழக்கில், சென்னை ஹைக்கோர்ட்டார் (பிரதம நீதிபதி ஸர் அர்னால்டு ஒயிற்று அவர்களும், நீதிபதி எயிலின் அவர்களும் சேர்ந்து) சொன்ன தீர்ப்பில் குறிப்பிட்டதாவது:—

"முதலாவதாக இந்த மூப்பத்துநான்கு தேவஸ்தானங்களுக்கும் பணமோ, நிலமோ ஒன்றுங்கிடையாது. அவைகளைச்சேர்ந்த இனும் நிலங்களெல்லாம் கோவிலில் ஊழியம் புரிபவர்களுக்குப் பிரதிபலனாக அளிக்கப்பட்டவையேயன்றி, கோவில் பொதுவருமானத்தைச் சேர்ந்தவையல்ல. ஆனல் பக்தர்களும் ஸ்தல யாத்திரீகர்களும் அளிக்கும் காணிக்கைகள்மூலம் ஏராளமான வருமானம் (வருஷத்துக்கு மூன்றுலட்சம் ரூபாய்க்குக் குறையாதபடி) கிடைக்கிறது. இந்தக்காணிக்கைகள் நல்ல வியாபார முறையில் வசூலிக்கப்பட்டுவருகின்றன. பக்தர்கள் தெய்வத்துக்கு நடத்தும்

ஒவ்வொரு வழிபாட்டிற்கும் கட்டணம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. உதாரணமாக விக்கிரகத்துக்கு ஒருவர் ஒரு ஆபரணத்தை அர்ப்பணஞ்செய்ய உத்தேசித்தால், அந்த ஆபரணத்தோடு அதன் விலைக்குச்சமமான ரொக்கப்பணமும் கோவில்வகைக்காகக் கொடுத்தால்தான் அதை அர்ப்பணஞ்செய்யலாம்; இல்லாவிட்டால் அந்த ஆபரணத்தைக் கடவுளுக்குப் பூட்டி தரிசிக்க முடியாது. ஒரு பக்தன் சூடன் கொளுத்த விரும்பினால், அதற்குரிய கட்டணத்தை முன்னதாகவே செலுத்திவிடவேண்டும். எல்லாக் காரியங்களுக்கும் இதே விதிதான்."

"இதைவிட முக்கியமான விஷயம் ஒன்று குறிப்பிடவேண்டும். 1843-ம் வருஷம் வரையிலும், அதாவது பிரதிவாதிகளின் முன்னோர் டிரஸ்டியாக நியமிக்கப்படுவதுவரையிலும், கோவிற் செலவுபோக மீதமான வருமானம் முழுவதையும் அரசாங்கத்தாரே கைப்பற்றிவந்தார்கள் என்பதாகும். இந்த நடைமுறை, பிரிட்டிஷ் அரசாங்கத்தார் தமக்கு முந்திய இந்து முஸ்லிம் அரசாங்கத்தாரிடமிருந்து பிதுரார்ஜிதமாகப் பெற்றுக்கொண்டதாகும்; இது பண்டைக்காலம் முதலேயிருந்து வந்திருக்கிறது. மேற்கண்ட கோவில்களிலிருந்து அரசாங்கத்தாருக்கு, பத்தொன்பதாவது நூற்றாண்டு ஆரம்பத்தில் வருஷந்தோறும் கிடைத்த தொகை கிட்டத்தட்ட இரண்டுலட்சம் ரூபாயாகும்."

"இவ்விதமாக லாபம் கிடைத்தது காரணமாக, பிரிட்டிஷ் அரசாங்கத்தார் 1843-ம் வருஷம்வரைத் தமது கலக்டர், தாசீல்தார் இவர்கள் மூலமாகக் கோவில் காரியங்களை மிக நுணுக்கமாகவே மேல்பார்த்து வந்தார்கள் என்று தஸ்தவேஜிகள் மூலம் தெரியவருகிறது. இக்கோவில்களை ஸர்க்கார் இலாகாவைப்போலவே கருதி, அதிக சிரத்தையெடுத்து அனுவசியமான செலவுகளைக் குறைத்தும், வருமானத்தை அதிகரித்தும், பணம் எவ்வழியிலும் திருட்டுப்போகாமல் பாதுகாத்தும் வந்தார்கள்."

இந்தப்பொருள் செறிந்த தீர்ப்பை நாம் எப்பொழுதும் மனத்தில் பதிய வைத்துக்கொள்வது அவசியம்; இதுவரை நாம்சொல்லி வருவதை இது நன்கு உறுதிப்படுத்துகின்றது. இதிலிருந்து நாம்

அறியக்கிடப்பது என்னவென்றால், "கோவில் வருமானமெல்லாம் அரசாங்கத்தாரைச் சேர்ந்தது. இம்முறையானது, பிரிட்டிஷ் அரசாங்கத்தாருக்கு முன்னிருந்த இந்து, முஸ்லிம் அரசாங்கங்களிடமிருந்து கிடைத்த பிதுரார்ஜிதமாகும். இதுதான் மாமூல்; பழக்க வழக்கம்." இந்த மேற்கோளை நாம் இன்னும் பலவிடங்களிலும் உபயோகிக்க நேரிடும்.

## அத்தியாயம் 7.

ஒரு பொதுக்கோவிலில் பிரவேசிக்கவும், வணங்கவும் செய்யாமல் ஒரு இந்துவை, தடை செய்ய சட்டப்படி யாருக்கு அதிகாரமிருக்கிறது? 'டிரஸ்டி'களுக்கோ, தேவஸ்தானக்கமிட்டியாருக்கோ இந்த அதிகாரம் உண்டா? இவ்விரு சாராருக்கும் ஏற்பட்டுள்ள உரிமைகள் ஒருப்போல இருப்பதாகத் தெரிகிறது. இந்து சமூகத்தைச் சேர்ந்த ஏனைய வகுப்பார்களுடைய உரிமைகளைப் பற்றிப் பின்னால் கவனிப்போம்.

"டிரஸ்டிகளுடையவும், கமிட்டிகளுடையவும் சரித்திரத்தை முதலாவதாக ஆராய்வோம். பிரிவி கௌன்ஸிலின் ஜுடிஷியல் கமிட்டியார் சுருங்கிய பாஷையில் இவ்வாறு சொல்லுகிறார்கள்:—

1810–ல் வங்காள மாகாணத்திலும், 1817-ல் சென்னை மாகாணத்திலும், சகல இந்து, மகமதிய பொதுஸ்தாபனங்களையும், தர்மங்களையும் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் தமது ஆதீனத்தில் எடுத்து, அவைகளைத் தங்கள் ரெவனியூ போர்டார்களிடம் ஒப்படைத்தார்கள். 1863-ல் இங்கு குறிப்பிடவேண்டிய ஆவசியமில்லாத சில காரணங்களை முன்னிட்டு, கவர்ன்மென்றார் இம்மத ஸ்தாபனங்களையும், தர்மங்களையும் தங்கள் ஆதீனத்தினின்றும் வேறுபடுத்தி, அந்தந்த மதஸ்தர்களின் நிர்வாகத்துக்கு உட்படுத்துவது உசிதமெனக் கருதினார்கள். இக்கருத்துடன், 1863-ம் வருட 20-வது சட்டத்தை அமைத்தார்கள்; 'கமிட்டிகள்' என்ற

திட்டத்தைக் கொண்டுவந்து, ஏற்கனவே கவர்ன்மெண்டுக்கிருந்த 'மானேஜர், டிரஸ்டி, சூப்பிரண்டு' ஆகியவர்களை நியமிக்கும் அதிகாரத்தை இக்கமிட்டியாருக்கு விட்டுக்கொடுத்தார்கள். சரியானபடி நிர்வகிக்கவும், நிர்வாகத்தில் குற்றங்கள் ஏற்பட்டால் அவற்றை விசாரணை செய்யும் பொருட்டு அந்தந்த ஜில்லாவிலுள்ள உயர்தரக்கோர்ட்டாருக்கு அதிகாரமளிக்கவும் தக்க சட்ட திட்டங்களை வகுத்தார்கள். இவை இந்த சட்டதிட்டத்தின் சுருக்கமான பொது லட்சியங்களாகும். இந்த சட்டத்தில், 'டிரஸ்டி' என்ற வார்த்தையின் பொருளை விளக்கவில்லை. 'மானேஜர், டிரஸ்டி, சூப்பிரண்டு' ஆகிய பதங்களை யாதொருவித வித்தியாசமுமில்லாமல் இந்தச்சட்டத்தில் உபயோகப்படுத்தியிருப்பதிலிருந்து, நிர்வாகம் சரியாகவிருக்கவேண்டும் என்ற ஒரே நோக்கத்துடனேயே இவற்றைப் பிரயோகிப்பதாகத் தெரிகிறது. 1863-ம் ஆண்டுச்சட்டத்திற்குப்பிறகு, பொதுவாகக்கூறுமிடத்து, முன் கவர்ன்மெண்டுக்கிருந்த 'மானேஜர், டிரஸ்டி, சூப்பிரண்டு'களை நியமிக்கும் அதிகாரங்களும் தர்மசொத்து பரிபாலனத்தை ஒப்புக்கொண்ட இக்கமிட்டிக்கு கவர்ன்மெண்டாரால் கொடுக்கப்பட்டன."

இங்கே இரண்டு விஷயங்களைக் கவனிக்கவேண்டும். இவ்விதம் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் தங்கள் ஆதீனத்திலிருந்த இந்து முஸ்லிம் மதஸ்தாபனங்களை வேறு ஆதீனத்திற்கு மாற்றவேண்டிய காரணமென்னவென்பதைக் குறிப்பிடவில்லை. 'குறிப்பிடவேண்டிய அவசியமில்லை' என்றுமட்டுஞ் சொன்னார்கள். இரண்டாவதாக, பிரிட்டிஷ் அரசாங்கத்தார் தங்கள் அதிகாரங்களை அந்தந்த மதஸ்தர்களுக்கு, அதாவது இந்து மகமதிய மதஸ்தர்களுக்கு விட்டுக்கொடுத்தார்களென்பது. அதாவது இந்த அதிகாரமானது இந்து சமுதாயத்தைச்சேர்ந்த ஒரு தனிப்பட்ட வகுப்பு, சாதி, பிரிவு அல்லது சமூகத்துக்குமட்டும் மாற்றப்படவில்லையென்பது; அவ்வாறு உத்தேசிக்கப்படவுமில்லை; ஆனால் இந்துக்களனைவருக்கும் மாற்றப்பட்டதாகும். இது மிகவும் முக்கியமான விஷயம். இது போலவே மற்றொரு கேஸிலும் ஜூடிஷியல் கமிட்டியார் இவ்வாறு

கவனமாகப் பதங்களை உபயோகித்திருக்கிறார்கள். "கவர்ன் மென்றார் இப்பொறுப்பைத் தங்கள் ஆதீனத்தினின்றும் வேறு படுத்தி அந்தந்த மதஸ்தர்களின் அதிகாரத்துக்குட்படுத்தினார் கள்."

திருப்பதி ஸ்கீம் வழக்கில், சென்னை ஹைக்கோர்ட்டார் (நீதிபதிகள் சுப்பிரமணிய ஐயரவர்களும், டேவிஸ் துரை அவர் களும்) அடியில்வருமாறு குறிப்பிட்டுள்ளார்கள்:—

"வட ஆற்காடு ஜில்லாவிலுள்ள ஸ்ரீமலை அல்லது திருப் பதியில் அமைந்திருக்கும் ஸ்ரீ வெங்கடேஸ்வரப் பெருமாள் கோவில் ஒரு புராதன இந்துக்கோவிலாகும். இந்தியாவின் நானு பாகங்களிலிருந்தும் இங்கு பக்தர்கள் தரிசிக்க வருகிறார்கள். வருஷந்தோறும் இரண்டு லட்சம் முதல் மூன்று லட்சம் ரூபா வரையிலும் வருமானமுள்ளது. பிரிட்டிஷ் அரசாட்சி ஏற்படுமுன் அவ்வப்போதிருந்த அரசரின் ஆதீனத்தில் இந்தக் கோவில் இருந்து வந்தது. பிரிட்டிஷார் வந்த பிற்பாடு, ஈஸ்டு இந்திய கம்பெனியார் வசம் சென்றது. 1817-ம் வருஷத்தில் சட்டமியற்றின பிறகு, அந்த ஜில்லா கலக்டர் மூலமாக ரிவனியூ போர்டார் நிர்வாகத் தை நடத்திவந்தார்கள். இனிமேல் கவர்ன்மெண்டு உத்தியோ கஸ்தர்கள் சுதேசக்கோவில்கள், மதஸ்தாபனங்கள் இவைகளில் தலையிடக்கூடாதென 1841-ல் சீமையிலுள்ள கம்பெனி டயரக்டர் கள் உத்தரவிட்டதின்மேல், 1843-ல் இந்தக்கோவில் நிர்வாகம் திருப்பதி மலையடிவாரத்திலிருந்த அதிராம்ஜி மடத்துத்தலைவர் ஸேவதாஸ் என்பவரிடம் ஒப்புவிக்கப்பட்டது. அவ்விதம் ஒப்பு வித்தகாலத்தில், ஸேவதாஸுக்குக் கொடுக்கப்பட்ட அதிகாரப் பத்திரத்தில், ஸேவதாஸுக்குப்பின்னால் அதிராம்ஜி மடத்தலைவர் களாக வருபவர்களும் திருப்பதி கோவிலின் மானேஜர் அல்லது விசாரணை கர்த்தாவாக இருக்கவேண்டும் என்றும் குறிப்பிடப் பட்டது." இந்தத்தீர்ப்பிலும், இந்துக்கோவில்களில் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் தலையிடக்கூடாது என்று சீமையிலுள்ள கம் பெனி டயரக்டர்கள் உத்தரவிடுமாறு யார் தூண்டினார்களென்பது குறிப்பிடவில்லை.

"ரெவனியூ போர்டார் இந்தக்கோவில்களின் நிர்வாகத்தை வைத்திருப்பதைப் பலர் ஆட்சேபித்தார்கள். இவ்வாறு ஆட்சேபித்தவர்கள் இந்துக்களல்ல; ஆனால், கிறிஸ்தவப் பாதிரிகளிடமிருந்தே ஆட்சேபங்கிளம்பியது. விக்கிரக ஆராதனையுடைய கோவில்களைக்கிறிஸ்தவ கவர்ன்மேண்டார்பரிபாலிப்பதை அவர்கள் எதிர்த்தார்கள். அவர்களிட்ட பெருங் கூக்குரலைக்கேட்டு, கோவில்களையும், மதஸ்தாபனங்களையும் யார் யாரிடம் ஒப்புவிக்கலாமென்பதைப்பற்றி அறிக்கையனுப்புமாறு 1841-ல் கவர்ன்மென்ளுர் கலக்டர்களுக்கு உத்தரவிட்டார்கள். அதுவரை இது சம்பந்தமாக அமுலிலிருந்த சட்ட திட்டங்களெல்லாம் ரத்து செய்யப்பட்டு 1863-ல் 20-வது சட்டம் ஏற்படுத்தப்பட்டது. இதன்படி கோவில்களையும், தர்ம சொத்துக்களையும் பரிபாலிக்கும் பொறுப்பு ரெவனியூ போர்டாரிடமிருந்து நீக்கப்பட்டு, டிரஸ்டிகள், கமிட்டிகள், மானேஜர்கள்வசம் ஒப்புவிப்பதற்கு வழிசெய்யப்பட்டது" என்று மிஸ்டர் கோஷ் சொல்லுகிறுர்.

இந்துச் சட்டத்தில் ஒரு சிறந்த அறிவாளியென பிரிவி கௌண்ஸில்வரையிலும் பேர்பெற்ற தாகூர் சட்ட விரிவுரையாளரான மிஸ்டர் கோஷ் சொல்லுவதை நம்புவதாக இருந்தால், இன்றைய தேவஸ்தானக்கமிட்டிகளும், டிரஸ்டிகளும் ஏற்படுவதற்குக் காரணம் பிராமணரது ஸ்மிருதியோ, சைவரது ஆகமமோ வர்ணுசிரம தர்மியுடைய சாஸ்திரமோ, பழக்கமோ, மாமூலோ அல்ல; ஒரு இந்துவுங்கூட அல்லவென்றும், ஆனல் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் 'அஞ்ஞானிக'ளின் கோவில்களைத் தம் கையில் வைத்திருக்கக்கூடாது என்று போராடிய கிறிஸ்துவப் பாதிரிகளே இதற்குக் காரணமென்றும் அறிவோம். இதைப்பற்றிப் பின்னர் விரிவாகக் கூறுவோம்.

"ஒரு அரசாங்கம், ஏதேனும் ஒரு குறிப்பிட்ட மதத்தைக் கைக்கொண்டுவிட்டால், அந்த அரசாங்கத்தில் இதர மதங்களையும், மதஸ்தாபனங்களையும் போற்றுவதற்கு இடமில்லை. இதே காரணத்தாலேயே கத்தோலிக்க ராஜியங்களில், புராட்டஸ்டன்று ஸ்தாபனங்களையும், புராட்டஸ்டன்று ராஜியங்களில் கத்தோலிக்க

மதஸ்தாபனங்களையும் அரசாங்கத்தார் பாதுகாப்பதில்லை. இதே காரணத்தை முன்னிட்டே, கிறிஸ்தவ கவர்ன்மெண்டானபிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் தாம் 1810-ல் ஏற்றுக்கொண்ட நேரான மேற்பார்வையினின்றும் இந்து மகமதிய கோவில்களையும் மதஸ்தாபனங்களையும் 1863-ல் நீக்கிக்கொண்டார்கள்" என்பதாக மிஸ்டர் கோஷ் இன்னும் சொல்லுகிறார்.

தொல்லையிலிருந்து விலகிவிட வேண்டுமென்ற அவசரத்தில் இந்துக்களிலும் இன்னின்ன வகுப்பார்தான், 'டிரஸ்டி' களாகவும், கமிட்டி மெம்பர்களாகவுமிருக்கலாமென்று 1863-ல் ஏற்படுத்திய சட்டத்தில் பிரிட்டிஷ் ஸர்க்கார் குறிப்பிடத் தவறிவிட்டார்கள்போலும்! ஒருக்கால் ஸர்க்காருக்கு அவ்விதம் குறிப்பிட முடியாமலே இருந்திருக்கவுங்கூடும்; ஏனெனில், இந்த ஸ்தாபனங்களை எந்த வகுப்பார், அல்லது எந்த சாதியார்எவ்விதம் ஸ்தாபிததார்கள் என்பதைப் பற்றியும் அவர்கள் தெரிந்திருக்க மாட்டார்கள்.

சுருங்கச்சொல்லுமிடத்து, இந்துக்களுக்கு, இந்துக்களென்ற முறையில், யாதொரு சாதி, நிறப் பாகுபாடுமின்றி, ரெவனியூ போர்டாருக்கு இருந்த அதிகாரங்களுடன், இக்கோவில்களும், மதஸ்தாபனங்களும் 1863-ம் ஆண்டில் கிடைத்தன. மகமதியர்களுக்கு அவர்களுடைய பள்ளிகள் கிடைத்தன. இந்த 'டிரஸ்டி' களுக்காயினுஞ்சரி, கமிட்டியார்களுக்காயினுஞ்சரி, தம் ஆதீனத்திலிருக்கும் எந்தக்கோவிலிலும் ஒரு இந்துவை, இந்து என்ற நிலையில் புகவொட்டாமல் தடை செய்யும் அதிகாரம் கொடுத்திருப்பதாக 1863-ம் ஆண்டுச் சட்டத்திலோ, வேறெங்குமோ சொல்லப்படவில்லை.

இந்நிலையில், சட்டப்படி அதிகாரமில்லாதிருக்க, ஒரு இந்துவைத் தடுக்க இந்த 'டிரஸ்டி'களுக்கும், தேவஸ்தானக்கமிட்டிகளுக்கும் சுயேச்சையான அதிகாரமுண்டா?

கோவிலுக்குள் வழிபடுகிறவர்கள் இன்னின்னமாதிரி நடந்து கொள்ளவேண்டுமென்பதாகத் திட்டப்படுத்த இவர்களுக்கு ஒரு

வேலை அதிகாரமிருக்கலாம்; ஆனால், ஆலயத்திற்குள் பிரவேசிக்கக்கூடாது என்று இந்துக்களில் ஒரு சாராரைத் தடுப்பதற்கு இவர்களுக்கு அதிகாரங்கிடையாது. பொதுக்கோவிலில் பிரவேசிப்பவர்கள், மற்ற பொதுவிடங்களிற் பிரவேசிப்பவர்களைப் போன்று ஒழுங்காக நடந்துகொள்ளக் கடமைப்பட்டிருக்கிறார்கள் என்பதில் ஐயமில்லை. 'ஒழுங்கையும், நன்னடத்தையையும் உத்தேசித்தும், அளவு மீறிய கூட்டத்தினால் ஜனங்கள் கஷ்டப்படாதபடி தடுப்பதை உத்தேசித்தும் டிரஸ்டிகள் வகுக்குந்திட்டங்கள் எல்லோரையுங் கட்டுப்படுத்தும்.'' "கோவிலுக்குள் சச்சரவை உண்டு பண்ணி, வழிபாட்டை ஒழுங்காக நடத்தவொட்டாமல் தடுக்கும் எவரையும் அவர்கள் வெளியே தள்ளலாம்.'' இவ்வளவுதான். காரியங்கள் ஒழுங்காக நடைபெறும் பொருட்டு இந்த அதிகாரங்கள் டிரஸ்டிகளுக்கு வழங்கப்பட்டிருக்கின்றன. இவை ஒரு நீதிபதிக்குத் தமது கோர்ட்டுக் கட்டிடத்திற்குள் ஏற்பட்டுள்ள அதிகாரத்தைப்போன்ற அதிகாரங்களேயாகும்.

ஒரு கேஸில் கல்கத்தா ஹைக்கோர்ட்டார் அடியில் வருமாறு குறிப்பிட்டார்கள்:—

"நீதி மன்றத்தில் ஒழுங்கை நிலைநிறுத்த வேண்டுமென்ற முறையில், தனது கோர்ட்டில் ஒரு ஜட்ஜிக்குப் பொதுவான அதிகாரமிருக்கிறது. கோர்ட்டு அறைக்குள்ளே வேலை ஒழுங்காக நடைபெறுதபடி ஆட்கள் அங்குமிங்கும் வீணாக அலைந்து திரியாமலும், பொதுஜனங்களுடைய உபயோகத்திற்கு விடப்படாத பாகங்களில் அவர்கள் போகாமலுமிருக்கும்படி பார்த்துக்கொள்ளவேண்டியது நீதிபதியின் பொறுப்பேயாகும். ஆனால், நீதிஸ்தலம் ஒரு பொதுவிடமென்பதையும், இங்கு பொதுமக்களுக்குச் செல்ல உரிமை யுண்டென்பதையும் மறந்துவிடக்கூடாது. பொதுமக்கள் ஒழுங்காக நடந்துகொள்ளும் வரையிலும் கோர்ட்டு வேலைக்கு அவர்கள் தொந்தரவளிக்காதவரையிலுந்தான் இந்த உரிமை செல்லத்தக்கது. அவ்வாறு பொதுமக்கள் ஒழுங்காக நடந்துகொள்ளும்பொழுது, நீதிஸ்தலத்தைத் தனது சொந்த இடமாக மாற்ற நீதிபதிக்கு அதிகாரமில்லை கோர்ட்டுக்குள்

ஆசனங்களை சௌகரியமாக இவ்வாறு அமைக்கவேண்டும், வக்கீல்கள் இன்னவிடத்திலிருக்கவேண்டும், பொதுஜனங்கள் இன்னவிடத்திலிருக்கவேண்டுமென்றெல்லாம் திட்டப்படுத்தும் உரிமை இந்த நீதிபதிக்கிருந்தபோதிலும், ஒரு சமுதாயம் முழுவதையும் கோர்ட்டுக்குள்ளே வரக்கூடாதென உத்தரவிட அவருக்கு உரிமையில்லை யென்று நான் கருதுகிறேன்."

மானேஜர், டிரஸ்டி, அல்லது தேவஸ்தானக்கமிட்டியாரின் அதிகாரங்களும் சுருக்கமாகக்கூறின் இவைதான்.

"கோவிலுக்குள் வழிபடுவதற்காகவரும் ஒவ்வொருவரையும் தாராளமாக வரமுடியாதபடி தடுக்கத்தக்கவிதத்தில் ஒரு பொதுக் கோவிலின் மானேஜருக்குச் சட்டமியற்ற முடியாது; கோவிலுக்கு வருபவர்கள்மீது பிரவேசக்கட்டணஞ்சுமத்தவும் முடியாது. ஆனால், விக்கிரகத்தினுடையவும், அதன் மீது அணியப்பெற்றிருக்கும் ஆபரணங்களினுடையவும் விலை மதிப்பையும், பாதுகாப்பையுங் கருதி, கோவிலின் ஒரு குறிப்பிட்ட பாகத்திற்குள் ஜனங்கள் பிரவேசிப்பதை ஒழுங்கு படுத்தலாம். இந்த விஷயத்திலும், இது போன்ற ஏனைய விஷயங்களிலும் மானேஜருக்கு அதிகாரமுண்டென்பதில் ஐயமில்லை; ஆனால் இந்த அதிகாரத்தை அவர் மனம் போனவாறு செலுத்தாமல் ஒழுங்கையும் மரியாதையையும் காப்பாற்றும் முறையில் தேவைப்பட்டபொழுது மட்டுமே நல்லெண்ணத்தோடு செலுத்தவேண்டும்" என்று ஸர் ஹரிஸிங் கோர் கூறுகிறார். ஆகவே இந்துக்களில் ஒரு சாராரையோ, வகுப்பாரையோ ஒரு பொதுக்கோவிலில் பிரவேசிக்கவொட்டாமல் டிரஸ்டிகளும், தேவஸ்தானக் கமிட்டியாரும் எவ்விதத்திலாவது தடை செய்வதாயிருந்தால், அவ்வாறு செய்வது அவர்களுடைய அதிகாரத்தை மீறுவதாவதுமன்றி சட்டவிரோதமான செயலுமாகும்.

கிறிஸ்துவ மதத்தைத் தழுவிய உயர்ந்தசாதி இந்துக்கள், கிறிஸ்தவக்கோவிலில் தங்களுடன், அதே மதத்தைத் தழுவிய தாழ்ந்தசாதி இந்துக்கள் சரி சமமாக அமரக்கூடாதெனத் தடுக்குமாறு கோரிய வழக்கொன்றில், சென்னை ஹைக்கோர்ட்டைச் சேர்ந்த இரு நீதிபதிகள் வெளியிட்ட அபிப்பிராயங்களை இந்த சந்தர்ப்பத்தில் கவனிப்பது நலமாகும்.

"உயர்சாதி இந்துக்கள் கிறிஸ்துவ மதத்தைத் தழுவிய பிற குங்கூடத் தமக்கு உண்டென நினைத்திருக்கும் சாதி உரிமைகளை எவ்விதத்திலும் மாற்றவில்லை; கடவுளுடைய சந்நிதானத்தில் எல்லாமக்களும் சமமானவர் என்ற தத்துவமானது கிறிஸ்துவ மதத்துக்கும், ஏனைய மதங்களுக்கும் அடிப்படையான தத்துவ மாகும். அப்படியிருந்தும் அவர்கள் மதம் மாறிய பிறகுங்கூட இந்த தத்துவத்தைக் கற்றுக்கொண்டதாகத் தெரியவில்லை" யென்று ஜஸ்டிஸ் நேப்பியர் அவர்கள் அபிப்பிராயப்பட்டுள்ளார். "பிறப்பு காரணமாக மக்களைத்தீண்டத்தக்கவரென்றும், தீண்டத்தகாதவ ரென்றும் பிளவு படுத்தி, அந்தப்பிரிவினையைக் கடவுள் சந்நிதா னத்திலும் சாஸ்திரங்களின் (அவை உண்மையான சாஸ்திரங்க ளாயினுஞ் சரி, -போலி சாஸ்திரங்களாயினுஞ்சரி) உதவியைக் கொண்டு இந்துக்களைப்போல நிலை நிறுத்தப்பார்ப்பது வாதிகளுக்கு (கிறிஸ்துவ மதத்திற் சேர்ந்த சாதிஇந்துக்கள்) இயலாத காரியம்" என அதே வழக்கில் ஜஸ்டிஸ் சதாசிவ ஐயரவர்கள் குறிப்பிட் டுள்ளார். ஒரு தீவிர சீர்திருத்த வாதியாயிருந்த ஜஸ்டிஸ் சதாசிவ ஐயரவர்கள் மேற்கண்ட வழக்கில் இவ்வாறு கூறியிருந்தபோதி லும், போலி சாஸ்திரங்களை ஆதாரமாகக்கொண்ட அர்த்தமற்ற உயர்வு தாழ்வுகளையும், நியாயமற்ற பழக்கவழக்கங்களையும், ஒப் புக்கொள்ளும்படி அவர் எவ்வாறு கட்டுப்படவேண்டி நேர்ந்த தென்பதைப் பின்னால் அறிவோம். "ஆசாரமானது நியாயத்திற்கு விரோதமாயிருப்பினும், (பல இந்துமத ஆசாரங்களைப் போன்று) உண்மையான அல்லது போலியான மத நூற்களின் ஆதாரத்தைக் கொண்டு சில சமயம் நீதிஸ்தலங்களில் வெற்றிபெற்றுவிடுகின் றது" என்று ஸர் சதாசிவ ஐயரவர்கள் சொல்லியிருக்கின்றார்.

# அத்தியாயம் 8.

இந்து மதஸ்தாபனங்களின் பரிபாலனத்தைப் பிரிட்டிஷ் அரசாங்கத்தார், இந்து மதத்தைச் சேர்ந்தவர்களிடம் ஒப்புவித்த காலத்தில்—அதாவது 1842–ம் ஆண்டு முதல் 1863–ம் ஆண்டு முடிய—இந்த சமூதாயம் எந்நிலையிலிருந்தது என்பதை ஆராய்வோம்.

அக்காலத்தும், அதற்கு முன்னதாகவும், இந்துக்களில் அதிகப் படிப்புடையவர்களாகவும், அரசியலறிவு முதிர்ந்தவர்களாகவும் இருந்தவர்கள் பார்ப்பனர்கள்தாம். இந்தியாவில் எப்பொழுதும் மிகப்பெரிதாக மதிக்கப்படும் "உத்தியோக" சாதியில் நிரம்பியிருந்தவர்களும் பார்ப்பனர்களே.

இற்றைக்கு ஒரு நூற்றாண்டுக்கு முன் (1816-ல்) பிரஞ்சுப் பாதிரியான ஆபி டுபாய் அடியில்வருமாறு எழுதியிருக்கிறார்:—

"இந்தியாவைத் தற்பொழுது ஆண்டுவரும் ஐரோப்பியர்களை வெகு சாமர்த்தியமாகப் பார்ப்பனர்கள் தம் வசப்படுத்திக் கொண்டார்கள். பல ஜில்லாக்களிலுமுள்ள ஸர்க்கார் உத்தியோகங்களில் உயர்ந்தவைகளையும், அதிக வருமானமுள்ளவைகளையும், நீதி ஸ்தாபனங்களையும், மற்றுஞ்சகல உத்தியோகத்துறைகளையும் பார்ப்பனர்களே கைப்பற்றியிருக்கின்றார்கள். உண்மையில், ஸர்க்கார் உத்தியோகங்கள் ஒன்றாவது அவர்களில்லாது போனால் நடவாது என்று கருதக்கூடிய நிலையில் பார்ப்பனர்கள் நிறைந்துவிட்டார்கள். மேலும் சப் கலக்டர்களாகவும், குமஸ்தாக்களாகவும், மொழிபெயர்ப்பாளர்களாகவும் கஜான்ஜிகளாகவும், கணக்கர்களாகவும், மற்ற சிப்பந்திகளாகவும் பெரும்பாலும் பார்ப்பனரே நிரம்பியிருக்கின்றார்கள். அவர்கள் சாமர்த்தியம் வாய்ந்த கணக்கர்களாக இருப்பதால், கணக்குகள் சம்பந்தப்பட்ட சகல விஷயங்களிலும் அவர்களுதவியில்லாமல் எதையுஞ் செய்வது மிகக்கஷ்டமான காரியமாக இருக்கும்.

"மேலும் இந்நாட்டு மக்களின் அபிப்பிராயத்தையும் அதைத் திருப்புவதற்குள்ள வழிகளையும் அவர்கள் நன்கறிந்திருப்பதும், பிறப்பினால் அவர்களுக்கேற்பட்டுள்ள உயரிய அந்தஸ்தும், இப் பார்ப்பனர்களை எளிதில் உத்தியோகங்களிலமர்த்துவதற்குரிய காரணங்களாக இருக்கின்றன. மற்ற சாதியார்கள் அவர்களுக்கு மதிப்பையும் கவுரவத்தையுங்கொடுப்பதனால், இப்பார்ப்பனர்களை உத்தியோகங்களில் நியமிப்பது அரசாங்கத்துக்கு கவுரவமும் அந்தஸ்தும் கொடுக்குமென்று பாமர மக்கள் நினைப்பதுண்டு. ஆனால், இப்பார்ப்பன உத்தியோகஸ்தர்களின் நடபடிக்கைகளை மிக நுணுக்கமாகக் கவனியாது, அவர்கள் மீது பூரணநம்பிக்கை வைக்கும் ஐரோப்பிய மேலதிகாரி இடர்ப்படுவான் என்பதிலையமில்லை. அந்த ஐரோப்பிய அதிகாரி தனது கவனக்குறைவு நிமித்தம் தன் உத்தியோகத்தையே இழப்பதற்குரிய நிலைமைக்கு விரைவில் வந்துவிடக் கூடும்."

இந்தக்காலத்தில், தென்னிந்திய சமூகத்தில் இவ்வளவு பெரிய நிலையைப் பார்ப்பனர்கள் அடைவதற்குள்ள காரணங்கள் எவையாயிருப்பினும், பிரிட்டிஷ் அரசாங்கத்தார் இந்துமத தர்ம பரிபாலனத்தைத் தம் வசமிருந்து மாற்றியபோது, அது இயல்பாகவே பார்ப்பனரிடமும், அவர்கள் சொற்கேட்டு நடக்கும் பார்ப்பனரல்லாத உயர் சாதி இந்துக்களிடமும் தானகப் போய்ச் சேர்ந்தது என்பதை யாரும் மறுக்கமுடியாது. இவ்விதம் பார்ப்பனர்களிடம் வந்து சேர்ந்த கோவில்களும் மத ஸ்தாபனங்களும் என்ன கதியை யடைந்தனவென்பதை இனி கவனிப்போம்.

இந்த மதஸ்தாபனங்களை அரசாங்கத்தார் இந்து மதஸ்தர்களிடம் ஒப்புவித்தபோது 'இந்து' என்றால் யாரென்பதாகவோ, 'இந்துமதம்' என்றால் எது வென்பதாகவோ வரையறுத்தார்களில்லை. இவ்விதம் 'இந்து' வென்றால் யார் என்பதை அரசாங்கத்தார் விளக்கத் தவறிவிட்ட காரணத்தினால், பார்ப்பனர்களது ஆதிக்கமும், செல்வாக்கும் அதிகரித்ததுமன்றி, இந்துமக்களிற் பெரும்பாலாரான தாழ்த்தப்பட்டவர்கள், தீண்டாதார் முதலிய

பல்வேறு சமூகத்தார்களின் பிரஜா உரிமைகள் புறக்கணிக்கப் படவுமாயிற்று.

இதே சமயத்தில் மகமதியப்பள்ளிகளையும், ஸ்தாபனங்களை யும் அரசாங்கத்தார் ஒப்புவித்தபோது, மகமதிய நீதிபதிகளும் வழக்கறிஞர்களும் எவ்வாறு கண்ணியமாக நடந்துகொண்டார் களென்பதைப் பின்னால் கூறுகிறேன்.

ஆனால் பார்ப்பனர்களைப் பொறுத்தமட்டிலும், பார்ப்பன வக்கீல்கள், பார்ப்பன ஜட்ஜிகள், பார்ப்பன நூலாசிரியர்கள் பார்ப் பனீய மனப்பான்மை நிறைந்த பார்ப்பனரல்லாதார் இவர்களது பேருதவியைக்கொண்டு, கதையாகச்சொல்லப்படும் ராமராஜிய காலத்தில்கூட பார்ப்பனர்கள் கனவிலும் நினைத்திருக்கமுடியாத அவ்வளவு பெரும் பதவியை இப்பொழுது தேடிக்கொண் டார்கள்.

கோவில் ஆராதனைகள் ஆகமங்களின்படியன்றி, ஸ்மிருதி களின்படியே நடக்கவேண்டும்; 'தர்மம்' என்ற பதத்திற்குப் பார்ப் பன போஷணம், பார்ப்பனர் சுகம், பார்ப்பனர் வாழ்வு என்று பொருள் கற்பிக்கப்பட்டது; முதலாவதாக இக்கோவில்கள் பார்ப் பனரது லௌகீக, வைதீக வாழ்வுக்காகவே ஏற்படுத்தப்பட்ட னவென்றும், பின்னால் பார்ப்பானே தெய்வமென்றும் சட்டப் படி வியாக்கியானம் ஏற்படுத்த முயற்சித்தார்கள்; மதசம்பந்த மாகவும், சமூக சம்பந்தமாகவும் தென்னிந்தியப் பார்ப்பான் முன் னேறிச் சென்றான். அவன் கர்ப்பக்கிரஹத்துக்குள் போகலாம்; அவனது குருவாகிய சங்கராச்சாரியார் கர்ப்பக்கிரகத்துக்குள் சென்றும் விக்கிரகத்தைத் தொட்டும் பூசைசெய்யலாம்; பார்ப்பன வேதங்கள் புத்துயிர்பெற்றன. பார்ப்பனஸ்மிருதிகள் அவை தோன் றிய நாள்முதல் ஏற்பட்டிராத புகழைத் தென்னாட்டில் பெற்றன. அதோடுமட்டுமல்லாமல் இந்த 20-ாம் நூற்றாண்டிலும் தென்னாட் டில் வருணசிரம தர்மிகளென ஒரு சாரார் தோன்றினார்கள். முன் வேத காலத்தில் வட இந்தியாவில் ஏற்பட்ட வர்ணசிரம தர்மி களைப்போலவே இவர்களும் வேஷம் போட்டார்கள். இவர்களைப் பற்றிக் கூறும்போது ரகோஸின் என்ற மேனாட்டு ஆசிரியர்

"வேதகால இந்தியா" என்ற தமது நூலில் "குறுகிய மனப்பான்மையும் வெளிச் சடங்குகளில் அதிகப் பற்றும், ஆரியமல்லாதவைகளில் வெறுப்பும், கடுமையான பிளவுபடுத்துந் தன்மையுமுடைய வைதீகப் பார்ப்பனர்கள்" என்று குறிப்பிடுகிறார். தென்னிந்திய வருணாசிரமதர்மப் பார்ப்பனர் மிகக் கஷ்டப்பட்டு ஸ்மிருதிகளைக்கொண்டு கட்டிய ஆகாயக் கோட்டையானது, இன்றைய சரித்திர ஆராய்ச்சியின் பயனாய் தவிடு பொடியாக இடிந்து விழுகின்றது. சைமன் கமிஷன் சென்னைக்கு வந்தபோது, திருவிதாங்கூர் வர்ணாசிரமதர்மப் பெரியாரொருவர் கமிஷன் முன்பு ஆஜராகி, இந்தியர்களை ஒருகாலத்தும் ஹைக்கோர்ட் ஜட்ஜிகளாக நியமிக்கக்கூடாதென்று ஓலமிட்டதின் காரணம் இப்பொழுது விளங்கும். அவரது கூற்று நகைப்புக்கிடமாயிற்று. எனினும், அவ்வருணாச்சிரமதர்மியின் கூற்றில் விசேஷப்பொருள் அடங்கியிருக்கிறது. கொலைக்குற்றஞ் செய்தவனுக்குத் தூக்குத் தண்டனை விதிக்கும்போதெல்லாம் பிராயச்சித்தம் செய்துகொள்ளும் ஸர். டி. முத்துசுவாமி ஐயரவர்களைப் போன்றவர்களை ஜட்ஜிகளாக நியமிக்கக்கூடாதென அப்பெரியார் தடுக்க உத்தேசிக்கவில்லை; ஆனால், சீர்திருத்த முறையிலிறங்கிய ஸர். டி. சதாசிவ ஐயரவர்களைப் போன்றவர்களை ஜட்ஜிகளாக நியமிக்கக் கூடாதென்பதே அவரது உத்தேசமாகும். பார்ப்பனரல்லாதார்களோ ஜட்ஜிகளாக இருப்பது கூடாது என்பதே அவரது நோக்கமாகும்.

## அத்தியாயம் 9.

ஆதி போய் குறிப்பிட்டதுபோல, பத்தொன்பதாவது நூற்றாண்டு ஆரம்ப முதல் பிரிட்டிஷ் ஆதிக்கம் இந்தியாவில் வளர்ந்ததோடுகூட பிராமண உத்தியோகஸ்தனும் தோன்றி ஆதிக்கம் பெற்றான்; இதனால் இந்து சமுதாயத்தில் பிராமணனுக்கு உயர்வு ஏற்பட்டது; இவ்வுயர்வினால், வேதகால இந்தியாவை ஸ்தாபிக்க வேண்டுமென்ற கொள்கையுடன் வர்ணாசிரம தர்மம் ஒன்று

ஏற்படவும், பிரிட்டிஷ் அரசாங்கத்தார் இந்து மதஸ்தாபனங்களைப் பார்ப்பனீயத்தின் கையில் ஒப்புவிக்கவும், பார்ப்பனர்கள் 'தர்மம்' என்ற பதத்திற்குப் புதிய வியாக்கியானம் கற்பித்தனர். இவையும், இவைபோன்ற அனுகூலமான சந்தர்ப்பங்கள் பலவும் தாமாக ஒன்று சேர்ந்ததால், இதுவரையிலும் தென்னிந்தியாவில் ஒதுங்கிக்கிடந்த பார்ப்பனீயமானது தலைவிரித்தாடத் தொடங்கிவிட்டது. இத்துடன் அது நிற்கவில்லை. படித்த பார்ப்பனரல்லாத சாதி இந்துக்களும் தங்களை பிராமணர்களாகவே கருதி நடக்க ஆரம்பித்து பார்ப்பனரை விடக் கூடுதலான வர்ணாசிரம தர்மிகளானார்கள். அந்த நிலையில்தான் இப்பொழுதும் கல்விகற்ற சாதி இந்து சமூகம் நிற்கின்றது.

தென்னிந்திய ஜன சமூகத்தை ஏற்கனவே வலங்கை, இடங்கை யென்ற பிரிவுகள் பிளவுபடுத்தி யிருந்ததோடு, புதிதாக சாதி மத சம்பந்தமாகவும் பிரிவுகள் ஏற்பட்டபோது, திராவிட மக்களுக்குள் இன்னும் பலவிதமான பிரிவுகள் ஏற்பட்டதுமல்லாமல், அவர்களுள் பெரும்பான்மையான மக்கள் தங்கள் சொந்த தேசத்தில் சாதாரண பிரஜா உரிமைகளையுங்கூட இழக்கவேண்டி வந்தது. இன்றைய தினம், தென்னாட்டில், அவர்கள் பிறந்து வளர்ந்த பூமியில்தானே அடிமைகளாக இருக்கின்றனர். தென்மொழி புறக்கணிக்கப்பட்டது. தென்னாட்டுக் கீர்த்தி குறைந்தது; தமிழனுடைய சரித்திரத்தை எல்லாரும் மறந்துவிட்டார்கள்; தமிழனுடைய விவேகம் நசுக்கப்பட்டது.

தமிழ் மக்களுக்கு வீழ்ச்சியேற்பட்ட இக்காலத்தில், அவர்களுடைய மதஸ்தாபனங்களின் சரித்திரத்தை நாம் இப்பொழுது ஆராய்வோம்.

இந்து மதஸ்தாபனங்கள் பிராமணர் கைக்கு மாறியபோது என்ன நேர்ந்தது என்பதை ஆராய்ந்துகொண்டிருந்தோம். ஆதியில் தமிழ் மக்களனைவர்க்கும் பொதுவில் உரித்தாயிருந்த இந்த மதஸ்தாபனங்கள் இப்பொழுது அவ்விதமில்லாமல் பார்ப்பனீயம் நிறைந்தனவாயும், ஒரு சுருங்கிய வகுப்பாருக்கு மாத்திரம்உரிமையுடையனவாகவும் மாறிவிட்டன.

"சென்னைமாகாணத்தில் ஏற்பட்டிருக்கும் ஆகம சாஸ்திரங்கள், கீழ் சாதிக்காரர்கள் ஆலயங்களில் வழிபடும் உரிமைகளைப் பற்றி நுணுக்கமாக சட்ட திட்டங்கள் வகுத்திருக்கின்றன" என்று வங்காள வழக்கறிஞரான மிஸ்டர் ஜே. ஸி. கோஷ் கூறுகின்றார். "அறிவாளிகள், ஆகம சாஸ்திரங்கள் மீதும், தாந்திரீக நூல்கள் மீதும் அதிக கவனம் இன்னும் செலுத்தவில்லை" யென்று திரு. பி. ஆர். கணபதி அய்யர் அவர்கள் குறிப்பிடுகின்றார்.

ஆலயங்களில் இன்ன வகுப்பார்தான் தொழுவதற்குப் பிரவேசிக்கலாமென்பதை ஆகமங்களே திட்டப்படுத்துவதாகச் சொல்லிவந்த போதிலும், பிராமண, பிராமணரல்லாத அறிவாளிகளும், அதிலும் வழக்கறிஞர்களும் நீதிபதிகளும் உண்மையாக ஆகமங்களைப்பற்றி அதிகமாகத் தெரிந்தவர்களல்லவென்பது திரு. கணபதி ஐயர் அவர்களுடைய கூற்றினின்றும் தெளிவாகின்றது. இதனுண்மை அடியிற் கூறுவதினின்றும் இன்னும் தெளிவாகும்.

தென்னிந்தியாவில் முதலாவது ஏற்பட்ட பார்ப்பன ஜட்ஜியான ஜஸ்டிஸ் முத்துசுவாமி ஐயர் அவர்கள் ஒரு பழைய கேஸில் கூறியதாவது:-- "இந்தக் கேஸில் வாதி கேட்கிற உரிமை, கோவிலின் சில பாகங்களில் நுழையவேண்டுமென்பதாகும். ஒரு பார்ப்பனன் என்ற நிலையிலும், ஒரு பிரஜை யென்ற நிலையிலும் இவ்வுரிமையைக் கேட்க எப்பொழுதும் வாதிக்கு உரிமையுண்டு."

இந்தக்கேஸில் வாதி, பிராமண விதவையை மணந்துகொண்ட ஒரு பார்ப்பனன்; கோவிலின் கர்ப்பக்கிரகத்தில் நின்று தொழுவதற்குத் தனக்கு உரிமை யுண்டு என்று வழக்காடினான்; ஆகமப்படி அத்தகைய உரிமையில்லை யென்று பிரதிவாதிகளான டிரஸ்டிகள் மறுத்தனர்.

ஆகமங்களைப்பற்றித் தமக்குத் தெரியாததினாலோ, அல்லது ஆகமங்கள் ஆலயப் பிரவேசத்தைப்பற்றிக் குறிப்பிடவில்லை யென்று கருதியோ முன் சொன்னமாதிரி, ஒரு பிராமணனுக்கு

அவன் பிராமணன் என்ற நிலையிலும் ஒரு பிரஜை என்ற நிலையிலும் கர்ப்பக்கிரகத்திலுள்ளேயுங்கூட செல்ல பிறப்புரிமையுண்டு என்று ஜஸ்டிஸ் முத்துசுவாமி ஐயரவர்கள் விதி வகுத்தார்.

ஆனல், பணகுடி கோவில் வழக்கில் ஜஸ்டிஸ் ஸர். டி. சதாசிவ அய்யர் அவர்கள் அடியில் வருமாறு அபிப்பிராயப் பட்டார்:— "கோவில் பூசாரிப் பார்ப்பனரல்லாத மற்ற பார்ப்பனர்களை அனேக கோவில்களில் கர்ப்பக்கிரகத்திற்குள் போக அனுமதிப்பதில்லை; ஏனென்றால் தீட்சை பெருதவர்களானபடியால் அவர்கள் பிராமணர்களாக இருந்தபோதிலும் அவர்கள் தீண்டுவதினல் விக்கிரகத்துக்குத் தீட்டு ஏற்பட்டுவிடும்."

அதாவது, ஜஸ்டிஸ் சதாசிவ அய்யாவர்களின் அபிப்பிராயப்படி பிராமணருங்கூட ஆகம விதிப்படி, பிராமணர் என்ற காரணத்தால் கர்ப்பக்கிரகத்துக்குள் போக இடமில்லை யென்பதாகும். ஆனல், ஜஸ்டிஸ் முத்துசுவாமி ஐயரவர்களோ, ஒவ்வொரு பார்ப்பனனும் அவன் பார்ப்பனனென்ற மாத்திரத்திலேயே கர்ப்பக்கிரகம்வரை நுழையலாம் என்று வகுத்தார்.

ஆகையினல், பேர்பெற்ற ஜஸ்டிஸ் முத்துசுவாமி ஐயர் போன்ற பிராமண ஜட்ஜிகளுங்கூட ஆகமங்களைப்பற்றி அறிந்ததில்லை; எனவே, அறிவாளிகளும் ஆகமங்கள் மீது அதிக கவனஞ் செலுத்தவில்லையென்று திரு. கணபதி ஐவர் அவர்கள் சொல்வது சரிதான். ஆகமங்களைப் பற்றி பிராமண ஜட்ஜிகளுக்கே இவ்வளவு அறியாமை ஏற்பட்டிருந்தால், இந்துக்களல்லாத ஜட்ஜிகளுக்கு ஆகமங்களைப்பற்றி ஒன்றுந் தெரியவில்லையே யென்று அதிசயிக்கவேண்டியதில்லை. தென்னிந்தியாவிலுள்ள ஆலய நிர்வாக முறைகளை வரையறுப்பது ஆகமங்கள்தான், ஸ்மிருதிகளல்லவென்பதைக் கோர்ட்டுத் தீர்ப்புகள் அங்கீகரித்திருக்கின்றன; இவ்விஷயத்தை இந்த இடத்தில் குறிப்பிடவேண்டிய தவசியம்.

பிராமணர்கள் ஆகமங்களைப்பற்றி இவ்வளவு பயப்படுவானேன்? இதைப்பற்றி இனி ஆராய்வோம்.

—:o:—

# அத்தியாயம் 10.

இந்துக்கோவில்கள் எக்காலத்திலும் சகல சாதி மதஸ்தர் களுக்கும் உரித்தாகவேயிருந்தன; இந்த நோக்கத்துடன் தான் அவை ஸ்தாபிக்கப்பட்டன. நேற்றுத்தான் இதில் சச்சரவுகள் ஏற்பட்டன.

ஆகமங்களை நாம் சரிவரப்படித்துணர்ந்தால், பிராமணனுக்கு ஒரு கோவிலிலாவது நுழைந்து வழிபட உரிமையில்லை யென்பதையும், இங்கிலீஷ் அரசாங்கம் ஏற்பட்டது முதல் இதுவரை சட்டத்தையும் பாமரமக்களின் அறியாமையையும் மூடநம்பிக்கையையும் தனக்குச் சாதகமாக்கி உபயோகப்படுத்தியதால் அவன் அடைந்துள்ள சகல உரிமைகளையும், இழக்க நேரிடுமென்பதையும் அறியலாம். இந்தக் காரணத்தால் தான், பிராமணர்களுக்கு ஆகமங்கள் மீது பயம் ஏற்படுகின்றது.

ஆகமங்களுக்கும் ஸ்மிருதிகளுக்குமுள்ள வித்தியாசமென்னவென்பதை நாம் முதலில் கவனிக்கவேண்டும். இதைப்பற்றி விரிவாக திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை M. A, M. L., அவர்களும், திரு. பி. டி. சீனிவாசய்யங்கார் M. A., L. T., அவர்களும் எழுதியிருக்கிறார்கள்.

"ஸ்மிருதிகளின் உற்பத்தி வேதமாகும்; ஆகமங்களின் உற்பத்தி திராவிடமாகும்." இந்த வித்தியாசம் மிக முக்கியமானது. "இருபிறப்பாளர் மட்டுமே வேதங்களைப் பயிலலாம். ஆனால் சகல சாதி மதஸ்தர்களும் ஆகமங்களைப்பயிலலாம்." அதாவது, ஒருவன் பறையனாகிலும் சரி, சக்கிலியனாகிலும்சரி, சண்டாளனாகிலும்சரி ஆகமங்களைச்சரிவரக் கற்றுக்கொள்ள அவனுக்கு உரிமையுண்டு. வேதங்களையும், ஸ்மிருதிகளையும் பயில்வதிலிருப்பதுபோன்ற கட்டுப்பாடெதுவுமில்லை. ஆகையினால், 'ஆகமங்களைத்தழுவிய பிராமணர்களைப் பிராமண சமூகத்தில் கடைப்பட்டவர்களென வேதியர்கள் கருதுவார்கள். அதுமட்டுமல்ல; "பிறப்பினால் ஸ்மிருதிகளையும், புராணங்களையும் படிக்கத் தகுதியற்றவர்களாக இருப்ப

வர்களுக்கே ஆகமங்கள் ஏற்பட்டன" வென்றும் அவர்கள் சொல்கிறார்கள். ஆகமங்கள் சர்வசமய சமரஸமான பரந்தநோக்க முடையவைகளாகவும், வேதங்கள் மிகக்குறுகிய நோக்க முடையவைகளாகவுமிருப்பதைக்கண்டு, கல்கத்தா ஹைக்கோர்ட்டு நீதிபதியாக இருந்த ஸர் ஜான் உட்ராப் என்பவர் அதிசயிக்கிறார்.

ஆகமமுறைப்படி வழிபாடு நடைபெறுகின்ற கோவில்களெல்லாம்—தென்னாடு முழுவதும் இம்முறைதான் கைக்கொள்ளப்படுகிறது—இருபிறப்பாளருக்கு மட்டுமென்ற வரையறையின்றி எல்லா வகுப்பினருக்கும், எல்லா சாதியினருக்கும் பொதுவானவையென்பது மேலே எடுத்துக் காட்டப்பட்டவற்றினின்றும், இனிக் கூறப்போவதினின்றும் அறியக்கிடக்கின்றது. நான் இதை இன்னும் தெளிவுபடுத்துகிறேன்.

பணகுடி ஆலயவழக்கில் ஜஸ்டிஸ் சதாசிவ ஐயர் அவர்கள் குறிப்பிட்ட இரண்டு விஷயங்களை இங்கே கவனிக்கவேண்டும்:—

(1) "கர்ப்பக்கிரகத்தைப் பொறுத்த மட்டிலும், கோவில் பூசாரியினத்தைச் சேர்ந்த பார்ப்பனருக்கு மாத்திரந்தான் கர்ப்பக்கிரகத்துக்குள் நின்றுவழிபட உரிமையுண்டு. சாதாரண பார்ப்பனர்களும், பிள்ளைமார்களும், முதலியார்களும் வெளி மண்டபத்தில் நின்றுதான் தொழ உரிமை உடையவர்கள்"

(2) "சாதாரண பார்ப்பனர்கள் கர்ப்பக்கிரகத்தினுள்ளே செல்ல அனுமதிக்கப்படவில்லை; ஏனெனில் தீட்சை பெறாத பார்ப்பனர்கள் உள்ளே பிரவேசிப்பதனால் அவர்கள் பார்ப்பனராக இருந்த போதிலும் விக்கிரகத்துக்குத் தீட்டு ஏற்படுவதாகக் கருதப்பட்டு வந்தது."

ஆகவே, ஆகமங்களைப்பற்றிச் சிறிதேனும் தெரிந்த ஜஸ்டிஸ் சதாசிவ ஐயரவர்களின் அபிப்பிராயப்படி சாதாரண பிராமணன் கர்ப்பக்கிரகத்துக்குள் பிரவேசிக்கக்கூடாது; பிரவேசித்தால் "தீட்டு" ஏற்படும். அவ்விதம் பிரவேசிக்க உரிமையுள்ளவர் அவருடைய அபிப்பிராயப்படி கோவில்பூசாரி இனத்தைச் சேர்ந்த பார்ப்பனர்தான். இந்தக்கோவில் பூசாரி இனத்தைச் சேர்ந்த பார்ப்பனர் யாரென்று ஆராய்வோம்.

"கோவில் பூசாரிகள் பார்ப்பனர்களில் மிகக் கேவலமானவர்கள் என்று கருதப்படுகிறார்கள். மனு காலத்திலிருந்தே இந்த உணர்ச்சியிருந்து வருவதாகத் தெரிகிறது" என்று அறிவு முதிர்ந்த திரு P. R. கணபதி ஐயர் அவர்கள் கூறுகிறார்.

ஜஸ்டிஸ் சேஷகிரி ஐயர் அவர்கள் (பிரிவி கவுன்ஸில்வரைச் சென்ற ஒரு வழக்கில்) இவ்வாறு கூறுகின்றார்:—"பிரதிவாதியின் குடும்பஸ்தர்கள் (அதாவது கவுண்டர்கள், வெள்ளாளர் அல்லது சூத்திரர்கள்) இந்தக்கோவில் அர்ச்சகர்கள். ஆனால் இவர்கள் கோவில் பூசாரி வகுப்பைச் சேர்ந்தவர்களல்ல வென்பது உண்மை தான். எனினும், இன்னவகுப்பைச் சேர்ந்தவர்கள் தான் கோவிலில் பூசை செய்யலாமென்பதாக விதி யெதுவுமில்லை."

"பேர்பெற்ற சிதம்பரம் க்ஷேத்திரத்தில் ஏராளமான தீட்சதர்களிருக்கின்றார்கள்; அவர்கள் பூசை செய்யும் கடவுளோடு தாங்களும் பூலோகத்துக்கு இறங்கி வந்துவிட்டதாகக் கூறுகிறார்கள். ஆனால் அந்த தீட்சதர்கள் சாதாரண கோவில்அர்ச்சகர் வகுப்பைச் சேர்ந்தவர்களல்ல."

சுருங்கச் சொல்லுமிடத்து, சிதம்பரம் கோவில் தீட்சதர்கள் பார்ப்பனர்களல்ல; கோவில் பூசாரி பிராமணனாக இருக்கவேண்டுமென்பதில்லை; எந்தக் குறிப்பிட்ட வகுப்பையோ, சாதியையோ சேர்ந்திருக்கவேண்டுமென்ற நியதியுமில்லை.

ஜஸ்டிஸ் சேஷகிரி ஐயரவர்களின் மேற்சொன்ன அபிப்பிராயத்தை பிரிவி கவுன்ஸிலர்களும் ஒப்புக் கொண்டார்கள். "பிராமணரல்லாத வகுப்பைச் சேர்ந்தவர் ஒரு இந்துப் போதுக்கோவிலில் பூசாரியாக இருப்பது ஒருவேளை நூதன மாகத் தோன்றலாம். ஆனால் சென்னைமாகாணத்திலுள்ள சில இந்துப் போதுக்கோவில்களில் சூத்திரர்கள் பூசாரிகளாக இருப்பது வெளிப்படை:" ஆகையினால், "கோவில் பூசாரிப் பார்ப்பனர்கள்" என்று ஜஸ்டிஸ் சதாசிவய்யர் அவர்கள் சொன்னதை மற்றொரு பிராமண உரையாசிரியரான P. R. கணபதி ஐயர் அவர்கள் "தாழ்ந்த பிராமணர்கள்" என்பதாகச் சொன்னார்; ஜஸ்டிஸ் சேஷகிரி ஐயரவர்களும்

பிரிவி கவுன்ஸிலர்களும் பிராமணரேயல்ல வென்பதாகவும் ஆனால் சூத்திரரென்றும் சொன்னார்கள்.

இத்தகைய "சூத்திர"னுக்குத்தான் கர்ப்பக்கிரகத்தினுள்ளே பிரவேசிக்கஉரிமையுண்டு; சாதாரண பார்ப்பனனுக்குப் பிரவேசிக்க உரிமையில்லை; சங்கராச்சாரியார் கூடப் பிரவேசிக்க ஆகமப்படி உரிமையில்லை; ஏனெனில் அவர் தீட்சை பெற்றவரல்ல. ஆகையினால் ஆகமப்படி, பிராமணன் தொழுவதினால் விக்கிரகத்துக்குத் தீட்டு ஏற்படுகின்றது! 'சூத்திரன்' பூஜை செய்வதினால் கடவுளுக்குத் திருப்தியுண்டாகின்றது! இன்னும் அனேக விஷயங்களிருக்கின்றன.

(1) 'தீட்சை பெற்ற பிராமணன் கூட சைவக்கோவில்களிலிருக்கும் விக்கிரகங்கள் எதையும் தொடக்கூடாது; ஆனால் மடப்பள்ளியில் சமையற்காரனாகவோ, அல்லது வேறு தாழ்ந்த வேலைகளைச்செய்பவனாகவோ இருக்கலாம்.

(2) 'தீட்சை பெற்ற பறையன்கூட தீட்சை பெறாத பிராமணன் கையிலிருந்து உணவோ, தண்ணீரோ பெறக்கூடாது'.

(3) 'தீட்சை பெறாத பிராமணனை அன்னிய மதஸ்தனென்று கருதவேண்டும்'

சகல இந்துக்களுக்கும்—தீண்டத்தக்கவர்க்கும், தீண்டத்தகாதவர்க்கும்—ஆகம முறைப்படி தென்னிந்தியக் கோவில்கள் எல்லாம் திறந்திருந்தனவென்பது மேலே குறிப்பிட்டவற்றினின்றும் இன்னும் குறிப்பிடப்படுவனவற்றினின்றும் விளங்கும். உண்மையிலேயே அந்தக்காலத்தில் ஆலயப்பிரவேசத்தில் யாருக்கும் எவ்விதமான தடையுமிருந்ததில்லை யென்பது ஆகமங்களைச் சரிவரப் படித்தவர்களுக்குப் புலனாகும். இன்று ஏற்பட்டுள்ள தடையானது ஆகமத்துக்கு முரணானதும், மதத்துக்கு விரோதமானதும், அரசியல் காரணமாக ஏற்பட்டதுமாகும்.

ஆகமத்தில் தேர்ச்சிபெற்ற ஒரு பெரியார் கூறுவதாவது:— "சைவமதமும், வைஷ்ணவ மதமும், பறையர்கள் உள்ளிட்ட சகல சாதிக்காரர்களையும் தம்மிடம் உட்படுத்திக் கொள்ளும்படியாகத்

தீட்சை யென்ற சம்பிரதாயத்தைக் கைக்கொண்டிருக்கின்றன. ஒரு பறையனுங்கூட — அவன் இந்த சமயங்களில் சேர்ந்தவனுகவும் பரிசுத்தமான பழக்க வழக்கங்களைக் கைக்கொள்பவனுகவுமிருந்தால்—ஆலயத்தினுள் பிரவேசிக்கலாம். வர்ணுசிரம தர்மமே பஞ்சமர்களை ஆலயத்தில் நுழைய வொட்டாமல் தடுத்தது."

## அத்தியாயம் 11.

ஆகமங்களின் அடிப்படையான கொள்கைகள் அடியில் வருமாறு:—

(1) வைதீகப் பார்ப்பானைக் கோவிலில் நுழையாமல் புறக்கணிப்பது மட்டுமன்றி, அவனை அன்னிய மதஸ்தன் என்றுங் கருதவேண்டும்.

(2) கோவில் பூசாரியாவதற்குரிய சோதனை தீட்சை யொன்றுதான்; சாதியோ, வகுப்போ அல்ல.

(3) தீட்சை பெருத பிராமணன் கோவிலுக்குள் சமையற்காரன் போன்ற வேலைக்காரனுகக்கூட இருக்கமுடியாது; அவன் விக்கிரகத்தைத் தொடக்கூடாது; கர்ப்பக்கிரகத்துக்குள் பிரவேசிக்கக்கூடாது.

(4) பிராமணனுக்குத் தீட்சை பெற அருகதையிருப்பது போலவே, ஒரு பறையனே, சண்டாளனே தீட்சை பெறலாம்.

(5) ஆகமப்படி கோவிலுக்குள் பிரவேசிப்பதற்கும், வழிபடுவதற்கும், சாதி, வர்ணம், வகுப்பு இவற்றைப்பற்றிக் கவனிக்க வேண்டியதில்லை. கடவுள் சந்நிதானத்தில் சாதி இந்துக்களும் சாதி இந்துக்களல்லாதவர்களும் ஒன்றுதான். இதுதான் ஆகமங்களின் தத்துவம்.

(6) ஆகமங்கள் ஒரு வகுப்பாருக்கு உயர்வும், மற்றொரு வகுப்பாருக்குத் தாழ்வும் கற்பித்ததில்லை.

சுருங்கச்சொல்லு மிடத்து, சகல கோவில்களையும், எல்லா மக்களுக்கும் எவ்வித வித்தியாசமுமின்றி இந்த ஆகமங்கள் திறந்து விட்டன. எல்லா மக்களும் தீட்சை பெற்று வழிபடவேண்டும் என்ற நோக்கத்துடன் இவ்வாறு செய்யப்பட்டது. இதைத்தவிர வேறு மாறுபாடான பொருள் கற்பிப்பது அசம்பாவிதமாகும்.

அவ்வாறு கற்பிப்பதற்கு இடமுமில்லை; ஏனெனில் அன்னிய மதஸ்தராகக் கருதப்படவேண்டிய வைதீகப்பார்ப்பனரைக் கூடக் கோவிலுக்குள் நுழைய ஆகமங்கள் அனுமதியளித்தது அவர்களும் தீட்சை பெறவேண்டும் என்ற நோக்கத்துடன் அன்றி வேறல்ல. கோவிலுக்குள் சென்று வழிபட்டபிறகும் வைதீகப்பார்ப்பனர்கள் தீட்சைபெறாதிருந்தால், அவர்களை யாரும் வெளியிலாக்கினதில்லை; ஆனால் விக்கிரகங்களைத் தொடவும், கர்ப்பக்கிரகத்துக்குள் நுழையவும், பூசாரிகளாக இருக்கவும், வேறு விதமான வேலைகள் செய்யவும் அவர்கள் அனுமதிக்கப்படவில்லை. இன்றயத்தினம் இந்துக் கோவில்களில் பிராமணர்கள் நுழைந்திருப்பதினின்றும் பண்டைக்காலத்தில் எல்லா மக்களுக்கும் ஆலயப்பிரவேச உரிமை தாராளமாக அளிக்கப்பட்டிருந்தது என்பது வெளிப்படையாகின்றது. ஆகவே, ஆகமங்களுக்கு விரோதமான வைதீகப்பார்ப்பனரைக்கூடக் கோவிலுக்குள் நுழையவிட்டிருந்தார்களென்றால், அக்காலத்திலிருந்த சமண மதஸ்தரையும், புத்த மதஸ்தரையும், பறையரையும், பிராமணரையும், எல்லா பேர்களையும், தீட்சை பெறும் பொருட்டு கோவிலுக்குள் நுழைய விட்டிருப்பார்கள் என்பது உறுதியாகின்றது.

அதாவது, இப்பொழுது மகமதியப் பள்ளிகளும், கிறிஸ்தவக் கோவில்களும் இருப்பது போன்று, அக்காலத்தில் இந்துக்கோ கோவில்கள் எல்லா மதஸ்தர்களுக்கும் திறந்தே யிருந்தனவென்பதாகும்.

"தமிழர்களின் சரித்திரம்" என்ற மிக ருசிகரமான புஸ்தகத்தில் (History of the Tamils by Mr. P. T. Srinivasa Iyengar, Reader of Indian History to the Madras

University) திரு. P. T. சீனிவாச ஐயங்கார் அவர்கள் ஆகமங்களைப் பற்றி அடியில் வருமாறு குறிப்பிடுகிறார்:—

"வைதீக சாஸ்திரங்கள் மக்களை நான்கு வருணங்களாக வகுத்து, நான்காவது வருணத்தைச் சேர்ந்தவர்களை வேதம், வேதாந்தங்களைப் படிப்பதினின்று நீக்கவும் செய்தன. மக்களை நான்கு வர்ணங்களாக வகுத்ததினின்றும் வர்ணாசிரம தர்மம் ஏற்பட்டு தர்மங்கள் வருணங்கட்கிடையே வகுக்கப்பட்டன. இதன் முடிவு பிராமணன் மட்டும் சன்னியாசியாகலாமென்றும் சன்னியாசத்தைப் பயின்றால் மட்டுமே மோட்சம் கிடைக்குமென்றும் ஏற்பட்டது. அதாவது வைதீக முறைப்படி, பிராமணர்கள் மட்டுமே மோட்சம் பெறலாமென்பதாகும். ஆகமங்களோ இந்தக் கோட்பாடுகளையெல்லாம் எதிர்த்து நின்றன. ஒரு சண்டாளனுங்கூட, ஆகமப்படி விஷ்ணு அல்லது சிவனுடைய விக்கிரகத்தைப் பெற்று அதற்குப் பூஜை செய்யலாம். தாழ்ந்த வகுப்புகளைச் சேர்ந்த சிவனடியார்கள் சிவன் கோவிலுக்குள் சென்று தரிசித்திருப்பதைப் பெரிய புராணம் குறிப்பிடுகின்றது. கண்ணப்ப நாயனார் காளகஸ்திக் கோவிலில் சிவனுக்கு இறைச்சியைக் கொடுத்தார். எட்டாவது நூற்றாண்டிலிருந்த பாணாழ்வார் மிகக்கேவலமான வகுப்பைச்சேர்ந்தவர். அவரது வகுப்பார்கள் ஸ்ரீரங்கம்கோவிலைச்சுற்றியுள்ள தெருவீதிகளிற்கூட நடக்கக்கூடாது. ஆனால், அவரையும் ஆழ்வாராக்கிக் கோவிலில் வைத்துப் பூஜித்து வருகின்றார்கள். நான்குசாதிப் பாகுபாட்டை ஆகமங்கள் அங்கீகரிக்கவில்லை. ஆனல் வேதத்தில் ஒரு பகுதியான வேதாந்தமோ சூத்திரர்கள் பயிலக் கூடாததாக இருந்தது. கிரியைகள் மூலம் பரிசுத்தமடைய சூத்திரர்களுக்கு உரிமையில்லையாதலால், அவர்கள் வேதங்களைக் கேட்கவோ, படிக்கவோ கூடாதென பாதராயணர் எழுதியிருக்கின்றார். ஆனல் இதற்கு நேர்மாறாக

ஆகமங்கள் எல்லாபேரும் படிக்கக் கூடிய விதத்தில் திறந்தனவாக இருந்தன. ஆகையால் இன்றுகூட தீட்சைபெற்ற ஒரு பறையன் தான் பெற்ற உபதேசத்தை ஒரு பிராமணனுக்குக் கொடுக்கவும், அந்த பிராமணனுக்குக் குருவாக வரவும் முடியும்"

அதே புஸ்தகத்தில் திரு. சீனிவாசய்யங்கார் அவர்கள் அடியில் வருமாறு குறிப்பிடுகின்றார்:—

"வேதியர்கள் ஆகாமியர்களை மிகவும் இழிவாகக் கருதிவந்தார்கள். இது, முன் காலத்தில் ஆரியர்கள் இந்நாட்டிலிருந்தமக்களோடு காண்பித்த வெறுப்பின் தொடர்ச்சியாகும். இந்த வெறுப்பின் தொடர்ச்சியினால் இப்பொழுதும் கோவில் பூசாரிகளை இழிவான பிராமணர்கள் என வேதாந்திகள் கருதுகிறார்கள். 50 வருஷகாலத்திற்கு முன்னால் வரையிலும் ஒரு கோவிலுக்குள்ளும் பிரவேசிக்காத வேதியர்கள் நான் அறிய இருந்து வந்தது எனக்குத் தெரியும். வேதாந்தம் ஆகம வழியைப் பலமாகக் கண்டித்தது."

ஆகையினால் ஆகமங்கள் வருணாசிரம தர்மத்துக்கு விரோதமானவையாகும்.

எமிலி ஸெனார்ட் (Emile Senart) என்னும் பிரஞ்சுதேசத்து சமஸ்கிருதப் பண்டிதர் கூறுவதாவது:—ஆரிய சமுதாயம் இரு பிரிவாக ஏற்பட்டுள்ளது. உயர்ந்த மூன்று சாதிகள் முதற் பிரிவிலும், நான்காவது சாதி மட்டும் இரண்டாவது பிரிவிலும் அடங்கின.

"முதல் வகுப்பில் இரு பிறப்பாளர்களான (Dvijas) ஆரியர்கள் மட்டும் சேர்க்கப்பட்டிருக்கின்றனர். இவர்களுக்கு இயற்கைப் பிறவியோடு மத சம்பந்தமாக, உபநயனத்தினால் மற்றொரு பிறப்பும் ஏற்படுகின்றது. உபநயனத்தினின்றும் சூத்திரர்கள் விலக்கப்பட்டிருக்கின்றமையால்—அதாவது இரண்டாவது பிறப்பு சூத்திரர்களுக்கு இல்லாதபடியால்—சாஸ்திரங்களைக் கற்பதிலோ, கல்வி

பயில்வதிலோ, உயர்ந்த மூன்று சாதியார்க்கும் ஏற்பட்டுள்ள யாகங்களிலும், சடங்குகளிலும் கலந்து கொள்வதிலோ அவர்களுக்குப் பங்குகொள்ள இடமில்லை.

“சில குறைந்த சடங்குகளை மட்டும் சூத்திரர்கள் செய்து கொள்ள சம்மதிக்கப்பட்டிருக்கிறதினால், ஆரிய சமூகத்தில் சூத்திரர்களுக்கு ஒரு தாழ்மையான இடமே கொடுக்கப்பட்டிருக்கின்றது.

“உபநயனத்தால் மட்டுமே ஒருவன் ஆரிய வருணத்தை அடையமுடியும். உபநயனம் பெறுவதுவரையிலும் ஆரியன் சூத்திரனாகவே இருக்கின்றான் என்று மனு குறிப்பிட்டிருக்கின்றார். ஆகவே இம்மாதிரிப் பாகுபாடானது மத சம்பந்தமான பாகுபாடேயன்றி, கேவலம் சமூக சம்பந்தமாக ஏற்பட்ட ஒரு பிரிவல்ல.

“உயர்ந்த மூன்று சாதியைச் சேர்ந்த ஒருவனது பிரேதத்தை ஒரு சூத்திரன் தூக்கிச்சென்றால், அந்த உயர்ந்த சாதிக்காரனுடைய ஆத்மா மோட்சம் அடைவதில்லை. பார்ப்பனர்களுக்குள் சில குற்றங்கள் ஏற்பட்டால் அவர்களைக் கண்டிப்பது அவர்கள் சூத்திரர்களாகிவிட்டார்கள் என்ற காரணத்தாலேதான்; அதாவது அவர்கள் சாதிப்பிரஷ்டர்களாகிவிட்டார்கள் என்று பொருள் படும். சூத்திரன் செய்யக்கூடிய பெருங் குற்றம்–பாதகம்–ஒன்றுமேயில்லையென்று மனுமேலுங் கூறுகிறார். கொடும் பாதகம் செய்யக்கூடிய நிலை சூத்திரனுக்கு இல்லையென்பது மனுவின் கருத்தாகும். சூத்திரனுக்கு அளிக்கப்பட்டிருக்கும் அந்தஸ்து மிகத்தாழ்வானது; எனவே அவன் எத்தகைய பெரிய குற்றத்தைச் செய்தபோதிலும் அதைவிடத் தாழ்வான நிலையெய்தப் போவதில்லை; அவன் மேற்செல்ல வழியில்லாததால் கீழ் நிலையும் அடைய முடியாது.”

# அத்தியாயம் 12.

தென்னிந்தியாவிலுள்ள கோவில் பூசாரிகள் எந்த சாதியைச் சேர்ந்தவர்கள்? அவர்கள் சூத்திரர்களாகவாவது இருப்பார்களா? பேர்பெற்ற திருச்செந்தூர்க்கோவிலைச்சேர்ந்த முக்காணிப் பார்ப்பனர்களையும், சிதம்பரம் தீட்சதர்களையும் உங்கள் மனக்கண் முன் வைத்துக்கொண்டு அவர்கள் எந்த சாதியைச் சேர்ந்தவர்களெனத் தீர்மானப்படுத்துங்கள்.

தாகூர் சட்டவிரிவுரையாளர் திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் M. A., M. L., பின்வருமாறு எழுதுகின்றார்:—

"ஸ்மிருதிகளிற் கூறியிருக்கின்ற மத ஆசாரங்களின்படி சூத்திரன்கூட ஆகமங்கள் குறிப்பிட்டுள்ள நிலைக்கு வந்து கோவில் பூசாரிகளுடன் கலந்து கொள்ளக்கூடாது. ஆரிய வகுப்பில் உள்பட்ட நான்கு வருணத்தாரும் இந்தக்கோவில் பூசாரிகளை மதச் சடங்குகள் எதிலும் ஏற்றுக்கொள்ளக்கூடாது."

"கோவில் பூசாரிகள் திராவிடர்களில் உயர்ந்த வகுப்பாரான வேளாளர் என்றும், இவர்களுடைய வேலை ஆலயங்களில் பூசை செய்வதாகுமென்றும் சொல்லப்படுகிறது. இவர்களை ஆதிசைவர்கள், அதாவது பிரதம சைவர்கள் என்று அழைத்துவந்தார்கள். ஸ்மார்த்தர்களின் ஆதிக்கம் அதிகப்பட்ட காலத்தில், தாங்கள் பிராமணர்களில் ஒரு பிரத்தியேக வகுப்பினர் என்பதாக ஆதிசைவர்கள் சொல்லிக்கொண்டார்கள்" என்று திரு. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் பிறிதோரிடத்தில் குறிப்பிட்டுள்ளார். ஒருவேளை இந்தக் காரணத்தினால் தான் திரு. P. R. கணபதி ஐயர் அவர்கள் தமது நூலில் "கோவில் பூசாரிகள் தாழ்ந்த பிராமணர்கள் ஆவர்" என்று குறிப்பிட்டிருக்கிறார் போலும்! முதன்முதலாக, ஜஸ்டிஸ் சதாசிவ ஐயர் அவர்களும், திரு. P.R. கணபதி ஐயர் அவர்களும் "கோவில் பூசாரி"யை பிராமணன் என்று அழைத்ததைக் கண்டோம்; பிறகு ஜஸ்டிஸ் சேஷகிரி ஐயர் அவர்களும், பிரிவிகவுன்ஸிலாரும், "கோவில் பூசாரி"யை சூத்திரன் என்று குறிப்பிட்டதையும் பார்த்தோம்; இப்பொழுது, சட்டதிட்டத்தில் அரிய உயர்வு

பெற்ற தமிழ் பண்டிதரான திரு. சுப்பிரமணியபிள்ளை அவர்கள் "கோவில் பூசாரி" ஆரியவகுப்பைச் சேர்ந்த சூத்திரனையும் விடத் தாழ்ந்தவன் என்று குறிப்பிடுவதைக் காண்கிறோம். ஆகையினால் ஆரியர்களுடைய கருத்துப்படி தென்னிந்தியாவிலிருக்கும் கோவில் பூசாரிகள் சூத்திரர்கள் கூட அல்ல; அதிலும் குறைந்தவர்களாவார்கள். சூத்திரரிலும் குறைந்த ஒருசாதி ஆரிய வகுப்பிலில்லை.

"தென் இந்தியாவில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் கோவில்களிற் பெரும்பாலானவை ஆரியர்களால் ஏற்படுத்தப்பட்டவை யல்லவென்பதையும், ஆரியர்களல்லாதவர்களால் ஏற்படுத்தப்பட்டு ஆரியர்களல்லாதவர்களாலேயே அவற்றிற்குச் சொத்துக்களும் விடப்பட்டனவென்பதையும், வடநாட்டில் ஏற்பட்டுள்ள மத ஸ்தாபனங்கள் எல்லாம் ஆரியர்களாலேயே ஏற்படுத்தப்பட்டவை யென்பதையும் நாம் நினைக்கும்போது, இவ்விருதிறப்பட்ட கோவில்களின் வித்தியாசங்களும் நமக்குப் புலப்படும்" என்று ஒரு பிரபல சென்னைக்கேஸில் ஜஸ்டிஸ் சேஷகிரி ஐயர் அவர்கள் குறிப்பிட்டார்.

ஆகையினால், தென்னிந்தியக்கோவில்களெல்லாம் ஆரியர்களல்லாதாராலேயே கட்டப்பட்டு, மான்யங்களும் விடப்பட்டனவென்றும், அந்தக்கோவில் பூசாரிகள் ஆரியர்களுடைய பாகுபாட்டின்படியுங் கூட சூத்திரர்களை விடத் தாழ்ந்தவர்கள், அதாவது சாதியற்றவர்கள் என்றும் நாம் அறிந்தோம்.

"தென்னிந்தியாவிலுள்ள அனேகக் கோவில்கள் (பழனி உள்பட) சாதிப்பற்று, குடும்பப்பற்று அற்ற பார்ப்பனரல்லாத பக்தர்களால் ஏற்படுத்தப்பட்டவை" யென்று காலஞ்சென்ற ஜஸ்டிஸ் சதாசிவ ஐயர் அவர்கள் கூறியிருக்கின்றார். "சாதி உணர்ச்சியற்ற பார்ப்பனரல்லாதாரின் பெருந்தன்மையானது அவர்களது சுயநலமற்ற தன்மையாலும், உயர்ந்த ஞானத்தினாலும், பக்தியினாலும் ஏற்பட்டதாகும்" என்றும் அவரே குறிப்பிட்டிருக்கின்றார்.

பிரபல சென்னை நீதிபதியொருவர் அடியில்வருமாறு எழுதுகின்றார்:—

"மிகப்பெரிய கோவில்களையும், ஏராளமான சொத்துக்கள் விடப்பட்ட கோவில்களையும் இந்தியாவின் தென் திசையிலும்,

மேற்றிசையிலுந்தான் காண முடியும். வட இந்தியாவிலுள்ள காசி, பூரி, கயா, ஹரித்துவாரம் போன்ற இடங்களில் சில பெரிய கோவில்களிருந்த போதிலும், தென் இந்தியாவை அழகுபடுத்தும் பெரிய கோவில்களுடன் அவற்றை ஒப்பிட்டுப் பார்க்கமுடியாது. தென்னிந்தியாவிலுள்ள எந்தக்கோவிலின் பண்டைச்சரித்திரத்தைப் பார்ப்போமானாலும் அந்த இடத்தில் அவ்வூர் தேவதைக்காக ஒரு சிறு கோவில் ஏற்படுத்தியிருந்ததையும், அதில் சூத்திரர்களே பூஜை முதலியன நடத்திவந்ததையும் நாம் முதலாவது பார்க்கலாம். பின்னர் பிராமணர்கள்வரவே, ஏராளமான ஆதாயம் கிடைப்பதைக் கண்டவுடன் பூஜை முதலானவைகளெல்லாம் அவர்கள் கையில் சிக்கின. பொதுமக்களுடைய வரிப்பணத்தைக்கொண்டும், சூத்திரர்கள் அளித்த நிவேதனம், திரவியதானம் இவற்றைக் கொண்டும் சிறிய கோவிலிருந்த இடத்தில் சூத்திர அரசர்களால் பெரிய கோவில் கட்டப்பட்டது; பின்னர், அந்தக் கோவிலிலுள்ள கடவுளுடைய சரித்திரத்தைப்பற்றி ஸ்தல புராணமொன்று தோற்றுவிக்கப்பட்டது. அதற்குப்பின்னல் தர்மகர்த்தாக்கள் வந்து பணம் திரட்டி ஆலய வழிபாட்டை உறுதிப்படுத்தினார்கள். இவ்வாறு நாம் பார்த்தால், முக்கியமாக எல்லாக்கோவில்களும் ஆதியில் சூத்திரர் கோவில்களாகவே இருந்திருக்கவேண்டும் என்பது விளங்கும்.''

இதனால் அறியக்கிடப்பவை என்னவென்றால், சாதிஉணர்ச்சியற்ற பார்ப்பனரல்லாதார் தென் இந்தியாவில் இன்று நிலை நிற்கும் கோவில்களை ஸ்தாபித்திருப்பதும், சாதி பேதமில்லாதவர்களைக் கோவில் பூசாரிகளாக்கியிருப்பதும், இந்தக் கோவில் வழிபாட்டுக்கு சாதி, வகுப்பு வித்தியாசமில்லாத ஆகமங்களை வகுத்திருப்பதுமாகும்.

"கடவுள் வழிபாட்டுக்கு இன்றியமையாத வேத மந்திரங்களை சூத்திரர்கள் ஓதக்கூடாது என்பதாக ஸ்மிருதிகள் வரையறுத்திருக்கின்றன. சூத்திரன் ஏற்படுத்தின கோவிலிலோ, அல்லதுஅந்தக் கோவிலிலிருக்கும் கடவுளையோ ஒரு பிராமணன் வணங்கக் கூடாது என்றும் தடுக்கப்பட்டிருக்கிறது. மனுதர்ம சாஸ்திரத்தில் குறிப்பிட்டிருக்கும் மதக் கோட்பாடுகளெல்லாம் இரு பிறப்பாளரான உயர்ந்த மூன்று சாதிக்காரர்கட்கு மட்டும் உரித்தானவை

யென்றும் ஸ்மிருதிகள் கூறுகின்றன" என்பதாக மிஸ்டர் ஜே ஸி. கோஷ் என்னும் வங்காள தாகூர்சட்டவிரிவுரையாளர் கூறுகின்றார்.

திரு. பி. டி. சீனிவாசய்யங்கார் அவர்கள் அடியில் வருமாறு குறிப்பிடுகின்றார்:—

"பிராமணர்கள் நடத்திவந்தயாகம் முதலானவைகளெல்லாம் பொதுமக்களுடைய மதத்தைச் சேர்ந்தவையல்லவென்பதை நாம் உணரவேண்டும். ஏனெனில், அவற்றில் பிராமணர்கள் மட்டுமே கலந்துகொள்ளமுடியும். அரசர்களும், தனவந்தர்களும், வியாபாரிகளும் அவற்றிற்குப் பொருளுதவி செய்தாலும், அந்தக் கிரியைகளில் நேரிற் பங்கு கொள்ள அவர்களுக்கு உரிமையில்லை. ஆகம விதிப்படியுள்ள வழிபாடோ அக்னியோடு யாதொரு சம்பந்தமுமில்லாததாலும், வேதமந்திரங்களை ஓதவேண்டிய அவசியமில்லாததாலும், இந்த ஆகம வழிபாடானது பண்டைக்காலத் திராவிட மக்களின் கிரியைகளினின்றும் உற்பத்தியாகியிருக்க வேண்டும். அந்த வேத காலத்திலேயே சாதாரண மக்கள் அக்னி சம்பந்த மற்ற கிரியைகளை நடத்தியே வந்திருக்கவேண்டும்".

ஆகையினால் சூத்திரன் பூசாரியாகவுள்ள எந்தக் கோவிலிலாவது பிராமணன் சென்று வணங்குவதில்லை. சூத்திரனைவிடத் தாழ்ந்திருக்கும் ஆதிசைவர்கள் பூஜை செய்யும் கோவிலில் பிராமணர்கள் தரிசித்திருக்கமாட்டார்கள். ஏனெனில், ஆகமங்களுக்குச் சாதிவித்தியாசங்கிடையாது; இந்தக் கோவில்களும் சாதிவித்தியாசம் பாராட்டாமலே ஏற்படுத்தப்பட்டன; பூசாரியும் இன்ன சாதியில் சேர்ந்தவன் தான் என்று வரையறுக்கவுமில்லை.

எனவே, தென்னிந்தியாவில் இன்று ஆகம முறைப்படி வழிபாடு நடைபெறும் ஒவ்வொரு பொதுக்கோவிலிலும், ஆதிசைவன் பூஜை நடத்தும் ஒவ்வொருபொதுக்கோவிலிலும் எத்தகையவித்தியாசமுமின்றி சகல இந்துக்களும் சென்று வழிபட உரிமையுண்டு. சட்ட ரீதியாகவோ, சரித்திர ஆராய்ச்சிப்படியோ அல்லது மதத்தின் படியோ எவ்விதம் பார்த்தாலும் தென் இந்தியாவில் ஏற்பட்டுள்ள பொதுக்கோவில் எதுவும் பிராமணர்க்கோ அன்றி இருபிறப்பாளர்களான உயர் சாதிக்காரர்களுக்கோ ஏற்படுத்தப்பட்ட

தல்லவென்பது நிச்சயம். பாமர மக்களுக்கும், தாழ்ந்த சாதிக்காரர்களுக்கும், அன்னிய மதஸ்தர்களுக்குமாகவே முக்கியமாக இந்தக் கோவில்கள் ஏற்பட்டன; சாதி இந்துக்களுக்கு உபயோகப்பட்டது இரண்டாவதாகத்தான்.

## 13–வது அத்தியாயம்.

ஆகம முறைப்படி ஸ்தாபிக்கப்பட்ட, அல்லது ஆகம வழிபாட்டு முறை ஒப்புக்கொள்ளப்பட்ட, அல்லது ஆகமவிதிப்படி பூஜை நடைபெறுகிற எந்தக்கோவிலும் சர்வ ஜாதி மதஸ்தர்களுக்கும் பொதுவாகப் பாத்தியப்பட்டதாக இருந்ததென்றும், அது சாதி வித்தியாசத்தைக் கடந்து நின்றதென்றும், பக்தர்கள், வழிபடுவோர்கட்கிடையே அந்தக் கோவிலில் சாதி வித்தியாசம் பாராட்டுவதற்கிடமில்லையென்றும் தெளிவுபடுத்த இதுகாறும் முயற்சித்தேன்.

ஆகம முறையைத் தழுவிய கோவில் சாதி வித்தியாசத்தைப் பாராட்டாது சர்வ சமய சமரஸத் தன்மையுடன் விளங்கியதென்பது அடியில் வருவனவற்றினின்றும் இன்னும் அதிகமாக விளக்கமாகும்:

(1) தென்னிந்தியாவிலுள்ள சைவக் கோவில்களிற் பெரும்பாலானவற்றிலெல்லாம் அறுபத்து மூன்று நாயன்மார்களென்னும் சிவனடியார்கள் பிரதிஷ்டை செய்யப்பட்டு வணங்கப்பட்டு வருகிறார்கள். இந்த நாயன்மார்கள் பறையன் முதல் பிராமணன் வரையுள்ள சகல சாதிகளிலிருந்தும் எடுக்கப்பட்டிருக்கிறார்கள்; சண்டாளரென்றும், தீண்டப்படாதவர்களென்றும் கருதப்படுகிற சாதிகளைச் சேர்ந்தவர்களும் இந்த நாயன்மார் கூட்டத்திலுண்டு. பிறப்பு காரணமாக மட்டும் ஒருவன் கோவிலுக்குள் நுழையலாமென்றோ, அல்லது நுழையக்கூடாதென்றோ விதியேற்பட்டிருந்தால், இந்தக்கீழ்சாதி சிவனடியார்கள் கோவிலுக்

குள் நுழையவோ, நாயன்மாராகக்கருதப்படவோ, அல்லது அவர்கள் கோவிலுக்குள் இடம் பெறவோ, பூஜிக்கப்படவோ சம்மதித்திருக்கமாட்டார்கள். இதிலிருந்து இந்தக் கோவில்களை ஸ்தாபித்தவர்களுடைய உயரிய தாராள நோக்கத்தை நாம் அறிவதோடு, சாதிவித்தியாசம் இதிற் கலக்கவில்லை யென்பதையும் உணர்கிறோம். அந்தக் காலத்தில் யாரும் சாதிப் பாகுபாட்டைக் கவனிக்கவில்லை; மதத்தைப்பற்றி மட்டுமே கவனித்து வந்தார்கள்.

பாமர ஜனங்களுக்காகவே விக்கிரக வணக்கம் ஏற்படுத்தப் பட்டது என்பதை ஏற்கனவே குறிப்பிட்டிருக்கிறோம். ஜஸ்டிஸ் சதாசிவ ஐயர் அவர்களுடைய அபிப்பிராயமும் இது தான். இதே அபிப்பிராயத்தைக் கொண்ட திரு. P. T. சீனிவாசய்யங்கார் அவர்கள் எழுதுவதாவது:—“வைதீகக் கிரியைகளில், வணங்கப்படும் தேவதைக்குச் சின்னம் அவசியமில்லை. எல்லாக் கடவுள்களுக்கும் அக்னியே பிரதிநிதியாகக் கொள்ளப்பட்டது. ஆனால் ஆகம விதிப்படி வணங்கப்படும் ஒரே தெய்வத்தின் அறிகுறியாக வாள் போன்ற ஒரு ஆயுதத்தையோ, கம்பையோ, பட்டுப்போன அல்லது தழைத்து நின்ற மரத்தையோ, கல்லையோ, நீரோடையையோ, லிங்கத்தையோ, சாளக்கிராமத்தையோ, படத்தையோ, கற்சிலையையோ அல்லது செங்கல்லாலும் சுண்ணம்பாலும் கட்டப்பட்ட உருவத்தையோ வைக்கவேண்டியிருந்தது.”

ஆலய வழிபாடும் விக்கிரக ஆராதனையும் திராவிடர்களிடமிருந்து ஆரியர் கற்றுக்கொண்ட கொள்கைகளென ஏற்கனவே சொல்லப்பட்டிருக்கிறது. “அன்னிய மதக்கலப்பு ஏற்படுமுன் வேதமதத்தில் எந்தக்காலத்திலும் விக்கிரக ஆராதனை யிருந்ததில்லை” யென்று ரகோஸின் கூறுகின்றார். ஆகமம் என்ற பதமே “வடமொழியாளர்கள் தந்திரங்களுக்குக் கொடுத்ததாகுமென்று தோன்றுகிறது. அது ‘வந்தது’—அதாவது திராவிடர்களிடமிருந்து ஆரியர்களுக்கு வந்தது என்று பொருள் படும்.” மகா பாரத யுத்தத்திற்குப் பின், ஆரியர்களுடைய அக்னி சம்பந்தப்பட்ட சமயக் கிரியைகளெல்லாம் சிதைவுபட்ட

போது பிராமணப் புரோகிதர்களுக்குத் தொழிலில்லாமற் போய்விடவே, தேசத்தில் அப்பொழுது நடைமுறையிலிருந்து வந்த அக்னி சம்பந்தமற்ற கிரியைகள் மீது அவர்கள் கவனஞ் செலுத்தியிருக்கவேண்டும்.''

"மெதுவாக, மிக மெதுவாக வேதாந்தமும், ஆகமமும் ஒன்றாகக் கலக்க ஆரம்பித்தன. புராணங்களிற்கூட அவை யிரண்டும் வெவ்வேறாக யிருக்கின்றனவேயன்றி ஒன்றாகக் கலக்கவில்லை. சங்கராச்சாரியார் காலத்திலும் (கி. பி. 81-வது நூற்றாண்டு) அவை ஒன்றாகச் சேரவில்லை'' யென்று திரு. P. T. சீனிவாசய்யங்கார் அவர்கள் கூறுகின்றார்.

ஆகவே, அறுபத்துமூன்று நாயன்மார்களும் ஆலயங்களில் இடம் பெற்று, அவர்களுக்குப் பூஜை நடத்தப்பட்டு வருவதி னின்றும் உயர்ந்த சாதியையோ, தாழ்ந்த சாதியையோ, தீண்டத்தகாதவரையோ சேர்ந்த எவரையும் ஆலயப்பிரவேசத் தினின்றும் தடுக்க சட்டமோ, மதமோ இடங்கொடுக்கவில்லை யென்பது நன்கு புலனாகின்றது.

(2) "கடவுளுக்கு அர்ப்பணஞ் செய்யப்பட்ட உணவை, அந்தக் கடவுள் சந்நிதானத்திலேயே எல்லா வகுப்பார்க்கும் ஒரே மாதிரிப் பிரசாதமாக வழங்குவதிலிருந்து இந்தக் கோவில் களின் சர்வ சமய சாதி சமரஸத்தன்மை வெளியாகின்றது. ஒரே மதத்தாலிணைக்கப்பட்ட சகல சாதி, வகுப்பு மக்களும் சமபந்தியில் உணவு உட்கொள்ளவேண்டுமென்ற கொள்கையின் அடிப்படையான தத்துவம் மேற்குறித்த வழக்கத்தி லடங்கி யிருக்கிறது. பிராமணரல்லாதார் புகமுடியாத யாகசாலையைப் போன்று இந்தக்கோவில், ஸ்மிருதிகளிற் கண்ட ஸ்தாபனமாக இருந்திருக்குமென்றால், அங்குள்ள அனைவர்க்கும் பிரசாதம் வழங்கப்பட்டிராது'' என்று ஒரு பெரிய இந்திய சட்ட நிபுணர் கூறுகின்றார்.

ஆகையால், தென்னிந்தியாவில் ஆரியரல்லாதாரால் நிறு வப்பட்ட கோவில்கள் வழிபாட்டில் ஆகம முறையை யன்றி ஸ்மிருதி முறையைத் தழுவவில்லை யென்றும், பேதமில்லாத

இந்துக்களே கோவிலைக்கட்டி, விக்கிரகங்களைப் பிரதிஷ்டை செய்வது வழக்கமென்றும், அங்குள்ள பூசாரிகளும் சாதிபேத மற்றவர்களென்றும், ஆகமங்களே சாதி வித்தியாசம் பாராட்டவில்லையென்றும் கண்டோம். இந்தக்கோவில்களுக்குள்ளிருக்கும் சாதிபேதமற்ற நாயன்மார்களுக்குப் பூஜை செய்யப்படுகின்றது. ஆகவே, ஆகம முறையைத் தழுவிய கோவில்களில் நுழைவதற்கோ வணங்குவதற்கோ யாதொரு விதமான சாதி வித்தியாசமும் பாராட்டப்படவில்லை. ஆகமங்களை உண்மையாக உணர்ந்தால் மனிதராய்ப் பிறந்த ஒவ்வொருவரும் கடவுளை வழிபடக் கோவிலுக்குள் பிரவேசிக்கலாம் என்பது புலனாகின்றது.

பேர்பெற்ற தென்னிந்திய ஆகமப் பண்டிதரொருவர் அடியில் வருமாறு குறை கூறுகின்றார்:—“இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி ஏற்பட்ட பிறகு, இக்காலத்தில், ஆலயக்கமிட்டிகளும், தர்ம கர்த்தாக்களும் ஆகமக் கோட்பாடுகளுக்கு நேர் விரோதமான காரியங்களைச் செய்யும்படியாகப் பார்ப்பனர்களும், அவர்களுடைய ஆதிக்கத்திற்குட்பட்ட பார்ப்பனரல்லாதாரும் பல சந்தர்ப்பங்களில் தூண்டியிருக்கின்றார்கள்.” ஆனால், “ஆதிகாலந் தொட்டே, உயர்ந்த சாதியாராகிவிடவும், ஆரிய வகுப்பிற் சேரவும், ஆரியரது கடவுள்களை வணங்கவும், இந்தியாவிலுள்ள அனாரியர்களனைவரும் வருந்தத் தக்கவாறு போராடியிருக்கின்றார்கள்.........கிட்டத்தட்ட வைசியருக்குச் சமமான பதவி அனேக சூத்திரர்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆனால் பிரிட்டிஷார் வருமட்டும் சகல சூத்திரர்களும் தாழ்த்தப்பட்ட வகுப்பார்களும் அவரவர் தாழ்வான நிலைமையில் திருப்தியுடனிருந்து வந்ததோடு, பிராமணர்கள் உதவியில்லாமலே தங்கள் மதச்சடங்குகளை நடத்தியும் வந்தார்கள். ஏனெனில் பிராமணர்கள் இருபிறப்பாளர்களல்லாத மற்ற சாதியாரின் மத சம்பந்தமான சடங்குகளை நடத்திவைக்கக் கூடாதென மனு விதித்திருக்கிறார்” என்று வட இந்தியாவைச்சேர்ந்த இந்து வழக்கறிஞரொருவர் வருத்தப்படுகிறார்.

பிராமணர்கள் கர்ப்பக்கிரகத்துக்குள் நுழைவதாலும், அர்ச்சனை செய்வதாலும் அரசனுக்கும் ஜன சமூகத்துக்கும் கேடு விளையுமென ஆகமங்கள் வெளிப்படையாகப் பிராமணர்களைத் தடுத்திருந்தபோதிலும், நாம் இப்பொழுது என்ன காண்கின்றோம்?

"பேர்கொண்ட பார்ப்பான் பிரான்றனை அர்ச்சித்தால்
போர்கொண்ட வேந்தர்க்குப் பொல்லாவியாதியாம்
பார்கொண்ட நாட்டுக்குப் பஞ்சமுமாமென்றே
சீர்கொண்ட நந்தி தெரிந்துரைத்தானே"

என்று திருமூலர் தமது திருமந்திரத்தில் குறித்திருக்கின்றார்.

"ஒரு நூற்றாண்டுக்கு முன்வரையிலும் பழனிக்கோவில் பூசாரிகூட பார்ப்பன னல்லாதானாகவே யிருந்தான்" என்று ஜஸ்டிஸ் சதாசிவ ஐயர் அவர்கள் குறிப்பிட்டார். இப்பொழுது, அதாவது அந்தக்கோவில் பிரிட்டிஷாரிடமிருந்து பிராமண ஆதிக்கத்துக்கு மாறிய பிற்பாடு, அங்குள்ள பூசாரி ஒரு பிராமணன்தான் என்பது இதினின்றும் வெளிப்படையாகின்றது.

"உதாரணமாக திருச்செந்தூரில் சுப்பிரமணியக்கடவுளுக்குப் பூசைசெய்ய ஆதி சைவப்பூசாரிகளுக்குப் பதிலாக ஏற்படுத்தப்பட்ட மாத்துவ அல்லது ஸ்மார்த்தப்பூசாரிகளுக்கு, அந்தக் கோவில் வழிபாட்டுக்காகஆதிகாலத்தில்ஏற்படுத்தப்பட்டகுமார மந்திரம் என்ற ஆகமத்தைப்பற்றி ஒன்றுமே தெரியாது." "கர்ப்பக்கிரகத்துக்குள் நுழைந்து பூசை செய்யப் பல இடங்களிலும் பலதடவைகளில் ஸ்ரீ சங்கராச்சாரியார் முயற்சித்ததுண்டு." திருவனந்தபுரத்திலுள்ள ஸ்ரீ பத்மநாபசுவாமி கோவிலுக்குள் நுழைந்து பூஜை செய்ய "லோககுரு"வான சங்கராச்சாரியாருக்குக் கூடச் சில கட்டுப்பாடுகளுண்டு என்பதாகத் திருவிதாங்கூர் அரசாங்கச்சரித்திரக்குறிப்பில் (Travancore State Manual) குறிக்கப்பட்டிருக்கிறது. "ஸ்ரீ சங்கராச்சாரியார் தீட்சை பெறாதவரானபடியால், ஆகமவிதிப்படி அவர் கர்ப்பக்கிரகத்துக்குள் பிரவேசிக்கக்கூடாது." "ஆதி சங்கரரின் விக்கிரகத்தை சைவக் கோவில்களில் பிரதிஷ்டை செய்ய பலத்த முயற்சி செய்யப்பட்

டது; இன்னும் செய்யப்பட்டுவருகிறது." சில சந்தர்ப்பங்களில் பிராமணர்களால் தூண்டப்பட்டு சங்கராச்சாரியார் "கோவிலுக்குள்ளேகூட தங்குவதுண்டு." இவையெல்லாம் ஆகமசாஸ்திரங்களுக்கு முற்றும் விரோதமானவையாகும்.

சில பொதுக்கோவில்களில் "சூத்திரப்பூசாரிகளை, தர்மகர்த்தாக்கள் தமது அறியாமையால் நீக்கிவிட்டு அவர்களுக்குப் பதிலாகப் பிராமணர்களை நியமித்திருக்கின்றார்கள். இது காரணத்தால் இந்த ஆலயங்களில் ஆகம முறைப்படி வழிபாடு நடத்தப்படவில்லை."

ஆகமங்கள் பூராவாகக் கைவிடப்பட்டு, ஸ்மிருதிகளை அடிப்படையாகக்கொண்ட பிராமணீயக்கிரியைகள் மட்டும் நடத்தப்படுவதற்கு எடுத்துக்காட்டாக இன்னும் பல உதாரணங்களைக் காண்பிக்கலாம். பிரிட்டிஷார் இந்தியாவைக் கைப்பற்றின பிற்பாடு, அவர்களுடைய ஆதரவில் தென்னிந்திய இந்து சமூகத்தில் பிராமணர்கள் ஆதிக்கமும் பதவியும் பெற்ற காலத்தில் இது ஏற்பட்டது. கோவில் பூசாரி, கமிட்டியார், தர்மகர்த்தாக்கள் இவர்கள் அனைவரும் ஆகமத்தைப்பற்றிச் சிறிதேனும் தெரியாதிருந்ததும் தங்களது ஸ்மிருதிகளைப் பரப்பவேண்டுமென்று அக்கரைகொண்டிருந்த பார்ப்பனரது ஆதிக்கமும் இவ்வாறு ஏற்படக்காரணமாயின. இன்று பொதுக்கோவில்களில் நடைபெற்றுவரும் கைங்கரியங்களெல்லாம் ஆகமப்படியோ, பழக்கவழக்கத்தின்படியோ நடக்கவில்லை. ஆனால் அதற்கு நேர்மாறாக இந்தக்கோவில்களெல்லாம் எந்த விதிகளின்படி ஸ்தாபிக்கப்பட்டனவோ அந்த விதிகளையே புறக்கணித்துவிட்டன. இன்றைய ஆலயவழிபாட்டுமுறை சகல மதவிதிகளுக்கும் எதிரிடையானது. ஆகையினால், ஆலய வழிபாட்டினின்றும் யாரையுந் தடுப்பதானது மதத்துக்கு மாறுபாடானது என்பது மட்டுமன்றி, கோவிலின் ஸ்தாபனத்துக்கே எதிரிடையானதுமாகும். ஏனெனில், நாம் ஏற்கனவே கண்டபடி தென்னிந்திய ஆலயங்கள் அனுசரிக்கும் ஆகம தத்துவப்படி தீண்டத்தக்க அல்லது தீண்டத்தகாத எந்த இந்துவையும் ஆலயத்தினுள் பிரவேசிக்கவோ, வழிபடவோ தடுக்க இடமில்லை.

ஆகவே, தற்காலத்தில் சில வகுப்பாருக்கு ஆலயப்பிரவேசம் மறுக்கப்படுவதற்கு மத சம்பந்தமான ஆதரவு ஒன்றுமேயில்லையென்று நாம் திட்டமாக அறிகிறோம். பின், இந்தத் தடை ஏற்படக் காரணமென்ன?

## 14-வது அத்தியாயம்.

சாதிப் பாகுபாடு அல்லது வருண பேதமானது திராவிடக் கலைஞானத்திற்கும், விவேகத்துக்கும் வேறுபட்டது என்பதை அநேகமாக எல்லாரும் ஒப்புக்கொள்ளத் தயாராக இருப்பார்கள். சாதி பேதத்தைத் தென்னாட்டில் புகுத்தியது ஆரியர்தானென்று † கபிலர் சொன்னதைக் கூட நாம் தள்ளிவிடலாம். கபிலர் என்பவர் யார், அவர் எக்காலத்திலிருந்தார் என்பதையும் விசாரணை செய்யவேண்டியதில்லை.

---

† பார்ப்பன மாந்தர்காள் பகர்வது கேண்மின்

*　*　*　*　*

நால்வகைச்சாதியிந் நாட்டினில் நாட்டினீர்

*　*　*　*　*

பூசுரர் புணர்ந்து புலைச்சியரீன்ற
புத்திரராயினோர் பூசுரரல்லரோ?

*　*　*　*　*

சேற்றிற் பிறந்த செங்கழுநீர் போல்
பிரமற்குக் கூத்திபெற்ற வசிட்டரும்
அவர்க்குச் சண்டாளியில் அமைந்த சக்தியும்
சக்திக்குப்புலைச்சியிற் சனித்த பாராசரும்
அவர்க்கு மீன்வாணிச்சி அடைந்த வியாசரும்
வேதங்களோதி மேன்மைப்பட்டு
மாதவராகி வயங்கினரன்றே
அருந்தவ மாமுனியாம் பகவற்குக்
கருவூர்ப்பெரும்பதிக் கட்பெரும் புலைச்சி
ஆதிவயிற்றி லன்றவதரித்த
கான்முளையாகிய கபிலனும் யானே.

—'கபிலர் அகவல்'.

பண்டைக் காலத்தில் சாதி அல்லது வருணப் பாகுபாட்டிற்குப் பதிலாகத் தென்னிந்தியாவில், மக்கள் வசித்து வந்த நிலங்களை யொட்டியும், அவர்கள் கைக்கொண்டிருந்த தொழில்களைப் பொறுத்தும் ஒருவிதப் பாகுபாடு இருந்து வந்தது என்பதை அறிஞர்களனைவரும் ஒப்புக்கொள்கின்றார்கள்.

மேலும், தென்னாட்டில் நீண்டகாலமாகப் பௌத்தமும், சமணமும் பூரண ஆதிக்கம் செலுத்தி வந்தன. அதனால், சைவமோ வைஷ்ணவமோ குறிப்பிடத்தக்க உயர் நிலையிலிருந்ததில்லை. பௌத்தம், சமணம் ஆகிய இரு மதங்களும் தென்னிந்தியாவில் எவ்வளவு காலம் நிலவின என்பதைப் பற்றி சரித்திராசிரியர்களுக்குள் இன்னும் அபிப்பிராய பேதமிருந்து வருகிறது. எனினும், கிட்டத்தட்ட ஏழாவது நூற்றாண்டோடு இரு மதங்களுடையவும் செல்வாக்கு குன்ற வாரம்பித்தது என்று வைத்துக் கொள்ளலாம். சைவர்களுடைய கொடுமையினாற்றான் இவை பூரணமாகச் சிதைவுற்றனவென்று சொல்ல முடியாமலிருக்கலாம். இவ்விரு மதங்கள் மீதும் ஏற்பட்ட சமூக எதிர்ப்பினாலும் இவ்வாறு நேர்ந்திருக்கலாம். இம்மதங்களின் கடினமான ஒழுக்க முறைகளும், பாழான சமயச் சடங்குகளும், ஒரு வேளை அவற்றின் சகிக்க முடியாத ஜீவகாருண்யத்தன்மையுங்கூட பொது ஜனங்களிடையே வெறுப்பைத் தோற்றுவித்திருக்கலாம். ஆனால், இந்தக் காலத்தில் தான் தென்னிந்தியாவில் ஆகமங்கள் உச்ச நிலையை அடைந்தனவென்பதை எவ்விதத்திலும் மறுக்க முடியாது. பௌத்தமும் சமணமும் சாதிவித்தியாசமில்லாத மதங்களாகும். பிராமணீயத்தையும், வருணாசிரம தர்மமென்னும் சாதிப் பாகுபாட்டையும் தகர்க்கவேண்டும் என்ற நோக்கத்தை முக்கியமாகக் கொண்டே அவை வட இந்தியாவில் தோற்றுவிக்கப்பட்டன. எனவே, ஆதி முதற்கொண்டே சாதிபேதமறியாத தென்னிந்தியாவில் அவை வளம் பெற்று ஓங்கின.

இந்த சந்தர்ப்பத்தில் சைவ சமயம் தலை தூக்கி சோழ, பாண்டிய மன்னர்களையும் பிரபுக்களையும் தன்வசமாக்கியது. சேர தேசத்துச் சேரமான் பெருமாளோ ஒன்றில் பௌத்த மதத்

தைத் தழுவியிருக்கவேண்டும்; அல்லது இஸ்லாத்திற் சேர்ந்து மெக்காவுக்குப் போயிருக்கவேண்டும். எவ்விதமாவது அவர் மறைவுற்றார்; ஆனால் மதம் மாறிய பிறகுதான் மறைவுற்றார்.

தென் இந்தியாவில் திராவிடர்களிடையே பௌத்தமதமும் சமணமதமும் அதிசயிக்கத்தக்கவிதத்தில் பரவி வந்தன என்பதை யாரும் மறுக்க முடியாது. அரசர்கள்மீதும், பிரபுக்கள்மீதும் சைவசமயம் எவ்வளவு தூரம் ஆதிக்கம் பெற்றிருந்த போதிலும் பொது மக்களிடையே பரவுவதற்கு அது மிகவுங் கஷ்டப்பட்டிருக்கவேண்டும்.

ஆகையினாலேயே, முன் குறிப்பிட்டதுபோல ஒரு பறையனும் தீட்சை பெற்று ஒரு பிராமணனுடைய குருவாகக்கூடவர முடியுமென்ற அளவிற்கு ஆகமங்கள் சர்வசாதி சமய சமரஸத் தன்மையைக் கைக்கொள்ளவேண்டியதாயிற்று. இது மட்டுமா? உலகத்திலுள்ள எந்தமதமும் கைக்கொண்டிருக்கிற முறைகளெல்லாவற்றையும்விட சைவசமயப்படி தீட்சை பெறுவதென்பது மிக மிக எளிதான காரியமாகும். தீட்சை கொடுக்கக்கூடியவன் கல்வி கேள்வியற்றவனாக இருக்கலாம்; தமிழோ, சமஸ்கிருதமோ, அவன் தெரிந்திருக்கவேண்டியதில்லை; அவன் எதுவாகவுமிருக்கலாம்.

இதற்குக் காரணமென்ன? தென்னிந்தியாவில் சமண, புத்த மதங்களைச் சேர்ந்திருந்த பொதுமக்களிடையிலிருந்து அந்தக்காலத்தில் ஒருவரையாவது சைவ மதத்துக்கு மாற்றியிருக்கமுடியாது. சைவ மதத்துக்கு ஆள் சேர்க்க மிகப் பரந்த கொள்கை தேவைப்பட்டது; தேவைப்பட்ட தந்திரமுங் கையாளப்பட்டது. சிவ தீட்சை பெறுவதைச் சடங்கென்று சொல்வதைவிட வெறும் வேடிக்கையென்று சொல்வது அதிகமாகப் பொருந்தும்' இன்றளவும் இது அவ்வாறே யிருந்து வருகிறது. ஆட்களின் எண்ணிக்கை அதிகரிக்கவேண்டுமென்பதே நோக்கம். இக்காலத்திலும் சாதியினின்றும் விலக்கப்பட்டவர்களையும் இந்துக்களெனச்சேர்த்து இந்து மதஸ்தர்களின் தொகையைக்கணக்கிடுகிறார்களல்லவா? இதில் தத்துவமோ, மத சம்பிரதாயமோ எதுவு

மில்லை. இன்று கிறிஸ்தவ மதப் பிரசாரகர்கள் எவ்வாறு தம் மதத்திற்குச் சுலபமாக ஆட்களைச் சேர்த்துவருகிறார்களோ அதேமாதிரி சைவநாயன்மார்களும் அக்காலத்தில் ஆட்களைச் சேர்த்துவந்தார்கள். ஆட்கள் அதிகமாகச் சேரச் சேர அவர்களுடைய மகிழ்ச்சியும் அதிகப்பட்டது. இவ்விதமாகத்தான் ஒவ்வொரு சாதியிலிருந்தும், தொழில் வகுப்புகளிலிருந்தும் அறுபத்துமூன்று நாயன்மார்களும் திரட்டப்பட்டார்கள். தென் இந்தியாவிலுள்ள சகலபொதுக்கோவில்களிலும் வைத்து வணங்கப்படும் இந்த அறுபத்துமூன்று நாயன்மார்களில் நாடார்குலத்தைச் சேர்ந்த ஒருவரும், சக்கிலிய வகுப்பைச் சேர்ந்த ஒருவரும் இருக்கின்றார்களென்பதை நாம் மறந்துவிடக்கூடாது.

தந்திரத்தைக் கையாண்டார்கள்; சைவசமயம் பலமுற்றது; சைவர்கள் தொகை அதிகரித்து பௌத்தமதமும், சமணமதமும் மறைந்தன. எவ்விதம் மறைந்தன வென்பது வேறுவிஷயம்.

இவ்விதம் சைவம் வளருவதற்கு ஒன்றிரண்டு சிறிய இடையூறுகள் இருந்திருக்கவேண்டும்; அவை கோவிலில்லாக்குறையும் கோவிற்பணி செய்யும் சிற்பிகளில்லாக் குறையுந்தான். தென் இந்தியாவிலுள்ள பழைய கோவில்களில் பெரும்பாலானவையும் சமணக் கோவில்களாகவோ, புத்த ஆலயங்களாகவோ இருந்திருக்கவேண்டும் என அவற்றின் இயல்பினாலும் சரித்திர ஆராய்ச்சியினாலும் நாம் தீர்மானிக்கமுடியும்.

"நாம் இதுவரை சொல்லி வந்தகாலத்தில் (கி. மு. 200—கி. பி. 400) பிராமண மதத்தின் உபயோகத்துக்காக அமைக்கப்பட்ட கட்டிடத்தின் அல்லது, சிற்பத்தின் அடையாளமெதுவுமிப்பொழுதில்லை. பிராமண மதம் இருந்தது என்பது உண்மையே. ஆனால், அது ஒரு உன்னத நிலையை அடைந்திருக்கவில்லை. அரசர்கள் முதல் தொழிலாளர்கள் வரையுள்ள பெரும்பாலான மக்கள் புத்தமதத்தையே பின்பற்றி வந்தார்கள்" என்று காலஞ் சென்ற பந்தர்க்கர் கூறியுள்ளார்.

டாக்டர் ரைஸ் டேவிட்ஸ் எழுதுவதாவது:- "கோதாவரிக்குத்தெற்கே நாம் நேர்மாறான நிலைமையை—அதாவது ஆரியக்

கலப்பு மிகச்சுருங்கியிருப்பதை—காண்பதிலிருந்து தென்னிந்தியாவில் ஆரியர்கள் குடியேறியதும் மிகவும் பிற்பட்ட காலத்தென்றும், தொகையில் மிகவும் குறைந்ததென்றும் உணர்கிறோம். பிராமணர்கள் எல்லாவிடங்களிலும் குடியேறியிருந்தபோதிலும், இக்காலத்தில் இவ்வளவு தூரம் ஆதிக்கம் பெற்றிருக்கும் பிராமணீயமானது இந்தப்பாகங்களில் ஆதிக்கம்பெற நீண்டகாலமாயிற்று. தென்னிந்தியாவிலுள்ள பணக்கார வகுப்புக்களும், அறிவாளிகளும் இந்துக்கள் ஆகிறதற்கு முன்பாக பௌத்தர்களாகவும், சமணர்களாகவுமிருந்தார்கள். ஐந்தாவது ஆறாவது நூற்றாண்டுகளில் கூட, காஞ்சிபுரத்திலும் தஞ்சாவூரிலும் பாலி பாஷையில் புத்தகங்கள் எழுதப்பட்டிருக்கின்றன. பௌத்தமதம் வீழ்ச்சியடைந்ததும் சமணமதம் உன்னத நிலைக்கு வந்தது. நான்காவது நூற்றாண்டிலும் ஐந்தாவது நூற்றாண்டிலும் வட இந்தியாவில் பிராமணீயம் உறுதியாக ஸ்தாபிக்கப்பட்ட பிறகுதான் தென்னிந்தியாவிலும் இதற்கு ஒரு முக்கியஸ்தானம் கிடைத்தது. இந்த நிலைமையை அடைந்ததும், அது வட இந்தியாவில் விரைவாக அபிவிருத்தியடைந்து குமாரிலபட்டர் காலம் முதல் சங்கரர் காலம் வரை (கி. பி. 700—கி. பி. 830) முடிவாக அது பெருத்த வெற்றியும் பெற்றது. மேற் குறித்த இருவரும் தென்னிந்தியாவில் பிறந்தவர்கள்தான்; இவர்களில் ஒருவர் தமிழராவார்"

ஹுயூன் ஸாங்(Huen Tsang)என்றசீனதேசத்து பௌத்தப்பிரயாணி கி. பி. 640-வது ஆண்டில் தென்னிந்தியாவுக்கு வந்தபோது காஞ்சிபுரத்தைத் தரிசித்துவிட்டு. அந்த நகரத்தில் நூறு பௌத்த மடாலயங்களும், பதினாயிரம் புத்தமத சந்நியாசிகளும் சுமார் எண்பது கோவில்களுமிருந்ததாகவும், இந்தக் கோவில்களிற் பெரும்பாலானவை திகம்பர சமணர்களுக்குச் சொந்தமாகவிருந்ததாகவும் விவரித்திருக்கிறார். காஞ்சீவரத்துக்குச்சமீபமுள்ள மற்ற இடங்களிலும் நூற்றுக்கணக்கான தேவர் கோவில்களிருந்ததாகவும், சமணமதத்தின் பல்வேறு பிரிவுகளையுஞ் சார்ந்தவர்கள் அங்கிருந்ததாகவும், இவர்களில் திகம்பரச்சமணர்களே ஏராளமாக இருந்ததாகவும் அவர் குறிப்பிட்

டுள்ளார். இன்றையதினம் காஞ்சிவரம் இந்து மதக்கோவில்க ளுக்குப் பேர்பெற்ற ஸ்தலமாகவிருக்கிறது. ஒருகாலத்தில் அது பௌத்தமதத்துக்கோ சமணமதத்துக்கோ முக்கியஸ்தலமாக இருந்தது என்பதற்கு அடையாளம் இப்பொழுது அங்கில்லை. ஆனால் இது ஒரு அற்ப விஷயம். ஏனெனில், இந்தக்கோவில் களை ஸ்தாபித்த சமண அரசர்கள் மறுநாளே சைவ அரசர்க ளாக மாறி விடுகின்றனர். அதுபோலவேதான் சமணமதத் தைச்சார்ந்திருந்த கூன் பாண்டியனும் ஞானசம்பந்தருடைய உபதேசப்படி அதிசிரத்தையுடன் சைவமதத்தைத் தழுவி யிருக்கவேண்டும். இங்கிலாந்தில் எட்டாவது ஹென்ரி அரசர் ரோமன் கத்தோலிக்க மதத்திலிருந்து புராட்டஸ்டாண்டு மதத் திற்கு மாறினதையும், அவ்வாறு மாறியபிறகு ரோமன் கத் தோலிக்கமடாலயங்களையும் ஆசிரமங்களையும் என்ன செய்தார் என்பதையும் நாம் இந்த சந்தர்ப்பத்தில் ஞாபகப்படுத்திக்கொள் ளலாம்.

தற்காலத்திலுங்கூட இத்தகைய காரியங்கள் எவ்வாறு வே டிக்கையாக நடைபெறுகின்றனவென்பதை நாகர்கோயிலிருக் கும் பேர்பெற்ற கோவில் நன்கு விளக்குகின்றது. இங்கிருக்கும் கோவிலிருந்தே இந்நகரத்துக்குப் பெர் வந்தது. ஏற்கனவே குறிப்பிட்டுள்ளபடி சமீபகாலம் வரை இது ஒரு சமணக் கோவி லாகவேயிருந்தது. இன்றையதினம் இது திருவிதாங்கூர் தே வஸம் இலாகாவின் ஆதீனத்துக்குட்பட்ட ஒரு பழுத்த இந்து மதக் கோவிலாக விளங்குகின்றது. ஆனால் சைவர்களுக்கு ஏற் பட்ட கஷ்டம் இத்துடன் தீர்ந்துவிடவில்லை.

திருவிதாங்கூர் அரசாங்க சரித்திரபுத்தகத்தில் (State Manual) அடியிற்கண்ட குறிப்புகள் காணப்படுகின்றன:

"திராவிடமாதிரியிற் கட்டிடம் கட்டும் முறையானது முக் கியமாகத் தென் திருவிதாங்கூரில் பெரும்பாலும் வழக்கத்திலி ருந்து வந்திருக்கிறது. இங்கு சுதேசமாதிரியிற் கட்டப்பட்ட கட்டிடங்களைச் சாதாரணமாகப் பார்க்கமுடியாது. திருவனந்த புரம்வரை திராவிட முறையிற் கட்டப்பட்ட கட்டிடங்களைக் காண்

கிறோம். இந்நாட்டின் தென்பாகங்களுக்கும் வெளிநாட்டிற்கும் எளிதாகப் போக்குவரத்து ஏற்பட்டிருப்பதும், மதுரை, திருநெல்வேலி, கோயம்பத்தூர் முதலிய ஜில்லாக்களுடன் இந்தப் பாகங்கள் கொண்டிருந்த நெருங்கிய தொடர்பும் இதற்குக் காரணமாகவிருக்கலாம். இந்த ஜில்லாக்களிலேதான் திராவிட வர்க்கத்தினர் செழித்தோங்கி தங்களுடைய சிற்பத்திறமையை விளக்கும் பெரிய கட்டிடங்களைக் கட்டியிருக்கின்றனர். தெற்கேயுள்ள தாலூக்காக்களிற்சில பாண்டியன் முதலிய மன்னர் ஆட்சியிலிருந்தன. திருவிதாங்கூர் அரசர்கள் அவற்றைக் கைப்பற்றித் தம் ராஜ்யத்தோடு சேர்த்தனர்"

"சமணர்களும் பௌத்தர்களும் கட்டின கட்டிடங்களின் சில பாகங்களு மிப்பொழுதிருக்கின்றன.

"திராவிடச் சிற்ப முறையைத் தவிர்த்து சுதேசச் சிற்ப முறையொன்று மிருக்கிறது. இந்த முறையிற் கட்டப்பட்டுள்ள கட்டிடங்களுக்குத் திராவிடர் கட்டிடங்களைப் போன்று பெரும் பணச் செலவு அவசியமில்லை; அவை அவ்வளவு பெரியதாகவு மிருப்பதில்லை. ஆனால் வெளிச்சமும், காற்றும் தாராளமாக உள்ளே வரும் விதத்தில் அவை சுத்தமாக எளிய முறையிற் கட்டப்பட்டிருக்கின்றன. இக் காரணத்தால் திராவிடருடைய பெருஞ்செலவு பிடித்த கட்டிடங்களைவிட சுதேசப் பணியானது உயர்ந்தது என்பதிற் சந்தேகமில்லை. சுதேசப் பணி மலையாள தேசத்துக்கே விசேஷமானது; இதைப்போன்ற பணி இந்தியாவில் வேறெங்கு மிருப்பதாகத் தெரியவில்லை. இப்பணி முறையில் மரவேலை அதிகமாக நிரம்பியிருப்பது இதன் முக்கிய லட்சணமாகும். மலையாள தேசக்கட்டிட முறையானது நேப்பாள தேசத்திலும், திபேத்திலும் காணப்படுகிறது. இந்தக் காரணத்தைக்கொண்டும் வேறு பல காரணங்களைக்கொண்டும், இவ்விரு தேசங்களுக்கும் ஒரு காலத்தில் மலையாள தேசங்களுடன் நெருங்கிய சம்பந்தமிருந்திருக்குமென்பதில் சந்தேகமில்லையென ஸர். ஜேம்ஸ் பெர்கூஸன் (Sir James Fergusson) என்ற பேர்பெற்ற சிற்ப ஆசிரியர் சொல்லுகின்றார்: ஆனால் எக்காலத்தில்

இவ்வித சம்பந்தமிருந்ததென்பதை இதுவரையிலும் திட்டப் படுத்த முடியவில்லை. கல்லுக்குப் பதிலாக மரத்தை அதிகமாக உபயோகிக்கும் முறை சமண கோவில்களின் முக்கிய விசேஷ லட்சணம் என்றும், சமணர்களுடைய ஆதிக்கத்தினலேயே மலையாளம், நேப்பாளம், திபெத் ஆகிய தேசங்களில் இந்தச் சிற்ப முறை கையாளப்பட்டிருக்கவேண்டுமென்றும் ஸர். பெர்கூஸன் அபிப்பிராயப்படுகிருர்."

கீழ்நாட்டுச் சிற்பக் கலைக்கு ஸர் பெர்கூஸன்தான் உயர்ந்த ஆதார கர்த்தாவாவார் என்று இங்கு குறிப்பிடவேண்டியதில்லை.

## 15–வது அத்தியாயம்.

சமணக் கோவில்களை இந்துக் கோவில்களாக மாற்றின போது, விக்கிரகங்களைப் பொறுத்த மட்டிலாவது சில மாற்றங்கள் செய்யவேண்டியதாக ஏற்பட்டது. அக்காலத்தில் கோயிற் பணி முறைகள் எல்லாம் திறமை வாய்ந்த சமணச் சிற்பிகள் கையிலிருந்தன. சைவர்களுக்குச் சிற்ப வேலையைப்பற்றி யொன்றுந்தெரியாது. சமண மதத்தைச் சேர்ந்தவர்களையும், பௌத்த மதத்தைச் சேர்ந்தவர்களையும் சமணர்களென்றே தமிழர்கள் பொதுப் பெயரிட்டு அழைத்து வந்தார்கள்.

சைவ மதத்திற்குப் பிரதான விக்கிரகம் சிவலிங்கமாகும். இந்த லிங்கத்தைப் பணி செய்வதற்கு விசேஷச் சிற்பத்திறமை ஆவசியமில்லை. ஒவ்வொரு வீட்டிலுமிருக்கும் அம்மிக் குழவியை நாட்டினலும் போதுமானது. கர்ப்பக் கிரகத்துக்குள் ஒரு சமணச் சிற்பி நுழையக்கூடாததலால், சாதாரணமாகக் குழவிக் கல்லே சிவலிங்கமாக நாட்டப்பட்டு வந்திருக்கவேண்டும்.

திரு. P. T. சீனிவாசய்யங்கார் அவர்கள் 'தமிழர்களின் சரித்திரம்' என்ற தமது புத்தகத்தில் அடியில் வருமாறு குறிப்

பிட்டிருக்கிறார்:—

"கி. மு. 500-வது ஆண்டுக்கு முற்பட்ட புதிய கற்காலத்தில், கல்லிற் செய்த லிங்கமானது ஆராதனைக்காக உபயோகிப்பட்டு வந்திருக்கிறது. லோக காலம் ஆரம்பித்தபிறகு — வட இந்தியாவில் செம்பும், தென்னிந்தியாவில் இரும்பும் — அந்தந்த லோகங்களில் லிங்கத்தைச் செய்தார்கள். இந்த மாதிரி லிங்கங்களுடையவும் யோனிகளுடையவும் உருவுகள், ஹாரப்பா, மஹேஞ்ஜொ டாரோ வென்றவிடங்களில் பூமியிலிருந்துதோண்டியெடுக்கப்பட்டிருக்கின்றன. இவை இரு தினுசுகளாக இருக்கின்றன. அரை அங்குல முதல் ஒரு அடிக்கு மேற்பட்ட உயரமுள்ள சதுரங்கக்காய் போன்ற சிலைகளும், அரையங்குலமுதல் மூன்று அல்லது நான்கடி குறுக்களவுள்ள வட்ட வடிவமான கற்களும் இவற்றிற் காணப்படுகின்றன."

இவ்வாறு புதிதாகக் கண்டு பிடிக்கப்பட்டவைகளைப்பற்றி ஸர் ஜான் மார்ஷல் என்ற பேராசிரியர் (இந்திய புராதனச்சிற்ப ஆராய்ச்சி இலாகாத்தலைவர்) அடியில் வருமாறு குறிப்பிடுகிறார்:-

"இப்பொருள்களினின்றும், அவற்றின் அமைப்பினின்றும் நாம் அறியக்கூடியது என்னவென்றால், இவை ஒரு சமய வழிபாட்டுக்குரித்தான பொருள்கள் என்பதாகும். என்னுடைய அபிப்பிராயத்தில் வட்டவடிவமான கற்கள் யோனியையும், சதுரங்கக்காய் போன்ற கற்கள் லிங்கத்தையும் குறிப்பிடுவதாகக் கருதுகிறேன். யோனிகளும், லிங்கங்களும் சிவசின்னங்களென்பதும், சைவசமயம் இந்தியாவில் ஆதிகாலந்தொட்டே ஏற்பட்ட தென்பதும், அது ஆரியர்கள் இந்தியாவிற்கு வருமுன்னரே இந்தியாவில் பரவியிருக்கவேண்டு மென்பதும் சந்தேகமற்ற விஷயங்களாகும்."

எனவே, இந்தியாவின் வடமேற்கு பாகத்தில், ஹாரப்பா மஹேஞ்ஜொ டாரோ என்ற விடங்களில் தோண்டியெடுக்கப் பட்டவைகளிலிருந்து தமிழரது நாகரீகம் ஆரிய நாகரீகத்திற்குப் பல்லாயிர வருஷங்களுக்கு முற்பட்டது என்றும் அதுவும் மிக உயரிய நாகரீகமாக இருந்த தென்றும், ஒரு காலத்தில் தென்னிந்தியாவில் மட்டு மின்றி இந்தியா முழுவதும் பரவி

யிருந்த தென்றும், சிவனை வழிபடுதல் திராவிட நாகரீகத்தைச் சேர்ந்ததென்றும் தெளிவாகின்றது. மேலும் இப்பொருள்கள், திராவிடப்பெரியாரான ராவணன் சிவ பக்தன் என்பதையும், ராமாயணம் ஆரிய நாகரீகத்துக்கும் திராவிட நாகரீகத்துக்கும் ஏற்பட்ட ஒரு போராட்டத்தைக்குறிப்பிடுகின்ற தென்பதையும், ஆரியவகுப்பைச்சேர்ந்த ஒரு பிராமணன் சிவனுக்கு நைவேத்தியஞ் செய்யப்பட்ட பிரசாதத்தை அருந்தக்கூடாதெனத் தடுக்கப்பட்டதையும் ஆராய்ச்சி மூலம் ஞாபகமூட்டுகின்றன. ஆனால் சிவ விக்கிரகம் மிக எளிதாக உண்டு பண்ணக்கூடிய தென்பதையும், அதில் சிற்பத்திறமையெதுவுமில்லையென்பதையுமே இங்கு குறிப்பிட விரும்புகிறோம்.

இன்று வரையிலும், திருவிதாங்கூரிலும் ஏனைய இடங்களிலும், அழகிய கோயில்களையும், வியப்புறத்தக்க விக்ரகங்களையும் உண்டு பண்ணுபவரும், சாதி இந்துக்களென ஜனகணித முதலிய ரிக்கார்டுகளில் மதிக்கப்பட்டு வருபவரும், பிராமணர்களெனத் தங்களைக் கருதிக்கொள்பவருமான விஸ்வகர்ம சந்ததியார் என்ற சிற்பிகளை, ஏன் கோவிலுக்குள் பிரவேசிக்க விடுவதில்லை யென்பது மேற் கூறியவற்றினின்றும் தெரிய வரும்.

திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் அடியில் வருமாறு எழுதுகிறார்:—

“ஆரியர்களுடைய மதம் அக்னியை வணங்கும் மதம்; திராவிடர் மதம் விக்கிரக வணக்கமுடைய மதமாகும். ஆதியில் திராவிடர்கள் கோவில்களைக் கட்டவில்லை.

“ஒவ்வொரு புண்ணியஸ்தலத்திலும் ஸ்தல விருட்சமென ஒரு விருட்சமுண்டு. இந்த மரத்தையும் புனிதமானதெனக் கருதி வந்தார்கள். சிதம்பரத்தில் தில்லையும், காஞ்சீபுரத்தில் மாவும், மதுரையில் கடம்பும், திருநெல்வேலியில் மூங்கிலும், குற்றாலத்தில் பலாவும் ஸ்தல விருட்சங்களாக மதிக்கப்பட்டன. கிராமப்பெரிய மனிதர்கள் ஒவ்வொரு ஊரிலும் அங்கங்குள்ள பெரிய, நிழலுள்ள மரத்தடியில் ஊர்க் கூட்டங்கூடுவது வழக்

கம். இந்த இடத்திற்கு 'அம்பலம்' என்று பெயர். இந்த 'அம் பலம்' என்ற பதந்தான் கோவிலையுங் குறிக்கின்றது.

"சிவனை வழிபடுதல் ஆதியில் திராவிடர்களைச் சேர்ந்தது என்பதாக 'வேத இந்தியா, என்ற நூலை இயற்றிய ஆசிரியர் ரகோஸின் அபிப்பிராயப்படுகிறார். ஒரு மரத்து நிழலில் ஒரு கல் லிங்கத்தை ஸ்தாபித்து அதன்வழியாகவே சிவனை வழி பட்டுவந்தார்கள். இதைத்தான் சிவலிங்கமென்று தந்திரீக நூற் களில் கூறப்பட்டிருக்கிறது. இப்பொழுதும், சிவன்கோவில் ஒவ் வொன்றிலும் முக்கிய தேவதையாக இருப்பது சிவலிங்கந்தான். .......இயற்கை லிங்கம்மாதிரி யமைந்துள்ள கற்களை நாட்டி சிவ லிங்கமாகக்கருதி வணங்கிவந்தவைகளை சுயம்புலிங்கமென்று சொல்வார்கள்."

எனவே, ஆண், பெண் தேவதைகளுக்குப் பல்வேறு வகைப் பட்ட விக்கிரகங்களையமைக்கவேண்டிய தேவை வந்தபோதும் சமண பௌத்தமதக்கோவில்களிலிருந்த விக்கிரகங்களை இந்து விக்கிரகங்களாக மாற்றவேண்டி வந்தபோதும், சமணச் சிற்பிக ளான விஸ்வகர்மாக்களுடைய உதவியை நாடவேண்டியதாயிற்று.

"இன்று பொதுமக்கள் கொண்டாடிவரும் ஆலயம், விக்கிர கம், ஆராதனை, உற்சவம், ஊர்வலமாதியவைகளெல்லாம் பௌத்த மதத்திலிருந்து நேராக யாதொரு மாறுதலுமின்றிக் கடன் வாங்கப்பட்டவைகளாகும். மேலும் இன்றையதினம் இந்துக் கோவில்களென மதிக்கப்படும் பெரிய கோவில்களெல்லாம் ஆதி யில் பௌத்தகோவில்களாக இருந்தனவென்பதை யாவருமறிவார் கள்" என 1931-ம் வருட திருவிதாங்கூர் ஜன கணித அறிக்கை (Census Report) யில் குறிப்பிட்டிருக்கிறது.

ஆகையினால்தான், புதிதாக ஒரு இந்துக்கோவில்கட்டி முடிந் ததும், அதைக் கட்டிமுடித்த இந்து விஸ்வகர்மாவைத் தங்கு தடையின்றி வெளியே தள்ளிவிடுகிறார்கள். கும்பாபிஷேகம், பிர திஷ்டைச் சடங்கு முதலியன முடிந்ததும், அந்தக்கோவிற்பணி செய்த விஸ்வகர்மா சந்ததியார் உள்ளே நுழையக்கூடாது. அது முதல் விஸ்வகர்ம வகுப்பினர் தீண்டப்படாதவராய்விடுகின்றனர்.

னர். திருவிதாங்கூர் மட்டிலுமல்லாமல், பிரிட்டிஷ் இந்தியாவிலும் பல விடங்களிலுள்ள பொதுக்கோவில்களில் இவ்வழக்கம் கையாளப்பட்டுவருகிறது.

இன்று தென்னிந்தியாவில் இளைஞர்களிடையே — அதுவும் சாதி இந்து வாலிபர்களிடையே — ஒரு உணர்ச்சி ஊன்றி நாளுக்குநாள் பலப்பட்டுவருகிறது. கோவில்களில் நடக்கும் அநியாயங்களைச் சகிக்கமுடியாது. இந்தக்கோவில்களையும், விக்கிரகங்களையும் பிடுங்கியெறிந்து விடவேண்டுமென அவர்கள் கருதுகிறார்கள். அவர்களுடைய எண்ணம் நிறைவேறுமாவென்பது மற்றொரு விஷயம். ஆனால் சில சைவர்கள் கோவிலை அழிக்கக்கூடாதென்றும், அது திராவிட சிற்பத்திறனை விளக்கும் சின்னமாமாகவும், சிற்பக் கலைக்கு அணியாகவும் விளங்குகின்றதென்றும் எதிர்க்கின்றார்கள்.

திராவிட சிற்பத் திறனுக்கு இந்தக்கோவில்கள் சிறந்த லட்சியமாக விளங்குகின்றன வென்பதை யாரும் மறுக்கவில்லை; இவ்வளவு சிறப்பு வாய்ந்த சிற்பத்திறமையின் பெருமை மேனாட்டு ஆசிரியர் பெர்கூஸன்போன்றஅறிஞர்கள் வந்த பிற்பாடுதான் நமக்குத் தெரியவந்தது. ஆனால் இந்த பண்டிதர்கள் ஒரு விஷயத்தை மட்டும் மறந்து விடுகிறார்கள். அதிசயித்தக்க இந்தக் கோவில்களைக்கட்டிய விஸ்வகர்ம சந்ததியார்களை இவற்றைப் பார்க்கவோ, பார்த்து பயன்பெறவோ விடுவதில்லை. பேர் பெற்ற டாக்கா மஸ்லினை நெய்த நெசவுகாரர்கள் இனிமேல் அத்தகைய மெல்லிய துணியை நெய்யாதிருக்குமாறு, அவர்களுடைய பெரு விரலை இங்கிலீஷ் கம்பனிக்காரர்கள் தறித்து விட்டார்கள் என்று சொல்வதுண்டு. ஆனால் நாம் மேலே சொல்லிவந்த பழக்கம் இதைவிடக் கொடுமையானதாகும். ஏனெனில் தகப்பனுடைய விரலைத் தறித்தாலும் மகன் கையில் விரல் வளரத்தான் செய்யும். ஆனால் பல தலைமுறையாகத் தங்கள் மூதாதையரின் தொழில் திறமையைப் பார்க்க முடியாதபடி இந்த விஸ்வகர்ம சந்ததியார் தடுக்கப்பட்டுவருகின்றனர்; இவர்களுக்கு அந்தசிற்ப சாஸ்திரத்தின் ஞானமே அற்றுப்போய்விடுமல்லவா?

இன்றுங்கூட ஒரு சாதி இந்துவுக்கு, கோவிலைக்கட்டவோ மண்டபத்தை அமைக்கவோ, கோபுரம் எழுப்பவோ, தேர் உண்டுபண்ணவோ, விக்கிரகத்தைச் செதுக்கவோ தெரியாது. ஒருவேளை அவன் இத்தொழில்களுக்கு ஊக்கமளிப்பவனாக இருக்கலாம்; இன்றையதினம் இவற்றைச் செய்யவேண்டுமானால் தொழில் திறமை வாய்ந்த விஸ்வகர்மாவுடைய உதவிவேண்டும். இந்தக்கோவில்களுக்குள் பிரவேசிக்கும் உரிமை அவர்களுக்கு மறுக்கப்படுவதினால், இக்காலத்தில் அரசர்களுடையவும், நாட்டுக்கோட்டை செட்டியார்கள் போன்ற தனவந்தர்களுடையவும் பணவுதவியால் இவர்கள் செய்யும் கோவில் பணிவகைகளெல்லாம் முற்காலப்பணிகளைப்போன்று அவ்வளவு அழகாக இல்லையேயென்று வருத்தப்படக்காரணமில்லை. அவர்களுக்குத்திறமையில்லாமல் போய்விட்டது. அப்படி இல்லாமற் செய்தது யார்? சாதி இந்துக்கள்தாம்.

கம்மாளர் முதலிய விஸ்வகர்ம சந்ததியார்கள் மற்ற காரியங்களில் சாதி இந்துக்களென மதிக்கப்பட்டுவந்தாலும், ஏன் அவர்களுக்கு ஆலயப்பிரவேச உரிமை மறுக்கப்படுகின்றதென்பதைப் பின்னர் ஆராய்வோம். குருவாயூர் கோவில் சம்பந்தமாக, காங்கிரஸ் மேற்பார்வையில் மலையாளத்தைச் சேர்ந்த பொன்னானி தாலூகாவில் ஓட்டெடுக்கப்பட்டபோது, செட்டிகள் சாலியர், கம்மாளர் இவர்களை ஜன கணிதத்தில் சாதி இந்துக்களெனச் சேர்த்திருந்தபோதிலும், இவர்களுக்கு ஆலயப்பிரவேசமில்லையென்று வெளியாயிற்று. அதிலும் கோவிலைக்கட்டவும் விக்கிரகம், துவஜஸ்தம்பம் முதலியவற்றை ஏற்படுத்தவும் உதவி செய்யும் கம்மாளருக்குக்கூட ஆலயப்பிரவேசமில்லையென்று தெரியவந்தது.

கி. பி. 8-வது நூற்றாண்டின் இறுதிவரையிலும், தென்னிந்தியாவில் சமணமதமே மிக உன்னதமான மதமாக இருந்துவந்தது. எனவே, சிற்ப வேலைக்காரர்களும் சமணர்களாகவே இருந்தனர். அந்த மதம் குன்றி, ஞானசம்பந்தரைப்பின்பற்றி சைவர்களும், சைவப் பெரியார்களும், சங்கராச்சாரியரைப்பின்பற்றி ஸ்மார்த்தப் பெரியார்களும் ஆதிக்கம்பெற்றபோது, அக்கால

மன்னர்களின் உதவியால் சமண பௌத்த கோவில்களெல்லாம் இந்துக்கோவில்களாகமாறின. 10, 11-வது நூற்றூண்டுகளில் புதுக்கோவில்களைக்கட்டவும் ஆரம்பித்தார்கள்; அச்சமயம் சமண மதத்தினரான சிற்பிகளின் ஊழியம் தேவைப்பட்டது. எனவே இவர்களும் சமண மதத்தைவிட்டு இந்து மதத்திற் சேர்ந்தார்கள். ஏற்கனவே பிற சமயத்தைவிட்டு இந்து மதத்திற் சேர்ந்திருந்தவர்களும் பழைய இந்துக்களும் தங்களை உயர்ந்தவர்களென மதித்து வலங்கை கொண்டாரெனக் கூறிக்கொண்டார்கள். புதிதாக வந்த சமணர்களை — முக்கியமாக சிற்பிகள்— இடங்கை கொண்டார், அதாவது தாழ்ந்தவர்கள் என்றழைத்தார்கள் இந்து மதத்துக்குப்புத்துயிரளிக்க வந்த பெரியார்கள், நெருக்கடியாகக் கோவிற்பணி செய்யவேண்டிய அவசியத்தை யுத்தேசித்து, புதிதாகச் சமணமதத்திலிருந்து இந்து மதத்திற் சேர்ந்த இந்த சிற்பிகளுக்கு, அக்காலத்தில் தென்னுட்டில் மிக உயர்ந்த வகுப்பினராக மதிக்கப்பட்ட ஸ்மார்த்தப் பிராமணர்களையும் ஆதி சைவ பிராமணரல்லாதாரையும்போல பூணூலையும் அணிந்து கொள்ள அனுமதித்தார்கள். இந்தக்காரணத்தினுல், சமண சிற்பிகள் மத மாற்ற மடைந்ததும், தங்களை பிராமணர்களென்றும் க்ஷத்திரியர்களென்றுஞ் சொல்லிக்கொண்டதோடுகூட ஆரியர்களது பழக்க வழக்கங்களையும் கைக்கொள்ள ஆரம்பித்தார்கள். பழைய வலங்கைகொண்ட வகுப்பினர் இதை ஒப்புக்கொண்டிருக்கமாட்டார்களாதலால், சமண இடங்கைகொண்டவர்களால் கட்டப்பட்ட கோவில்களையும், விக்கிரகங்களையும் வணங்க மறுத்திருப்பார்கள். எனவே, இருவரையும் திருப்திப்படுத்தும் பொருட்டு, இந்த விஸ்வகர்மாக்களுக்கெல்லாம் வலங்கை வகுப்பின் ஸ்தானத்தைக் கொடுத்து, கோவிலுக்குள் வேலை செய்ய விட்டார்கள்; வேலை முடிந்ததும் பழைய வலங்கை வகுப்பினரைத் திருப்திப்படுத்துவதற்காக வெளியே தள்ளிவிட்டார்கள். இதிலிருந்து இந்தப் பழைய வழக்கமானது இன்றும் ஏன் கைக்கொள்ளப்பட்டு வருகின்றதென்பதும் விஸ்வகர்மாக்களுக்கு ஏன் ஆலயப்பிரவேச உரிமை மறுக்கப்படுகின்றதென்பதும் விளங்கும். தற்காலம், இந்து மதத்திலிருந்து முன்னுல் கிறிஸ்தவர்களானவர்களுக்கும், பின்

னுல் கிறிஸ்தவர்களானவர்களுக்கும் சச்சரவு நிகழ்வது போலவே முன்காலத்தில் சமணமதத்திலிருந்து இந்துமதத்தைத் தழுவிய வர்களும் கால வித்தியாசத்தைப் பொறுத்து உயர்வு தாழ்வுப் படுத்திச் சச்சரவிட்டுக்கொண்டார்கள். இதைப்பற்றிப் பின்னுல் விரிவாகக்கூறுவோம்.

## 16–வது அத்தியாயம்.

ஆகமத்தின் ஆரம்பகாலத்தில், தென்னிந்தியாவில் சாதி, சமய, வகுப்பு பேதமில்லாமல் இந்து மதத்திற்கும், சைவமதத் திற்கும் ஆட்களைச் சேகரித்து வந்ததைக் கவனிக்கும்போது இது இக்காலத்தில் வட இந்தியாவில், இந்து மகா சபையார் அதி தீவிரமாக சுத்தி இயக்கம் நடத்தி வருவதைச் சில வழிகளில் ஒத்திருக்கவேண்டுமென்று தெரிகிறது. வைஷ்ணவ மதத்தைப் பொறுத்தமட்டிலும், ஸ்ரீ ராமானுஜர் ஸ்ரீரங்கம் கோவில் கோ புரத்திலிருந்து, யாதொரு வித்தியாசமுமில்லாமல் சகலரையும் வைஷ்ணவ மதத்தில் சேரும்படி அறைகூவியழைத்ததிலிருந்து அக்காலத்து இந்துமதப் பிரசாரகர்களுடைய மனப்பான்மை நன்ருக விளங்குகின்றது. பிறரைத்தங்கள் மதத்தில் சேர்த்துவிட வேண்டுமென்ற அவர்களது ஆசையையும் அதற்காக அவர்கள் கொண்ட எளிய முறையையும் நாம் நன்கு உணர்கிறோம்.

அக்கால அரசர்களது உதவியைக்கொண்டு தமது அறுபத்து மூன்று நாயன்மார்கள் மூலமாக சைவர்கள் பௌத்த மதத்தை யும் சமணமதத்தையும் நாட்டிலிருந்து ஒழிப்பதற்காக இரு மதத்தினரையும் தங்கள் மதத்தில் சேர்த்து வந்தபோது வட இந்தியாவிலிருந்து சங்கராச்சாரியரும் வந்து சேர்ந்தார் ஸ்மா ர்த்த மதமும் தென் இந்தியாவில் தோன்றியது.

காலஞ்சென்ற திரு T.M. நல்லசாமிப்பிள்ளை அவர்கள் சைவ சித்தாந்தத்தைப்பற்றித் தாம் எழுதியுள்ள நூலில் (Studies of Saiva Siddhanta) அடியில் வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்:—

"சங்கராச்சாரியாரின், பரந்த ஞானமும், கூர்மையான புத்தியும்,சைவமதத்தைச்சேர்ந்த அனேகம்பிராமணர்களை அவரைப் பின்பற்றும்படி செய்தன. அவருக்குப் பின் லௌகீகத்திலும் வைதீகத்திலும் விளங்கிய வித்தியாரண்யர் காலத்தில் ஸ்மார்த்தம் அதிக வளர்ச்சியடைந்தது. பௌத்தமதமும் சமணமதமும் நிலை நின்ற காலத்தில், சைவமதம் உயர்வு பெற்றதுமன்றி இவ்விரு மதங்களையும் எதிர்த்து அழிக்கவுஞ்செய்தது. இக்காலத்தில் தான் ஞானசம்பந்தர் முதலிய சைவ மதாச்சாரியர்களும்தோன்றினார்கள். அதற்குப்பின்னுள்ள நூற்றாண்டுகளில் ஸ்ரீசங்கர், ஸ்ரீ ராமானுஜர், ஸ்ரீ மாதவாச்சாரியர் முதலிய ஆச்சாரியர்கள் தோன்றினார்கள்.

மலையாளதேசத்தைச்சேர்ந்தவரும், இன்ன குலமென்றறிய முடியாதவருமான சங்கராச்சாரியரைப்போன்ற ஒரு நம்பூதிரிக்கு, எவ்வளவு புத்தி கூர்மையும் பெரிய அறிவும், வடநாட்டு அனுபவமுமிருந்தபோதிலும், தென்னிந்தியாவில் பொதுமக்களிடையே நேரான ஆதிக்கமெதுவும்பெற முடியுமோமென்பது சந்தேகமே. வட இந்தியாவைப் பொறுத்தமட்டிலும் ஆன்ம தத்துவ சாஸ்திரத்தில் பௌத்த மத தத்துவமே முதன் முதலாகத் தோன்றியதெனச் சொல்லப்படுகிறது; ஸ்ரீ சங்கருடைய மாயா தத்துவம் பௌத்த மத தத்துவத்திலிருந்து எடுக்கப்பட்டதென்றும் ஒப்புக்கொள்ளப்படுகிறது. இது எவ்வாறாக இருந்தபோதிலும் சைவமதப்பிரசாரகரான ஞான சம்பந்தரைத் தன் வசப்படுத்தாவிட்டால் தமது கோட்பாடுகளைப் பின்பற்றுபவர்களைக் காண முடியாதென்ற உண்மையைஅவர் கண்டுகொண்டார். சமணரைக் கழுவேற்றிய ஞானசம்பந்தரைப் புகழ்வதால்மட்டும் ஒன்றும் பலனில்லை; எனவே, எங்கும் மாயா தத்துவத்தைக் கண்ட சங்கரர், தன் காரியசித்திக்காக ஆகமங்களைக் கைக்கொண்டார்.

திரு. P. T. ஸ்ரீனிவாச ஐயங்கார் அவர்கள் அடியில் வருமாறு குறிப்பிடுகின்றார்:—

"வேதாந்தமும், ஆகமும் மெல்ல மெல்ல ஒன்று சேரத் தொடங்கின. புராண காலத்தில் இரண்டும் தனித் தனியாகவே இருந்து வந்தன; ஒன்றாகக் கலக்க வில்லை. சங்கராச்சாரியர் காலத்திலுங்கூட—அதாவது கி. பி. 8-வது நூற்றாண்டில்—அவை ஒன்றாகக் கலக்கவில்லை. சங்கராச்சாரியார் வேதாந்த சூத்திரங்களை வியாக்கியானஞ் செய்யும்போது, 'பசு பதம், பங்கரதம்' என்ற கொள்கைகளை மத விரோதமானவை யென்பதாகக் கண்டிக்கிறார். எனினும், அவரது 'பிர பஞ்ச இருதயம்' என்ற நூலானது ஒரு தனிப்பட்ட ஆகம நூலாகும்; அவரை ஷண் மதஸ்தாபனுச்சாரியார் (ஆறு மத ஸ்தாபகர்) என்றும் அழைப்பதுண்டு. ஏனெனில், விஷ்ணு, சிவன், சக்தி, கணபதி, சுப்பிரமணியம், சூரியன் ஆகிய கடவுளாதிகளின் வழிபாட்டு முறையை அவர் ஒழுங்குபடுத்தினதாகவும் அந்த முறையைத் தாம் ஸ்தாபித்த மத சம்பந்தமான கிரியைகளில் நடைமுறைக்குக் கொண்டு வந்ததாகவும் கர்ண பரம்பரையாகச் சொல்லப்படுகிறது."

உலகத்தை மாயையாகக் கண்ட சங்கராச்சாரியாரும், தமக்குப் பெருமையும், அந்தஸ்தும், ஆதிக்கமும், பின்பற்றுவோருமிருக்கவேண்டுமென்று விரும்பியேயிருப்பார். இவர் காலத்தில் இவ்விருப்பம் அவ்வளவு நிறைவேறாவிட்டாலும் அவருக்குப் பின் வந்த ஆச்சாரியார் இந்த விருப்பத்தை முற்றும் நிறைவேற்றி விட்டார். இவ் விஷயத்தைப்பற்றி நாம் கவனிக்கவில்லை. சங்கராச்சாரியாரை ஆதியில் பின்பற்றினவர் யாரென்பதைக் கவனிப்போம்.

ஆதி சைவர்கள்—அல்லது ஆகமத்தைப் பின்பற்றிய சைவர்கள் அக் காலத்தில் ஆதிக்கம் பெற்றிருந்தார்கள். அவர்களிற் பெரும்பாலோர் சைவக் கோவில்களில் பூசாரிகளாகவுமிருந்தார்கள். ஆகம விதிப்படியுள்ள கிரியைகளை நடத்துவதற்குச் சிறிது வடமொழியும் தெரிந்திருக்கவேண்டும்; எனவே இந்தப் பூசாரி

கள் சிறிது வடமொழிப் பயிற்சியும் பெற்றிருந்தனர். இதன் மூலம் அவர்கள் சங்கராச்சாரியாரின் போதனைகளைப் பின்பற்றி யிருக்கவேண்டும்; இதற்குப் பதிலாக சங்கராச்சாரியாரும் ஆகமங்களைக் கைக்கொண்டார். இவ்வாருகத் தென்னிந்தியாவில் ஸ்மார்த்த சமயம் தோன்றிற்று.

கோவில் பூசாரிகளின் உற்பத்தியைப் பற்றி நாம் ஏற்கனவே கூறியிருக்கின்ேரும். இந்தக் கோவில் பூசாரி ஒரு சண்டாளனுக வில்லாமற் போனுலும், அவன் இன்ன சாதியைச் சேர்ந்தவனென்று வரையறுக்கவுமில்லை; அவன் ஒரு சாதியையுஞ் சேர்ந்தவனல்ல. ஆகம விதிப்படி அவன் சாதியற்றவனுகவே யிருந்திருக்கவேண்டும். எனவே, இத்தகைய கோவில் பூசாரி தான் இயற்கையாகவே சங்கராச்சாரியாருடைய ஸ்மார்த்த பிராமணனுகி விடுகிருன்.

இன்று, ஆகமத்தைப் பின்பற்றி தென்னிந்தியக் கோவில்களில் கர்ப்பக் கிரகத்துக்குள்ளேயுங்கூட ஒரு ஸ்மார்த்த பிராமணனை நாம் எவ்வாறு காண்கின்ேரும் என்பதை மேலே கூறியவற்றிலிருந்து அறிந்துகொள்ளலாம். இலங்கை இராவணனது சகோதரன் விபீஷணனை ஒரு வேளை ஆரியனென்று சொன்னுலும், தென்னிந்தியப் பார்ப்பானை ஒரு விதத்திலும் ஆரியனென்று சொல்ல முடியாது. இந்தக் காரணந்தான் காலஞ்சென்ற ஜஸ்டிஸ் சதாசிவ ஐயரவர்களை ஒரு ஆலய வழக்கில் இவ்வாறு கூறும்படி தூண்டிற்ற:—

"குறிப்பிடப்பட்ட விஷயங்களைப் பற்றி நான் ஆராய்ச்சி செய்த மட்டிலும், எனது முடிவு என்னவென்ருல், சாதாரணமாக நினைக்கப்படுவது போல் பிராமண இந்துக்கள் அவ்வளவு தூரம் ஆரிய ரத்தமுடையவர்களுமல்ல; பார்ப்பனரல்லாத இந்துக்கள் அவ்வளவு தூரம் ஆரிய ரத்தமில்லாதவர்களுமல்ல வென்பதே. மேலும், 'திராவிடன்' 'ஆரியனுக்கு' முரண்பட்டவனென்பதையும் நான் திருப்தியுடன் ஏற்றுக்கொள்ளமுடியாது. ஆகையினுல், பார்ப்பனரல்லாதான் திராவிடன் என்ற மட்டிலும் ஆரியனல்லாதவன் என்று என் மனதிற்குப்படவில்லை.

தென் இந்தியாவைப் பொறுத்தமட்டிலாவது, 'திராவிடன்' என்பதற்கு 'அனரியன்' என்று பொருள்கொள்ள முடியாதென்பது நிச்சயம்."

இந்தக் காரணத்தைக் கொண்டுதான், ஜஸ்டிஸ் முத்துசுவாமி ஐயரவர்கள் கொண்டதுபோல, தென்னிந்தியக் கோவிலில் ஒரு பிராமணனுக்குக் கர்ப்பக் கிரகம் வரைப் போக உரிமையுண்டு போலும்!

இம்மாதிரியாக ஸ்மார்த்த மதத்துக்கும், சைவ மதத்துக்கும் சச்சரவு ஏற்பட்டது; அச் சச்சரவு இன்று வரைத் தொடர்ந்து வருகிறது. கோவிலுக்குள்ளும், வெளியிலும் இருக்கும் ஸ்மார்த்தர்களை ஆட்டுத்தோல் போர்த்த ஓநாயெனச் சைவர்கள் கருதுகின்றனர்.

தாகூர் சட்ட விரிவுரையாளர் திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் அடியில் வருமாறு கூறுகிறார்:—

"ஸ்மார்த்தர்கள் கர்ப்பக் கிரகத்துக்குள் பிரவேசிக்கவும், அர்ச்சனை முதலிய செய்யவும் கூடாதென ஆகமங்கள் வெளிப்படையாகத் தடுக்கின்றன; அவ்வாறு செய்தால் அரசனுக்கும், பிரஜைகளுக்கும் துன்பம் நேரிடுமென அவை கூறுகின்றன."— ஆனால், "கடவுள் லட்சணத்திலோ, வழிபாட்டு முறையிலோ, சுருதிகளிலோ, தீட்சை பெறும் வழியிலோ, தத்துவங்களிலோ, சமுதாய லட்சியங்களிலோ, இவை எதிலும் ஸ்மார்த்த மதத்தையும் சைவ மதத்தையும் போன்ற அவ்வளவு வேறுபாடுடைய மதங்கள் வேறில்லை." எனினும் "ஸ்மார்த்தர்கள் ஒவ்வொரு கோவிலையும் தங்களது கோவில் என்று எளிதாகச் சொல்லிக் கொள்ளமுடியும்." இந்த ஸ்மார்த்த பிராமணர்கள் ஒற்றுமையும், கூர்மையான புத்திபுமுடைய ஒரு வகுப்பாரானபடியால், தங்களது ஆதிக்கத்தை. இந்தக் கோவில்களில் நிலை நிறுத்தவும், அவற்றை ஸ்மிருதிகளின்படி ஏற்படுத்தப்பட்ட ஸ்தாபனங்களாக மாற்றவும் அவர்களுக்கு நன்கு தெரியும்."

இப்பொழுது நடைபெற்று வரும் ஸ்மார்த்த—சைவப் போராட்டத்தில் இரு சாராரும் ஆகமங்களை அடியோடு மறந்து

விட்டார்கள்; தங்களுக்குக் கிறிஸ்தவர்களது தயவினால் கிட்டிய இந்தக் கோவில்களைப் பற்றிய ஆகமங்களின் உட்பொருளையும் அவர்கள் மறந்துவிட்டார்கள்.

"தீண்டாமையை ஒழிப்பதற்குச் சிறந்தவழி சைவமதத்தைப் பரப்புவதாகும். தாழ்த்தப்பட்டவர்களுடைய ஒழுக்கமானது உயர் நிலையடையும்போது, இயற்கையாகவே யாதொரு தடையுமின்றி அவர்களுக்கு ஆலயப்பிரவேச உரிமை கிடைக்கும். அத்தகைய காலம் வருமட்டிலும், தாழ்த்தப்பட்டவர்களுடைய உபயோகத்துக்காகத் தனிக் கோவில்கள் கட்டுவதற்கான ஏற்பாடுகளைச் செய்யவேண்டும்" என ஒரு சைவப் பெரியார் அறிவித்திருக்கின்றார். இந்த அபிப்பிராயத்தை வேறு பலரும் கைக்கொண்டிருக்கிறார்கள்.

தற்பொழுதுள்ள பொதுக் கோயில்களெல்லாம் பொதுமக்களுக்காக வல்லாமல், உயர் சாதி இந்துக்களுக்காகமட்டும் ஏற்படுத்தப்பட்டன போலும்! இவ்வாறு கூறுவது ஆகமங்களை முற்றும் மறந்து பேசுவதாகும். இந்தத் தனிக் கோயில்களை யார் கட்டுவது என்ற கேள்வியும் எழுகின்றது.

எனவே, இன்றைய தினம் சைவரும் ஸ்மார்த்தரும் சண்டையிட்டுக் கொள்வது இந்தக் கோயில் வருமானங்கள் மீது தங்கள் ஆதிக்கத்தை நிலை நிறுத்தவும், அதிகாரம், அந்தஸ்து செல்வாக்கு முதலிய லௌகிக காரியங்களைப் பெறவுமே யன்றி வேறல்ல. கோயில் வருமானங்கள் எக்காலத்தும் பிறர் கவனத்தைக் கவர்ந்து வருகின்றன.

சுவாதீனம் என்பது சட்டத்தில் மிக முக்கியமான காரியமாகும். சாதி இந்துக்கள் எவ்வாறு இந்தக் கோயில்களைத் தம் வசப்படுத்தினார்கள்? இந்தக் கோவில்களின் வருமானங்களை யெடுக்க அவர்கள் ஏன் அனுமதிக்கப்பட்டிருக்கிறார்கள்? ஸர்க்கார் ஆதிக்கத்திற்குட்பட்ட போர்டு, கண் காணிக்கும் கமிட்டிகள், அல்லது டிரஸ்டிகள் மூலம் தங்களிஷ்டம் போல் இவற்றை நிர்வகிக்க ஏன் விடப்பட்டிருக்கிறது? இவற்றை யெல்லாம்

இவர்கள் சிறிதாவது ஆலோசனை செய்து பார்த்தால், இவர்கள் நல்ல இந்துக்களாகவாவது இருந்திருப்பார்கள்; சகல இந்துக்களுடைய ஆலயப் பிரவேசப் பிரச்னையும் பல வருஷங்களுக்கு முன்னதாகவே தீர்ந்திருக்கும்.

## 17-வது அத்தியாயம்.

இன்றையதினம் ஏற்பட்டிருக்கும் இந்துமத தர்ம பரிபாலன சபையும், பரம்பரை பாத்தியமாகவும் மற்றுமுள்ள தேவஸ்தானக் கமிட்டிகளும், தர்மகர்த்தாக்களும், புராட்டஸ்டாண்டு கிறிஸ்தவப் பாதிரிமார்களது தயவினால் ஏற்பட்டவைகளாகும். சைவ அல்லது வைஷ்ணவ சாதி இந்துக்கள் கர்வத்துடன் நடந்து கொள்வதெல்லாம் உண்மையை அறியாமல் கண்மூடித்தனமாக இருப்பதினாலேதான்.

இந்துக் கோவில்களும், அவற்றின் ஆதாயங்களும் சாதி இந்துக்கள் கையிலிருப்பதற்குக் காரணம், கிறிஸ்தவப் பாதிரி அவ்வாறு இருக்கவேண்டுமென்று நினைத்ததுதான். மற்ற இந்து சகோதரர்களைக் கோவிலுக்குள் நுழையக் கூடாதென்பதாக சாதி இந்துக்கள் இப்பொழுது தடை செய்வதெல்லாம் கிறிஸ்தவப் பிரசாரகர்கள் கருதியபடியே யாகும். அன்று எதிர்பார்த்ததுதான் இன்று நடைபெற்று வருகிறது.

சுமார் ஒரு நூற்றாண்டுக்கு முன், இந்த இந்துத் தெய்வங்களும், கோவில்களும், கோவில் சொத்துக்களும், அவற்றின் ஆதாயங்களும் எல்லாம் கவுரவ கிழக் கிந்தியக் கம்பெனியார் கைவசமும், அவர்களுக்கு முன்னால் மகமதிய அரசாங்கத்தார் கைவசமு மிருந்தன.

திருமலை திருப்பதி தேவஸ்தான வழக்கில் சென்னை ஹைக் கோர்ட்டார் அடியில் வருமாறு குறிப்பிட்டுள்ளார்கள்:—

"1843-ம் ஆண்டு வரையிலும்—பிரதிவாதிக்கு முந்தின வரை இந்தக் கோவில்களின் (திருப்பதியில்) தர்மகர்த்தாவாக நியமிப்பது வரையிலும் — கோயில் வருமானத்தில் செலவு போக மிஞ்சியவற்றை யெல்லாம் அரசாங்கத்தாரே கைப்பற்றிக் கொண்டனர். இந்த வழக்கமானது தங்களுக்கு முந்திய முகமதிய இந்து அரசாங்கங்களிலிருந்து பிரிட்டிஷ் அரசாங்கத்தார் கைக் கொண்ட உரிமையாகும். இது நெடுங்காலந் தொட்டே வழக்கத்திலிருந்து வருகிறது. இவ்வாறு கைப்பற்றப்பட்ட தொகையானது சென்ற நூற்றாண்டின் ஆரம்பத்தில் வருஷந்தோறும் கிட்டத்தட்ட 2 லட்ச ரூபாயாக இருந்து வந்தது.

"இதனாலேயே, 1843-ம் ஆண்டு வரையிலும், கலெக்டர் வழியாகவும், தாசில்தார் மூலமாகவும் ஸர்க்கார் இந்தக் கோவில் விஷயங்களை மிக நுணுக்கமாகக் கண்காணித்து வந்திருப்பதாகத் தஸ்தவேஜிகளில் காண்கின்றோம். இந்தக் கோவிலை ஒரு ஸர்க்கார் இலாகா போலவே கருதி, அனாவசியச் செலவுகளைக் குறைத்தும், வருமானத்தை அதிகரித்தும், களவு போகிறதற் கிடமில்லாமலும், வேண்டிய நடபடிக்கைகளைச் செய்து வந்திருக்கிறார்கள்."

எனவே, அந்தக் காலத்தில், ஆலயப் பிரவேசத்துக்கு யாதொரு தடையுமிருந்திராதென்பது வெளிப்படை. ஏனென்றால், ஐரோப்பியர்கள் கோவிலுக்குள் எப் பாகத்துக்கும் செல்லலாம்; அல்லது, சுகாதாரத்துக்குப் பங்கம் விளைக்காதென்று யாரும் கருதுகிற எல்லைவரைக்காவது அவர்கள் போகலாம்.

இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியேற்பட்ட பின், இந்துச் சட்டம் தனது 'விரிந்து சுருங்கும் தன்மையை இழந்துவிட்டதென' மைசூர் இந்துச் சட்டச் சீர்திருத்தக் கமிட்டியார் முடிவு கட்டியிருக்கிறார்கள். "இந்து" என்ற பதம் யாரை யாவது அல்லது எந்த சமூகத்தையாவது தனிப்படக் குறிப்பிடுகின்றதா ?அல்

லது இந்த இந்துக்கள் ஒரே மாதிரியான திட்டப்படி சட்டத்தை அமைத்திருக்கின்றார்கள் என்று குறிப்பிட முடியுமா? அல்லது அதை ஒரு பெருங் கூட்டமான மக்களாவது பின்பற்றி வந்தார்களா? யாராவது அதை அமுலில் கொண்டுவர முயற்சித்தார்களா? அது முன்னர் 'விரிந்து சுருங்குந்தன்மை உடையதாக, இருந்ததா? முன்னர் அது எவ்வாறிருந்தபோதிலும், இப்பொழுது 'விரியுந்தன்மையை இழந்து விட்டது' என்பது உண்மைதான். ஆனால், இதற்கும் பிரிட்டிஷாருக்கும் சம்பந்த மெதுவுமில்லை. நாமே நமக்குக் குழி தோண்டி அதற்குள் புகுந்து, அது மிகவும் சௌகரியமாக இருப்பதாக உணர்ந்தோம்; இப்பொழுதும் அவ்வாறே உணர்கிறோம். சாயுச்சிய பதவியை அடைந்து விட்டோம்!

ஆலயப்பிரவேசப் பிரச்னையைப் பொறுத்தமட்டில் 'இந்து' என்ற பதத்திலிருந்தே இந்த சச்சரவுகளெல்லாம் ஏற்பட்டனவென்பதை அடுத்துவரும் அத்தியாயங்களிலிருந்து அறிந்து கொள்ளலாம்.

'இந்துக்கள்' என்று தங்களை அழைத்துக் கொள்வோர் 'இந்துக்கள்' என்று அழைக்கப்படுகிறவர்கள்—இவர்கள் அனைவருக்கும் ஆலயப்பிரவேச உரிமை வேண்டுமென்று கேட்கப்படுகிறது.

இதில் கஷ்டம் ஏற்பட்ட விதம் எவ்வாறு என்பதை ஆராய்வோம்:—

(1) கிழக்கிந்திய கம்பெனியார்க்குட்பட்ட ரெவனியூ போர்டுகளின் கீழ் (வங்காளத்தில் 1810-லும், சென்னையில் 1817-லும்) ஸ்தல ஏஜண்டுகளே (சாதாரணமாகக் கலக்டர்கள்) 'இந்துக் கோயில்களுக்காக விடப்பட்ட நிலங்களிலிருந்து கிடைக்கும் வருமானங்களைச்செலவு செய்து வந்தார்கள்'

இந்த இடத்தில் 'இந்து' என்பது யாரென்று விவரிக்கவேயில்லை.

(2) 'கண்காணிப்பது, யுக்தம்போல் செலவிடுவது, பழுது பார்ப்பது, பாதுகாப்பது, தர்மகர்த்தாக்களை அல்லது மானேஜர்களை நியமிப்பது' ஆகிய வேலைகளையெல்லாம் கிழக்கிந்தியக் கம்பெனியாரும், இந்திய சர்க்காரும் 1863-ம் ஆண்டில் கமிட்டிகளிடம் ஒப்புவித்தார்கள்.

இங்குங்கூட—அதாவது 1863-ம் வருடத்து 20-வது சட்டத்திலுங்கூட— 'இந்து' என்ற பதம் யாரைக்குறிப்பிடுகின்றது என்பதாகச் சொல்லவில்லை. ஆனால் அதேசமயத்தில் மகமதியப் பள்ளிகளையும் மகமதியர்கள் வசம் ஸர்க்கார் ஒப்புவித்த போதிலும், மகமதிய வழக்கறிஞர்கள் மிகவும் புத்திசாலித்தனமாக நடந்துகொண்டார்கள். ஏனெனில், மகமதியராக யாரெல்லாம் சொல்லிக்கொள்கின்றார்களோ அவர்களெல்லாம் மகமதியர் என அவர்கள் ஒப்புக்கொள்கிறார்கள். எனினும், மேற்குறித்த சட்டத்தில் ஒரு இடத்தில் இதைப்பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. ஒரு கமிட்டி மெம்பரின் யோக்யதாம்சத்தைப்பற்றிக் குறிப்பிடும்போது, அவன், எந்த மதத்துக்காகக் கோவில் பள்ளி அல்லது ஸ்தாபனம் ஏற்படுத்தப்பட்டதோ அந்த மதத்தைச் சேர்ந்தவனாக இருக்கவேண்டுமென்பது மட்டும் குறிக்கப்பட்டிருக்கிறது.

(3) இப்பொழுதேற்பட்டுள்ள சென்னை, இந்து மத தர்ம பரிபாலன சட்டங்களிலும் 'இந்து' என்றபதம் யாரைக்குறிப்பிடுகின்றதென வரையறுக்கவுமில்லை.

'இந்து' வென்றால் யார்? இந்துச்சட்டத்தைப் பின்பற்றுகிறவர்களெல்லாம் இந்துக்கள் என்று சிலர் சொல்லுகிறார்கள்; இந்து மதத்தை யார் யார் கைக்கொள்ளுகிறார்களோ அவர்களெல்லாம் இந்துக்கள் என்று வேறு சிலர் சொல்லுகிறார்கள்.

எனவே, அடுத்தபடியாக, இந்துச்சட்டம் என்றால் என்ன? இந்து மதம் என்றால் என்ன? என்ற கேள்விகள் எழுகின்றன.

இக்கோவில்களைப்பற்றி நிகழ்ந்த மிக நுணுக்கமான தர்க்க வாதத்திலிருந்து ஏற்படுகிறதென்ன வென்றால், இந்துக்களென அழைக்கப்படுகிறவர்களும், இந்து மதம் என்றால் சாதாரணமாக

என்ன கருதப்படுகிறதோ அதைப் பின்பற்றுபவர்களும், இந்துச்சட்ட நிபுணர்களின் சாமர்த்தியத்தால் கோவிலுக்கு வெளியே தள்ளப்பட்டிருக்கிறார்களென்பதேயாகும். இதைப்பற்றி இனிமேல் ஆராய்வோம்.

## 18–வது அத்தியாயம்.

பிரிட்டிஷ் ஸர்க்கார் 1863-ல் இந்துக் கோவில்களின் பரிபாலனத்தை இந்துக்களிடம் ஒப்புவித்தார்களே, அந்த இந்துக்கள் யார்? அவர்கள் பார்ப்பனரா? அல்லது பிராமண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரரென்ற ஆரிய வகுப்பினரா? அல்லது திராவிடரா? அல்லது அனாரியரா? அல்லது தென்னிந்தியாவில் தங்களை 'இந்துக்க'ளென்று அழைத்துக் கொள்பவரும், அரசாங்கத்தாரால் 'இந்துக்க'ளென அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றவர்களுமான திராவிட—ஆரிய சமூகங்களைச் சேர்ந்தவர்களா?

வங்காள சட்ட நிபுணரான திரு. ஜே. ஸி. கோஷ் அவர்கள் தமது நூலில் அடியில் வருமாறு குறிப்பிடுகிறார்:—

"1863-ம் ஆண்டு 20-வது சட்டமானது இந்து, மகமதிய மதஸ்தாபனங்களைப் பற்றியதாகும். ஆனால் 'இந்து' வென்பது விவரிப்பதற்குக் கஷ்டமான ஒரு பதமாகும். வாரிஸ் பாத்தியதை, சொத்துப்பிரிவினை இவற்றைப்பற்றிய இந்துச் சட்டம் சீக்கியர், சமணர், பௌத்தர், பிரம்மசமாஜிகள், மெமான் மகமதியர், கச்சி, சந்தால் முதலிய பூர்வ ஜாதியினர் முதலியவர்களுக்கும் வழங்கப்பட்டுவருகிறது. ஆயினும் இந்துச் சட்டமானது பூரணமாக மேற்குறித்த வகுப்பினர் ஒருவருக்கேனும் செல்லத்தக்கதல்ல. ஸ்மிருதிகளின்படியுள்ள இந்து கல்யாணச் சட்டத்தை நாயர்கள், சமணர்கள், சீக்கியர், பிரமசமாஜிகள், பூர்வசாதியினர் ஆகியவர்களுக்கு வழங்கமுடியாது; மேலும் இந்துக்களில், பிரா

மணைக்கொண்டு கல்யாணச் சடங்குகளை நடத்தமுடியாதவர்களும், விவாகரத்து, புனர்விவாகம் இவற்றைத் தாராளமாகப் பெண்களுக்கு அநுமதிக்கக் கூடியவர்களுமான கீழ்சாதியாரில் பெரும்பாலாருக்கும் இந்தச் சட்டத்தை வழங்கமுடியாது. மனு சொல்லுகிறபடி இந்த வாரிசுச் சட்டம், இந்து விவாகச் சட்டத்தைப் பின்பற்றியதேயாகும். அங்ஙனமிருக்க, ஸ்மிருதிகளின்படியுள்ள கல்யாணச் சட்டங்களுக்கு விரோதமான விதிகளையுடையவர்களுக்கு இந்த வாரிசுரிமைச் சட்டத்தை எவ்வாறு வழங்கலாம் என்பது விளங்கவில்லை. அது எவ்வாறாயினும், மகமதியர், கிறிஸ்தவர் நீங்கலாகவுள்ள இந்தியர் அனைவருக்கும் இந்துச் சட்டம் வழங்கப்பட்டு வருகிறது. ஆனால், இவ்வகுப்பார்களின் மதஸ்தாபனங்களை இந்து மதஸ்தாபனங்கள் என்ற பிரிவின்கீழ் கொண்டுவருவது கஷ்டமான காரியமாகும். நாயர்களைப் பொறுத்தமட்டிலும், அவர்கள் இந்துப் பழக்கவழக்கத்துக்கு மாறுபட்ட கல்யாணச் சடங்குகளையும், வாரிசுரிமைச் சட்டங்களையும் கொண்டிருந்த போதிலும், அவர்கள் இந்து தெய்வங்களையே வழிபடுகிறார்கள். ஆகையினால், மற்ற விஷயங்களில் அவர்களுக்கு வேண்டிய சட்டமானது இந்துச் சட்டத்தினின்றும் வேறுபட்டிருந்த போதிலும், மதஸ்தாபனங்களைப் பொறுத்தவரையில் இந்துச் சட்டமானது அவர்களுக்கும் பொருத்தமுடையதுதான்; அவ்வாறே ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. 1817-ம் ஆண்டு 7-வது ரெகுலேஷன்படி ரெவனியூ போர்டுகளுடைய ஆதிக்கத்தின் கீழ் மலையாளத்திலுள்ள பல நாயர் கோவில்கள் கொண்டுவரப்பட்டிருக்கின்றன. சில சிக்கியர்களும் இந்துக் கடவுள்களை வணங்குகிறார்கள். ஆனால், அவர்களில் முக்கியமானவர்கள் விக்கிரக ஆராதனையைப் பூராவாக விட்டுவிட்டபடியால், இந்துமத தர்ம பரிபாலனச் சட்டம் அவர்களையுங் கட்டுப்படுத்துமெனக் கருதமுடியாது. எனினும், 1863-ம் ஆண்டு 20-வது சட்டம் சிக்கிய மதஸ்தாபனங்களையும் கட்டுப்படுத்துமெனக் கொள்ளப்பட்டிருக்கிறது. சமணர்களும் இந்துமதத் தெய்வங்களை வணங்குவதில்லை; எனினும், இந்தச் சட்டமானது சமண மதஸ்தாபனங்களையும் கட்-

டுப்படுத்துமென்று கொள்ளப்படுகிறது. இதே மாதிரிதான் பௌத்த கோவில்களும், பிரம்மசமாஜ தர்ம ஸ்தாபனங்களும், இச் சட்டத்தின் அதிகாரத்துக்குள் கொண்டுவரப்பட்டிருக்கின்றன. எனவே, இந்துக்கடவுள்களை வணங்குகிற, தாழ்ந்தசாதி இந்துக்களையும், ஆதிகாலந்தொட்டே இந்தியாவிலிருந்து வருகிற பூர்வ குடியினரையும் இந்தச் சட்டத்தைப் பொறுத்த மட்டில் இந்துக்களாகவே கருதவேண்டும்." (அதாவது 1863-ம் வருஷத்து 20-வது சட்டம்).

அவ்வாறு அவர்களை இந்துக்களாகக் கருதாததே துன்பத்துக்கிடமாயிற்று. ஏன் அவ்வாறு கருதப்படவில்லையென்பதே கேள்வி.

'மகமதியர், கிறிஸ்தவரல்லாத சகல இந்தியருக்கும் இந்தச் சட்டம் வழங்கப்பட்டு வருகிறது' என்று வங்காளச் சட்ட நிபுணரான ஜே. ஸி. கோஷ் அபிப்பிராயப்படுகிறார்.

மத சம்பந்தமாக 'இந்து' என்பது யார் என்ற கேள்வியைப்பொறுத்து, ஸர் எஸ். ராதாகிருஷ்ணன் அவர்களுடைய கருத்து ருசிகரமானதாகும்:—

"பூர்வ குடிகளும், காட்டுமிராண்டிகளும், அரைகுறையான நாகரீகமடைந்த வகுப்பினரும், கல்விகற்ற திராவிடர்களும்,வேத ஆரியர்களும் ஒரே தாய்மக்களாதலால் இந்துக்கள் தாம்........... இந்துமதம் சமயப்பித்தையும் குறுகிய மனப் பான்மையையும் உண்டுபண்ணவில்லை; ஆனால் எதற்கும் இடங்கொடுக்கக்கூடிய பரந்த தர்மசிந்தனையுள்ள மனப்பான்மையை உண்டுபண்ணிற்று. பெரும்பாலும் ஆரிய ஐதிகத்துக்குப் புறம்பான பூர்வ தேவதைகள் ஒன்றுக்குப் பத்தாகப் பெருகுவதை அது ஒப்புக்கொண்டதோடு, அவ்வாறு ஏற்பட்டது சரியென்றும் அங்கீகரித்தது. கடவுள் நம்பிக்கையுடையவர்கள் அனைவரையும் ஒன்றாகச் சேர்த்தது. பல்வேறுபட்ட கொள்கைகளையுடையவர்கள் இன்று இந்து மதத்திலிருக்கின்றார்கள்......அனேக மதஸ்தரும், சாதியாரும் மிருகங்களைத் தெய்வமாகக் கொண்டிருந்தார்கள். இவர்கள் இந்து சமூகத்தைச் சேர்ந்தபோது, அவர்களுடைய மிருக தேவதைகள்

இந்துக் கடவுள்களுக்கு வாகனங்களாகவும், துணைவர்களாகவும் அமைக்கப்பட்டன. ஒரு கடவுளுக்கு மயில் வாகனம்; மற்றொருவர் அன்னத்தின் மீதேறுகிறார். ஒரு கடவுள் எருமையையும், மற்றொரு கடவுள் ஆட்டையும் வாகனமாகக் கொண்டிருக்கின்றனர். ......மிக உயரிய நாகரீக மெய்தியுள்ள திராவிடர்களோடு சேர்ந்ததினால், வேத மதம் ஆஸ்திக மதமாக மாறியது. திராவிடர்களுக்குச் சிறப்பான விக்கிரக வணக்கத்தை ஆரியர்களும் கைக்கொண்டார்கள். பல வடிவங்களையுமுடைய காளி தேவதை அனாரிய, திராவிடத் தேவதை யென்பது வெளிப்படை...... ஆஸ்திகரும், நாஸ்திகரும், கடவுள் நம்பிக்கையுடையவர்களும், நிரீச்சுவர வாதிகளும், சகலபேரும் இந்துக்களாகவே இருக்கலாம்; அவர்கள் இந்துமத சம்பிரதாயங்களை ஒப்புக்கொண்டாற்போதும். இந்து மதத்தை ஒரு தனிக் கருத்தை அடிப்படையாகக் கொண்டது என்று சொல்வதைவிட மனிதருடைய வாழ்க்கைமுறையைப் பற்றியது என்று சொல்வதே மிகப்பொருத்தமாக இருக்கும்”

ஆகையினால், இந்து யார் என்று விவரிப்பதில், திரு. ஜே. ஸி. கோஷ் சொல்வதுபோல அவ்வளவு கஷ்டமில்லை. பல வருஷங்களுக்கு முன் கிறிஸ்தவர்களுக்காக இந்திய சட்டசபை ஒரு வார்சுரிமைச் சட்டத்தை மிக எளிதாக ஏற்படுத்தி, அதற்கு ‘இந்தியர் வார்சுரிமைச் சட்டம்’ என்று பெயருமிட்டு, இந்து, மகமதியர், சமணர், பௌத்தர், பார்சி முதலியோர் அல்லாத ஒவ்வொரு இந்தியனுக்கும் இது செல்லத்தக்கது என்றும் வரையறுத்தது. பிரிட்டிஷ்இந்தியாவில் கிறிஸ்தவர்கள்தொகைமொத்த ஜனத்தொகையில் நூற்றுக்கு மூன்று வீதந்தான். இம்மாதிரிச் சட்டமியற்றினது மிகவும் வேடிக்கையான முறையாகும். ஆதிகாலந்தொட்டே இந்தியாவில் நிலைபெற்று வரும் மதம் இந்து மதந்தான். இன்றுகூட, பிரிட்டிஷ் இந்தியாவில் மொத்த ஜனத்தொகையில் மூன்றிலிருபாகத்தினர் இந்துக்களாகவே இருக்கின்றார்கள். வட்டமேஜை மகாநாட்டில் டாக்டர் மூஞ்சே சொன்னதுபோல, இந்தியர் ஒவ்வொருவரும் இந்துவேயென்று சொன்னால் அதில் ஆச்சரியப்படத்தக்க தொன்றுமில்லை. இருந்தாலும், தென் இந்தியாவில் மாண்டு போர்டு சீர்திருத்தங்களின்படி

தேர்தல் தொகுதிகளை வகுக்கப் புகுந்த சென்னை அரசாங்கத்தார், 'இந்து' த் தொகுதியென்று சொல்ல சங்கடப்பட்டு, 'முகமதியரல்லாதார் தொகுதி' யெனப் பெயரிட்டிருக்கிறார்கள்! எல்லாவற்றிலும் மேலாக, 1927-ம் வருஷம் நிறைவேறிய சென்னை இந்துமத தர்ம பரிபாலனச் சட்டத்திலுங்கூட எச்சரிக்கையுடனும் முன் யோசனையுடனும் 'இந்து' என்றால் யாரென்பதைத் தெளிவு படுத்தாமல் விடப்பட்டிருக்கிறது. இந்தக் குறையிலிருந்துதான் இவ்வளவு சச்சரவுகளும் கிளம்பிவிட்டன. ஆனால், 'இந்து' என்ற பதத்தை எளிதாக விவரித்து விடலாம். முகமதியர், கிறிஸ்தவர், பார்ஸிகளும், இந்தியாவுக்கு அன்னியமான மதத்தைச் சேர்ந்தவர்களும் நீங்கலாக ஏனைய இந்தியர் ஒவ்வொருவரும் இந்துதான்.

எனவே, சட்டப்படியும், நியாயத்தின் படியும், பிரிட்டிஷ் ஸர்க்கார் தங்கள் தஸ்தவேஜிகள் மூலமாக யாரையெல்லாம் இந்துக்களாக அங்கீகரித்திருக்கிறார்களோ, அவர்களிடமெல்லாம் 1863-ல் இந்துமதஸ்தாபனங்களை ஒப்புவித்ததாகக் கொள்ளப்பட வேண்டும். நீதி நியாயக் கோர்ட்டுகளும், ஸர்க்காரின் இத்தகைய குறிப்பான அல்லது வெளிப்படையான உறுதி மொழியினின்றும் பிறழுவதில்லையென்று வெளிப்படுத்தியிருக்கின்றன. சட்டப்படி கவர்ண்மென்றாருடைய கருத்துக்கு விபரீதமாகப் போகக் கோர்ட்டுகளுக்கு அதிகாரமுமில்லை.

"பல நூற்றாண்டுகளுக்கு முன் ஏற்படுத்தப்பட்ட திட்டத்தின்படி நிர்வாக அதிகாரம் பெற்ற ஒரு டிரஸ்டியல்ல இந்த மகந்து. ஏற்கனவே சுட்டிக் காட்டியுள்ளபடி இந்த திருப்பதி 1843-ம் ஆண்டுவரையிலும் (Public authorities) அரசாங்க அதிகாரிகளுடையபூரண ஆதிக்கத்திலேயே இருந்துவந்தது. 1843-ம் ஆண்டில் இந்தக் கோவில் நிர்வாகம் மகந்துவிடம் ஒப்புவிக்கப்பட்டது. இவ்வாறு செய்தது1817-ம் ஆண்டுச் சட்டப்படி மதஸ்தாபனங்களை நிர்வகித்துவந்த ரிவன்யூ போர்டாரின் ஏற்பாடேயாகும். இது கோர்ட்டில் முடிவுசெய்யப்படும் ஒரு 'திட்டம்' (scheme) போன்றதாகும்;எனவே இதை அதே கோர்ட்டாரோ அல்லதுவேறு கோர்ட்டாரோ அல்லது கவர்ண்மென்றோ மாற்ற

முடியும்; அவ்வாறு மாற்றவோ திருத்தவோ ஸர்க்காருக்கு அதிகாரமுண்டு" என திருப்பதி மகந்து வழக்கில் சென்னை ஹைக்கோர்ட்டார் கூறியிருக்கிறார்கள்.

நிர்வாகம் மாற்றப்பட்ட பிறகுங்கூட கடைசியாகப்பூரண அதிகாரம்பெற்றவர் கவர்ன்மென்டார்தாமென்றும், இந்த தேவஸ்தானக் கமிட்டிகளுக்கும் டிரஸ்டிகளுக்கும் கொடுக்கப்பட்ட அதிகாரம் 'காரியங்களை சரிவர நடத்தவேயன்றி, மற்றும் மத சம்பந்தமான விஷயங்களில் தலையிடுவதற்கல்ல' வென்றும் இதிலிருந்து தெளிவாகிறது. பிரிவி கவுன்ஸிலாரும் சமீபத்தில் இவ்வாறே குறிப்பிட்டிருக்கிறார்கள்:- "1863-ம் ஆண்டுச் சட்டம் நிறைவேறியபிறகு, மதஸ்தாபனங்களின் பரிபாலனம் கமிட்டிகள்வசம் ஒப்புவிக்கப்பட்டது; 'மானேஜர், சூப்பிரண்டு, அல்லது டிரஸ்டிகளை' நியமிக்கும் விஷயத்தில் ஸர்க்காருக்கு இதற்கு முன்னிருந்த அதிகாரங்களே இந்தக் கமிட்டிகளுக்கும் கொடுக்கப்பட்டனவென்று பொதுவாகச் சொல்லலாம்" இதிலிருந்து நாம் முன் சொன்ன முடிவே உறுதிப்படுகின்றது; அதாவது, இந்துப் பொதுக்கோவிலுக்குள் பிரவேசிக்கவும் வணங்கவும் செல்லும் எந்த இந்துவையும் தடைசெய்ய இந்த தேவஸ்தானக் கமிட்டிகளுக்கும் டிரஸ்டிகளுக்கும் அதிகாரமொன்றுமில்லையென்பதாகும்.

அவ்வாறு செய்ய கவர்ன்மென்டாருக்கு மட்டுமே, சட்டப்படி அதிகாரமுண்டு. ஆனால் இந்த கவர்ன்மென்டார் 1863-ம் வருஷத்துக்கு முன்னதாக இந்துக் கோவில்களெல்லாம் அவர்களுடைய பூரண ஆதீனத்திலிருந்தபோது, ஒவ்வொரு இந்துவுக்கும் இந்துவென்ற ஹோதாவில், ஒவ்வொரு இந்து பொதுக்கோவிலுக்குள்ளும் நுழைந்து, தரிசிப்பதற்கு உரிமையுண்டு என்பதை, நாம் மேலே குறிப்பிட்டபடி, தங்களது நடத்தையால் குறிப்பாக அங்கீகரித்திருக்கின்றார்கள்

முதன் முதலாக ஏற்பட்ட சென்னைக் கேஸொன்றில், விதவையை மணந்துகொண்ட பிராமணன் கர்ப்பக்கிரகத்துக்குள் போகலாமாவென்ற பிரச்னை யெழுந்தபோது, ஜஸ்டிஸ் முத்துசுவாமி ஐயரவர்கள் ஆலயப்பிரவேச அனுமதி யளிப்பது சம்பந்த

மாக மானேஜர் அல்லது டிரஸ்டியின் அதிகாரங்களைப்பற்றி அடியிற் கண்டவாறு அபிப்பிராயம் வெளியிட்டார்:—

"எங்களுக்கு சாதி முறைப்படியுள்ள பொது ஆசாரங்களை அனுஷ்டித்து வரும் பிராமணர்களை மட்டிலுமே கர்ப்பக் கிரகத்துக்குள் தொழுவிட முடியும்; கல்யாண சம்பந்தமாக நீர் சாதி ஆசாரத்தை மீறி விட்டீர்; ஆகையினால், சாதி முறைப்படி நடக்கக் கூடிய பிராமணர்களை மட்டும் அனுமதிக்கக் கூடிய பாகத்திற்கு உம்மை விட சட்டமில்லை'——யென்று சொல்வதற்கு மட்டுமே கோவில் மானேஜர்களுக்கு அதிகாரமுண்டு".

இந்த வழக்கில் சம்பந்தப்பட்ட கோவில் ஒரு 'சாதி'யைச் சேர்ந்த கோவிலென்பதையும், பொதுக் கோவிலல்லவென்பதையும் முதலாவதாக ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். 'மத சம்பந்தமானதும், ஒரு சாதியைச் சேர்ந்ததுமான கோவிலென்ற முறையில் அதன் தன்மையையும் குண விசேடத்தையும் கவனித்து' என்று மேற்படி வழக்கு சம்பந்தமான (remand) உத்தரவில் கூறியிருப்பதிலிருந்து அது ஒரு பொதுக் கோவிலல்லவென்று வெளிப்படுகின்றது.

ஒரு சாதிக்கோ, கிராமத்துக்கோ சொந்தமான கோவிலைப் பொறுத்த வரையிலும் 'அடைக்கலம்' (trust) என்ற பிரச்னையே அதிலில்லையென்பது பின்னர் விளக்கப்படும். இத்தகைய ஒரு வகுப்புக்குச் சொந்தமான கோவில் சம்பந்தப்பட்ட மட்டிலும் ஜஸ்டிஸ் முத்துசுவாமி ஐயரவர்களுடைய முடிவு ஒப்புக்கொள்ளக்கூடியதாக இருக்கலாம். ஆனால் ஒரு பொதுக் கோவிலைப் பொறுத்து வாதப் பிரதிவாதம் எழும்பொழுது, வர்ணாசிரமதர்மிகள் ஜஸ்டிஸ் முத்துசுவாமி ஐயரவர்களுடைய மேற்குறித்த தீர்ப்பை யெடுத்துக் காட்டுவார்களானால் நாம் எச்சரிக்கையாக ஞாபகப்படுத்திக் கொள்ளவேண்டும்.

இங்கிலீஷ் சட்டத்தில் 'டிரஸ்டு' என்ற பதம் என்ன பொருளில் உபயோகிக்கப்படுகின்றதோ அந்தப் பொருளையுணர்த்தும் 'அடைக்கலப் பொருள் பரிபாலன'மானது இந்து சமூக வாழ்வுக்கே புதிதான தாகும்; இதை யுணராமலே

இக்காலத்தைப் போல அக்காலத்திலும் 'டிரஸ்டு' என்ற பதத்தை உபயோகித்தார்கள். 'டிரஸ்டு' என்பதற்கும், 'டிரஸ்டி' என்பதற்கும் இந்தியர்கள் கொள்ளும் பொருள் ஆங்கிலேயர்களுக்கு அதிசயத்தைக் கொடுக்கக் கூடும். இங்கிலீஷ் சட்டம் கொண்டுள்ள 'டிரஸ்டு' அந்தச் சட்டத்திற்கே உரித்தானதாகும். "இந்த டிரஸ்டு தத்துவமானது இங்கிலீஷ் வழக்கறிஞர்கள் இயற்றிய விசேஷச் செயலாகும். நாகரிகத்துக்கு இது மிகவும் இன்றியமையாததென நமக்குத் தோன்றின போதிலும், அயல்நாட்டுச் சட்டங்களில் இதைப் போன்றதெதுவுமில்லை. உதாரணமாக ஜர்மன் ஸிவில் சட்டத்தைப் பார்த்தால் அதில் 'டிரஸ்டு' இல்லை. வேறெங்குமில்லை. இது மற்ற நாட்டுச் சட்டங்களுக்குள்ள குறையாகுமென ஆங்கில வக்கீல்கள் கருதுகிறார்கள். ஆனால் அன்னியர்கள் அவ்வாறு குறை காணவில்லை" யென்று மெயிட்லன்று என்ற பேராசிரியர் (Professor Maitland) கூறுகிறார். இந்தியாவில், இங்கிலீஷ் சட்டம் நம்மை டிரஸ்டு தத்துவங்களுடன் பிரிக்க முடியாதபடி பிணைத்து விட்டது என ஒரு பிரபல இந்திய ஜட்ஜி கூறுகிறார்.

"டிரஸ்டு என்றால் என்ன? ஒரு வேலையைச் செய்யும் பொறுப்பை ஒருவர் மற்றொருவர் மீது சுமத்துவதாகும். சரி பங்கிடக் கூடியதும், சட்ட ரீதியானவையுமான பூஸ்திதிகளைப் பற்றிய செயற்கைத் திட்டம் சம்பந்தப்பட்ட சிக்கலான விஷயங்களையெல்லாம் பரிபாஷையில் இங்கிலீஷ் வழக்கறிஞர்கள் குறிப்பிடுகிறார்கள். இவற்றை இந்தியர்கள் உணர்வது கஷ்டமாகும். டிரஸ்டு என்பதற்கு லெவின் (Lewin) என்பவர் குறிப்பிடும் விளக்கவுரை சரியான உரையாயினும், இங்கிலீஷ் முறையறியாதவொருவருக்கு அதை உணர்ந்துகொள்ள முடியாது. இந்தியன் டிரஸ்டு சட்டத்தை அமைத்த இங்கிலீஷ் சட்ட நிபுணரும், டிரஸ்டு என்பதை விளக்கப் புகும்போது ஆங்கில விளக்கவுரையைப் பின்பற்றிய போதிலும், அதை முற்றும் உணர்ந்தாரில்லை. குறிப்பிட்ட செயற்கையான சட்ட திட்டங்களின் பரிபாஷை லட்சணங்களைப் பற்றி நாம் கவலைப்படவேண்டியதில்லை. சட்ட சாஸ்திரத்தின் பொதுத் தத்துவங்களைப் பின்பற்றினால்

போதுமானது" என இந்துமத தர்மபரிபாலனங்கள், டிரஸ்டுகள் சம்பந்தப்பட்ட சட்டங்களில் மேதாவியெனக் கொள்ளப்படும் திரு. ஜே. ஸி கோஷ் கூறுகிறார்.

இந்த டிரஸ்டிகள், தேவஸ்தானக் கமிட்டிகள், பிரிட்டிஷ் ஸர்க்கார் இவர்கள் தவிர, வேறு யாருக்கு, இந்துப் பொதுக் கோவிலில் உயர்ந்த சாதி அல்லது தாழ்ந்த சாதி இந்துவைப் போகக் கூடாதெனத் தடுக்க உரிமை யுண்டு?

## அத்தியாயம் 19.

ஆலயப்பிரவேசப் பிரச்னை சம்பந்தமாகவுள்ள கோர்ட்டுத் தீர்ப்புகளையும், சட்டங்களையும் கவனிப்பதற்கு முன்னதாக, சரித்திர ரீதியாகவும், சமுதாய சம்பந்தமாகவும், மதக்கொள் கைப்படியும் இப் பிரச்னையின் நிலையென்ன வென்பதை ஆராய் வோம்.

திருப்பதிகோவில் வழக்கில் சென்னை ஹைக்கோர்ட்டார் கூறியிருப்பதுபோல, இந்த இந்து ஆலயங்களும், இதர மத ஸ்தாபனங்களும் அவ்வக்காலத்தில் இந்நாட்டை யாண்டு வந்த இந்து, மகமதிய, கிறிஸ்தவ மன்னர்களுடைய பரிபாலனத்தி லேயே இருந்து வந்திருக்கின்றன வென்பதை முதலாவதாகக் கவனிக்கவேண்டும். இந்த அரசர்களையும், அவர்களுடைய பரி பாலனத்தையும் பொறுத்த மட்டில் ஸ்மிருதிகளும், ஆகமங்க ளும் காற்றில் பறக்கவிடப்பட்டன என்பதிலும் சந்தேகமில்லை.

பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் கோவில்களுடையவும், கோவில் சொத்துக்களுடையவும் பரிபாலனத்தை 1841-ம் வருடத்தில் 'இந்து'ப் பொதுஜனங்களுக்கு விட்டுக்கொடுக்கும்படி செய்தவை இந்த வேதாந்திகள், ஆகமிகள், வருணாசிரம தர்மிகள் அல்லது சனாதனதர்மிகளது ஊக்கமும் முயற்சியுமல்ல வென்பது இரண் டாவதாகக் கவனிக்கவேண்டிய விஷயம். இது சட்ட மாணவரும்,

சாதாரண மக்களும் அறிந்திருக்கவேண்டிய மிக முக்கியமான விஷயமாகும்.

"ஒரு தனிப்பட்ட மதத்தைக் காப்பாற்றும் பொறுப்பை ஏற்றுக்கொண்ட ஒரு அரசாங்கமானது, ஏனைய மதங்களையும், மதஸ்தாபனங்களையும் பாதுகாக்கவோ, அங்கீகரிக்கவோ முடியாது. இந்தக் காரணத்தாலேயே கத்தோலிக்க தேசங்களில் புராட்டஸ்டண்டு ஸ்தாபனங்களை அரசாங்கத்தார் பாதுகாப்பதில்லை; புராட்டஸ்டண்டு தேசங்களில் கத்தோலிக்க ஸ்தாபனங்களை அரசாங்கத்தார் காப்பாற்றுவதில்லை. பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் 1810-வது வருடச் சட்டப்படி ஏற்றுக்கொண்ட இந்து மகமதியமத பரிபாலனத்தை, தாங்கள் ஒரு கிறிஸ்தவ கவர்ன்மெண்டார் என்ற முறையில் 1863-ம் ஆண்டில் விட்டுக்கொடுத்ததின் காரணமும் இதுதான்" என்று வங்காள சட்ட நிபுணர் திரு. ஜே. ஸி. கோஷ் கூறுகிறார்.

சென்னையில் 1817-ம் வருஷத்திலும், வங்காளத்தில் 1810-ம் வருஷத்திலும் பம்பாயில் 1827-ம் வருஷத்திலும் நிர்வாக ஊழல் என்னும் காரணத்தைக் காட்டி பிரிட்டிஷ் ஸர்க்கார் இந்து மதஸ்தாபன பரிபாலனத்தை ஏற்றுக்கொள்ளும்போதும் இந்தக்காரணம் இருக்கத்தான் செய்தது. அதாவது இந்துமத ஸ்தாபனங்களின் பரிபாலனத்தைவிடும்போது பிரிட்டிஷ் ஸர்க்கார் எவ்வளவு கிறிஸ்தவமதப் பற்றுடையவர்களாக இருந்தார்களோ, அவ்வளவு பற்றுடையவர்களாகவே, அவற்றின் பரிபாலனத்தை யேற்று வருமானங்களைக் கைப்பற்றி வந்தபோது மிருந்தார்கள் என்பதாகும். பின், இவ்வாறு பரிபாலனத்தைவிடத் தூண்டிய காரணமென்ன? சிப்பாய்க் கலகத்துக்குப் பின்னுல் 1863-ல் இவ்வாறு பரிபாலனத்தை விட்டார்கள் என நினைப்பது தவறாகும். ஏனெனில் சிப்பாய்க் கலகத்துக்கு நீண்டகாலம் முன்னதாகவே, திருப்பதிகோவில் பரிபாலனம் விடப்பட்டதுபோல, 1842-ம் வருஷத்திலேயே விடத்தொடங்கி விட்டார்கள்.

1927-ம் வருஷத்துச் சென்னை தேவஸ்தானச் சட்டத்தைப் பற்றித் தாம் எழுதியுள்ள புஸ்தகத்தில் டாக்டர் கிருஷ்ணமாச்சாரியார் அவர்கள் அடியில் வருமாறு எழுதுகிறார்:—

"சகல பொது ஸ்தாபனங்களுக்கும் காவலர் என்ற முறையில் பொது மத ஸ்தாபனங்களின் பராமரிப்பு அரசருடைய பொறுப்பிலுட்பட்டதாகும். இந்து மகமதிய அரசாங்கங்கள் மதஸ்தாபனங்கள் மீது ஆதிக்கஞ் செலுத்தி வந்தன. மொகலாய ஆட்சி வீழ்ந்தபிறகு பிரிட்டிஷ் அரசாங்கத்தாரிடம் இந்த அதிகாரம் இறங்கிற்று. ஸ்தாபித்தவர்களுடைய நோக்கத்துக்குமாருக, இவற்றை நிர்வகித்தவர்கள் தங்கள் சொந்த உபயோகத்துக்காக இவற்றின் வருமானங்களைச் செலவிட்டு வந்ததாகக் காணப்பட்டதால் ஒழுங்காக நிர்வகிக்கும் கடமையையுணர்ந்த பிரிட்டிஷ் ஸர்க்கார் 1810-ல் வங்காளத்திலும், 1817-ல் சென்னையிலும் சட்டங்களை ஏற்படுத்தினுர்கள்" (பம்பாயில் 1827-ல் இம்மாதிரிச்சட்டம் ஏற்படுத்தப்பட்டது.)

"இதற்கு முன்னிலிருந்த அரசாங்கங்களாலும், தனிப்பட்டவர்களாலும் உண்டுபண்ணப்பட்ட பொதுக்கோவில்களையும், தர்மஸ்தாபனங்களையும் பொறுத்தே இந்தச்சட்டங்கள் இயற்றப்பட்டன; மடங்களையும் சந்நியாசிகளையும் இவை பாதிக்கவில்லை. இந்தக்கோவில்களின் நிர்வாகத்தை ரிவனியூ போர்டார் வசம் ஒப்படைத்திருப்பதைப் பலர் ஆட்சேபித்தனர். ஆனால் இவ்விதம் ஆட்சேபித்தவர் இந்துக்களல்ல; கிறிஸ்துவ மதப்பாதிரிகளே ஆட்சேபித்தார்கள். ஒரு கிறிஸ்தவ கவர்ன்மென்ருர் அன்னிய மத ஆலயங்களைப் பரிபாலிப்பது கூடாதென அவர்கள் எதிர்த்தார்கள். இவர்களுடைய பலமான கூக்குரலைப் பொறுக்கமுடியாமல், மதஸ்தாபனங்களின் நிர்வாகத்தை தகுதியுடையவர்களிடம் ஒப்புவித்து விடவேண்டுமென்ற நோக்கத்துடன் அறிக்கை யனுப்புமாறு 1841 ல் கவர்ன்மெண்டார் கலக்டர்களுக்கெழுதினுர்கள்" என்று திரு. ஜே. ஸி. கோஷ் அவர்கள் தமது தாகூர் சட்ட விரிவுரையில் குறிப்பிடுகிருர்.

டாக்டர் கிருஷ்ணமாச்சாரியார் அவர்கள் அடியில்வருமாறு குறிப்பிடுகிறார்:—

"பிற மத ஸ்தாபனங்களில் தலையிடுவது கிறிஸ்தவ கவர்ன் மெண்டாராகிய தங்களுக்குத் தகாது என்பதை 1841-ல் உணர்ந்த பிரிட்டிஷ் ஸர்க்கார், மதஸ்தாபனங்களின் நிர்வாகத்தை விட்டுவிடச் சிறந்தவழியென்ன வென்பதாக ஜில்லாக் கலக்டர்களுக்கு எழுதிக் கேட்டார்கள். அதன்படி, 1842-ல் பல மத ஸ்தாபனங்களை, டிரஸ்டிகள் வசம் ஒப்படைத்தார்கள். ஆனால் இந்த டிரஸ்டிகளில் பெரும்பாலோருக்கும் அவர்கள் வசம் ஒப்படைக்கப்பட்ட தர்ம ஸ்தாபனங்களுக்கும் யாதொரு சம்பந்தமுமில்லை. அவர்களுடைய அந்தஸ்தையும், தெய்வபக்தியையும் மதித்து, இந்தஸ்தாபனங்களை ஒழுங்காக நிர்வகிப்பார்கள் என்று கருதினார்கள். திருப்பதி, திருவள்ளூர் கோவில்கள் இவ்வாறே ஒப்புவிக்கப்பட்டன. இந்த நோக்கத்தை நன்கு நிறைவேற்றவும், மதஸ்தாபனங்களின் பராமரிப்பைப் பாதுகாக்கவுமே, 1863-ம் ஆண்டில் தேவஸ்தானச்சட்டமும் ஏற்படுத்தப்பட்டது."

மத ஸ்தாபனங்களின் பரிபாலனத்தை கிறிஸ்தவ ஸர்க்கார் விட்டுவிடும்படி வற்புறுத்தியது, புராட்டஸ்டண்டு கிறிஸ்தவப் பாதிரிமார்களென்பதும், அவ்வாறு நிர்வாகமாற்றம் 1842-முதல் 1863 வரை நிகழ்ந்ததென்பதும் மேற்குறிப்பிட்ட எடுத்துக் காட்டுகளினின்றும் தெளிவாகும். வருணாசிரம தர்மிகளும், சனாதனதர்மிகளுமான நமது நண்பர்கள் அக்காலத்தில் இருந்தவிடமே தெரியாது. இந்த ஸ்தாபனங்களிலிருந்து கிடைத்து வந்த ஏராளமான வருமானத்தைக் கிறிஸ்துவ ஸர்க்கார் விடவேண்டிய காரணமென்ன? அவர்களுக்கு முன்னிருந்த முகமதிய, இந்து அரசாங்கங்கள் இவ்வருமானங்களைக் கைப்பற்றும் வழக்கத்தை "நெடுங்காலப் பழக்கவழக்க" மாகத்தானே கைக்கொண்டிருந்தார்கள்?

புராட்டஸ்டாண்டு மதப்பிரசாரம் அக்காலத்தில் எந்நிலையிலிருந்தது, எவ்வளவுதூரம் முன்னேறியிருந்தது என்பதை நாம் அறிந்தால் இதன் உண்மை விளங்கும்.

கிறிஸ்தவமதம் அபாயகரமான நிலையிலிருந்தது. புராட்டஸ்டண்டு மதப்பிரசாரம் ஸ்தம்பித்து விட்டது......அரசாங்க மதமான புராட்டஸ்டண்டு மதத்துக்கு ஏற்பட்ட அபாயத்தை அகற்ற வேண்டியிருந்தது; கிறிஸ்தவ மதப்பிரசார வேலைக்கு அதிக ஊக்கமும் தேவைப்பட்டது. இந்து மதக்கோயில்களைக் கிறிஸ்தவ ஸர்க்கார்கள் தம் ஆதீனத்தில் வைத்திருந்தது கிறிஸ்தவ மதப்பிரசார வேலைக்கு இடையூறென்றும் உணரப்பட்டது. இதைப்பற்றி இனி ஆராய்வோம்.

## அத்தியாயம் 20.

ஜூலியஸ் ரிக்டர் என்னும் ஜர்மன் ஆசிரியர் 'கிறிஸ்தவ பிரசார சபைகளின் சரித்திரம்' என்ற தமது புத்தகத்தில் பிரிட்டிஷ் அரசாங்கத்தார், இந்தியாவிலுள்ள இந்து மத ஸ்தாபனங்களைத் தங்கள் மேற்பார்வையினின்றும் அகற்றியதைப்பற்றிக் குறிப்பிட்டுள்ள பாகத்தைமட்டும் அடியில் சுருக்கி வெளியிடுகின்றோம். என்ன காரணத்தினால், அவர்கள் தங்கள் பொறுப்பை அகற்றவேண்டிய தேற்பட்டதென்ற விஷயம் இதினின்றும் நன்கு புலப்படும்:

### அஞ்ஞானத்திற்கு ஆதரவு—
### பேன்றிங்க் பிரபுவின் சீர்திருத்தங்கள்.

ஈஸ்டு இந்தியக் கம்பெனிக்காரர்கள், தாங்கள் எப்பொழுதுமே மத விஷயத்தில் நடுநிலைமை வகித்து வருவதாகச் சொல்லிக்கொண்டிருந்தார்கள். இம்மாதிரி நடுநிலைமை வகிப்பதைப் பெரிய கவுரவமாகவும் கருதிக்கொண்டிருந்தார்கள். அதை அடிக்கடி சொல்லி அவர்கள் தாமே மெச்சிக்கொள்வதுமுண்டு. ஆனால் 19-வது நூற்றாண்டின் ஆரம்பம் முதல் இந்த நடுநிலைமை வகிக்கும் நெறியினின்றும் மாறிவிட்டதைக்காணலாம். இந்த மாற்றத்தினால், நாட் செல்லச் செல்ல சுதேச மதங்கள் மீது கம்

பெனியார்களுக்கு அளவு கடந்த பற்றுதல் உண்டாகவும், கிறிஸ்தவ மதத்தின் மீது நியாயமற்ற முறையில் அவமதிப்பு ஏற்படவும் இடமாயிற்று. இந்தியாவிலுள்ள விக்கிரக ஆராதனைக்குக் கம்பெனியார் ஆதரவளிக்கும் விஷயம், ஸ்தல யாத்திரை வரி ஏற்பட்டபோது மிகக்கேவலமாக வெளிப்பட்டது. 1803–ல் ஒரிஸா ராஜ்யத்தை ஆங்கிலேயர் கைப்பற்றியபொழுது பூரி ஜகன்னாத புரியிலுள்ள நீலக்கடவுள் தம்மை ஆங்கிலேயர் இனிமேல் பாதுகாக்க வேண்டுமெனத் தமது விருப்பத்தை வெளியிட்டார். கோவில் பிராமணர்கள் கைக்கூலி கொடுத்து அவ்வாறு தெரிவிக்கும்படி செய்தார்கள். அதன்படி, கம்பெனியார் உடனேயே அந்தக்கோவிலேயும் அதைச்சேர்ந்த ஏராளமான சொத்துக்களையும் தங்கள் ஆதீனத்தில் எடுத்துக்கொண்டார்கள். மூன் முகமதியர்கள் ஆட்சிபுரிந்த காலத்தில் ஏற்படுத்திய தீர்த்த யாத்திரை வரியைத் திரும்பவும் ஏற்படுத்தும்படி லண்டனிலிருந்து உத்தரவு வந்தது. அவ்வமயம் கவர்னர் ஜெனரலாக இருந்த வெல்லெஸ்லி பிரபு இந்த உத்திரவை அமுல் நடத்த முடியாதென மறுத்தார். ஆனால் 1806–ம் ஆண்டில் இவருக்குப்பின் வந்த பார்லோ என்பவர், பூரியிலுள்ள சகல கோவில் சொத்துக்களையும் பிரிட்டிஷ் சிர்வாகத்தில் எடுத்துக் கொண்டதோடு, தீர்த்தயாத்திரைவரியை இரக்கமின்றி வசூலிக்கவுஞ் செய்தார். இதற்குப்பதிலாக, கோவில் கட்டிடங்களைப் பராமரிக்கவும், பூசாரிகளுக்குச் சம்பளங் கொடுத்து பூஜைகளைச் சரிவர நடத்தவும் கவர்ன்மென்ளுர் ஒப்புக்கொண்டார்கள். இதன் மூலம் அவர்களுக்கு நல்ல லாபம் கிடைத்தது. முதல் வருஷத்திலேயே ஒரு லட்சத்துமுப்பத்தையாயிரம் ரூபாய்க்குமேல் லாபமடைந்தார்கள். "ஜகன்னாதக் கடவுள் ஒன்றுமேயில்லை யென்றால், அவரிடமிருந்து கம்பெனியார் அவ்வளவு பணத்தை லாபமடைவானேன்" என்றே "உங்கள் மதம் உண்மையான மதமாயிருந்தால் உங்கள் அரசாங்கம் அதற்கு உதவி செய்யாதா? அவ்வாறு செய்யாமல் எங்களது தெய்வங்களை ஆதரிப்பானேன்" என்றே இந்துக்கள் பாதிரிமார்களிடம் கேட்டபொழுது அவர்கள் பதிலளிக்க முடியாது தயங்கினார்கள். பிஹார் தேசத்தில் கயா என்னும் ஊர் புத்தர் காலம்

முதல் மிகப்பிரசித்தி பெற்ற ஸ்தலமாகும். இது புத்த மதஸ்தர்களுக்கும் இந்துக்களுக்கும் ஒரு பெரிய புண்ணிய ஸ்தலமாக இருந்து வந்தது. இதிலிருந்தும் அரசாங்கத்துக்கு வருமானம் கிடைத்தது. இந்த விடத்திலும் தீர்த்த யாத்திரை வரிகளேற்படுத்திக் கொடூரமாக வசூலித்து வந்தார்கள். வரிகள் ஏற்பட்டதும் யாத்ரீகர்களின் தொகையும் குறிப்பிடத்தக்கவாறு அதிகரித்தது. பிரயாணிகளின் தொகை இருபத்தோராயிரத்திலிருந்து லட்சமாக ஏறிவிட்டது. லாபமும் இரண்டரை லட்சம் ரூபாய்க்கு மேல் மூன்று லட்சம் ரூபாய் வரை கிடைத்து வந்தது. இந்த இரு பிரபல கோவில்களிலும் தீர்த்த யாத்திரை வரிகள் அளித்த பெருமிதமான லாபத்தைக்கண்டு கம்பெனி அரசாங்கத்தார் அலகபாத், திருப்பதி, காசிபுரி, சர்க்காரா, ஸம்பால், ஹாவா முதலிய பல இடங்களிலும் இம்மாதிரித் தலைவரி யேற்படுத்தினர். இந்த வரிகளிலிருந்து மட்டும் அவர்களுக்கு வருஷந்தோறும் சராசரி 75000 பவுன் கிடைத்து வந்தது. இச்சந்தர்ப்பத்தில் ஆங்கிலேய அரசாங்கத்தார் ஒரு கஷ்டமான நிலைமையிலகப்பட்டுக்கொண்டார்கள். ஒவ்வொரு ராஜ்யமாகத் தம் வசப்படுத்தியபோது அவற்றைச் சரிவர அரசாளவேண்டிய பொறுப்பு ஏற்பட்டுவிட்டதுடன், முந்தின அரசர்கள் இயற்றிவந்த கடமைகளையும் நிறைவேற்றவேண்டிய சுமைதலை ஏற்பட்டது. இதில் ஆலய நிர்வாகமும், ஆலயச்சொத்து பரிபாலனமும் உட்பட்டன. அவர்கள் விரும்பினுல், இந்தப் பொறுப்பினின்றும் விடுபட வழி கண்டுபிடித்திருக்க முடியும். ஆனுல் இவற்றிலிருந்து ஏராளமான லாபங் கிடைத்து வந்தபடியால் விட்டு விட மனம் வரவில்லை.

ஆகவே, அவர்கள் வெளிப்படையாக இந்து மதக்கோவில்களை ஆதரிக்கத் தொடங்கினுர்கள். சென்னை ராஜதானியில் காஞ்சீபுரத்திலிருக்கும் அழகிய சிவன் கோவில் பழுதுற்றுக் கிடந்தது. அந்தக்கோவிலைச் சார்ந்த பார்ப்பனர்கள் அதைப் பழுது பார்க்கவுமில்லை; பழுது பார்க்க ஆசைப்படவுமில்லை. அப்பொழுது பிளேஸ் (Place) என்ற ஆங்கில உத்தியோகஸ்தர் கம்பெனி அரசாங்கத்தாரைக்கொண்டு பெரும் பணச்செலவிட்டு

கோவிலைப் புதிப்பித்தார். இந்துக்களை நல்வழிப்படுத்தவே அவ்வாறு செய்வதாகச் சொன்னார். மேலும், அந்த கிறிஸ்தவ அதிகாரி தாமே அந்தக் கோவிலுக்கும் தெய்வத்துக்கும் வழிபாடு செய்தார். அவரளித்த நிவேதனம் (கட்டளை) பல வருடங்களாக ஒரு காட்சிப்பொருளாகக் காண்பிக்கப்பட்டு வந்தது. விக்கிரக ஆராதனையைத் தாங்கள் ஆதரிப்பதாகக் கவர்ன்மென்றார் வெளிப்படையாகத் தெரிவித்த பிறகு அது வெகு சீக்கிரமாகத் தடையின்றிப் பரவி வந்தது. அரசாங்க ராணுவ அதிகாரிகளும் மற்றும், இந்து முகம்மதிய உற்சவங்களைக் கவுரவப்படுத்தும்படி கட்டாயப்படுத்தப்பட்டார்கள். அவர்கள் உற்சவங்களுக்குச் செல்லவேண்டுமென்று உத்திரவிட்டார்கள். பிராமணர்களுக்குக் கொடுக்கக்கூடிய தட்சணைகளை இவர்களே வாங்கிக்கொடுக்க வேண்டுமென்றும் ஆக்ஞாபித்தார்கள். கோவில் உற்சவ காலங்களில், ராணுவ பீரங்கிகளைக்கொண்டு மரியாதை குண்டு போடும்படி ஏற்பாடு செய்தார்கள். மழைப் பஞ்சமேற்பட்ட காலத்தில் வருண ஜெபம் நடத்த பிராமணர்களை அரசாங்கத்தாரே ஏற்படுத்திச் சம்பளமும் கொடுத்தார்கள். அநாகரிகமான தேர்களை மிருகங்களைப்போல் இழுக்கும்படி ஆயிரக்கணக்கான பிரயாணிகளை நிர்ப்பந்தப்படுத்தினார்கள். ஆலயங்களைப் புதுப்பித்தல், பழுது பார்த்தல், இதர பணிகளைச்செய்தல் ஆகியவற்றில் அரசாங்கத்தார் பல ஆயிரக்கணக்காகச் செலவிட்டார்கள். இச்சந்தர்ப்பங்களில் பிராமணர்களுக்குக் கொடுக்கவேண்டிய சாப்பாடுகளை அவர்கள் மறக்கவில்லை. மறைந்துபோன திருவிழாக்களைப் புதுப்பித்தார்கள். இவ்விஷயத்தில் மானத்தையும் இழந்தார்கள். ஒவ்வொரு கோவில் சொத்தையும் கம்பெனி அரசாங்கத்தார் கைப்பற்றி வந்தார்கள். புதிய தேர் செய்தல், விக்கிரகங்கள் செய்தல், பிராமணர்களை நியமித்து சம்பளங்கொடுத்தல், வாத்தியக்காரர், சமையற்காரர், காவற்காரர் முதலியவர்களுக்கும், கோவிலைச்சேர்ந்த தேவதாசிகளுக்கும் ஆங்கில உத்யோகஸ்தர்களே சம்பளங்கொடுத்து வந்தார்கள். 1858-ம் வருஷம் அதாவது இந்த மாதிரி இந்துக்கோயில்களை இங்கிலீஷ் அரசாங்கத்தார் வைத்துப் பரிபாலிக்கக்கூடாது என்ற போராட்டம் ஆரம்

பித்த பிறகு சென்னை மாகாணத்தில் மட்டும் 8292 விக்கிரகங்களுக்கும் கோவில்களுக்கும் வருஷந்தோறும் அரசாங்கத்தார் 8,76,780 ரூபாய் செலவிட்டு வந்தார்கள். பம்பாய் ராஜதானியில் 26589 கோவில்களுக்கும் விக்கிரகங்களுக்கும் 698593 ரூபாய் செலவிட்டார்கள். கம்பெனி அரசாங்கத்தார் ஆட்சியிலுட்பட்ட பிரதேசம் முற்றிலும் விக்கிரக வணக்கத்திற்காக வருஷந்தோறும் 1715586 ரூபாய் செலவிடப்பட்டு வந்தது.

[குறிப்பு:— அரசாங்கத்தார் இம்மாதிரியாக இந்துமதத்தைப் போற்றி வந்ததைக் கிறிஸ்தவப் பாதிரிமார்கள் எவ்வாறு கருதினார்கள் என்பது, அக்காலத்து பேஸல் மிஷின் சங்கத்தலைவருடைய வார்த்தைகளினின்றும் நன்கு புலனாகின்றது: 'இந்தியாவில் விக்கிரக ஆராதனை குறைந்துகொண்டே வந்தது. பல கோவில்கள் அழிந்து, சிதைந்து, மாய்ந்து போய்விட்டன. கோவில் பொக்கிஷங்கள் எல்லாம் பேராசை பிடித்த பிராமணர் கையில் சிக்கி பாழாயின; விக்கிரக ஆராதனை இனி தலைதூக்க முடியாத நிலைக்கு வந்து விட்டது; முழுவதும் அழிந்தொழிந்து போவது நிச்சயமாகிவிட்டது. இந்த நிலையில் அரசாங்கத்தார் வந்து கோவில்களை திரும்பக்கட்டி, கோவில் சொத்துக்களைத் தம் வசப்படுத்தவும், திருவிழாக்களும், ஊர்வலங்களும் நடத்தவும் தொடங்கினார்கள். இதன் பயனால் இந்து மதம் முழுவதும் புத்துயிர் பெற்றது; அதற்குப் புதிய மதிப்பு ஏற்பட்டது. ஒரு புதிய மதம் தோன்றிவிட்டதாக ஜனங்கள் எண்ணும்படியாயிற்று. எவ்வளவோ அதிக யாத்திரை வரியை ஏற்படுத்தியிருந்தபோதிலும், கோவில்களுக்குச் செல்லும் பிரயாணிகளுடைய தொகை நம்ப முடியாத அளவு அதிகரித்துக் கொண்டேயிருந்தது. பிராமணர்களை அரசாங்க உத்தியோகஸ்தர்களாகவே மதித்துவிட்டார்கள். இந்து மதத்திற்கும் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கும் எவ்வித வித்தியாசமுமில்லை; இரண்டும் ஒன்றுதான் என்பதாக ஜனங்கள் கருதினார்கள். மயக்கங்கொண்ட மக்களை ஏமாற்றுவதற்கு இந்த நிலைமை பிராமணர்களுக்கு ஒரு சிறந்த ஆயுதமாக விளங்கியது' —பேஸல் மிஷன் பத்திரிகை 1858: பக்கம் 346.]

புது வருஷப்பிறப்பன்று பொங்கல் திருநாளை முன்னிட்டு, மதராஸில் இந்துக்கள் தங்கள் ஜீவனோபாயத்திற்கு ஆதாரமாயிருக்கும் ஆயுதங்களைவைத்துப் பூஜிப்பதுண்டு. அவ்வமயம் அர

சாங்கக் காரியாலயங்களிலுள்ள கணக்குப் புஸ்தகங்களையும், தஸ்தவேசுகளையும், மேஜை பேனு, மைக்குப்பிகளையுங்கூட வைத்து அரசாங்க உத்திரவுப்படி, அரசாங்கச் செலவில் பூஜித்து வந்தார்கள். சில சந்தர்ப்பங்களில் ஆங்கிலேயர்களே தங்கள் சொந்தச் செலவு செய்து கோவில்கள் கட்டி விக்கிரக ஆராதனைக்கு மானியமும் விட்டதுண்டு. இந்துப் பெண்களை ஆசை நாயகிகளாக வைத்திருந்த ஐரோப்பியர்கள் இம்மாதிரி அவர்களைத் திருப்திப்படுத்துவதற்காக அடிக்கடி செய்து வந்தார்கள்.

மிக வெளிப்படையாகவே கம்பெனி அரசாங்கம் இவ்விதம் இந்துமதத்தை ஆதரிக்கத் தொடங்கிவிட்டபடியால் கிறிஸ்தவ மதத்தைப் பரவச்செய்வது அவர்களுக்கு அசௌகரியத்தைக் கொடுக்குமென்பது மட்டுமின்றி, கிறிஸ்தவ மதத்தைப் பரவவொட்டாமல் தடுக்கவும் நேரிடுமென எதிர்பார்க்க வேண்டியதாயிற்று. இந்து அதிகாரிகளடங்கிய வகுப்பில் கிறிஸ்தவர்களை நியமிப்பதில்லை, எந்த முகம்மதியரையோ, இந்துவையோ அரசாங்க உத்யோகத்தில் நியமிப்பர்; ஆனல் இந்தியக்கிறிஸ்தவர் ஒரு இழிவான ஜன்மமென்பதாக எண்ணி, சந்தேகத்துடனேயே கருதி வந்தார்கள். 1876-ம் ஆண்டில் புதிதாக கைப்பற்றப்பட்ட மைசூர் ராஜ்யத்தில் பிரிட்டிஷ் அரசாட்சியை ஏற்படுத்திய பொழுது, கிறிஸ்தவர்கள் நீதிமன்றத்தினுள் புகக்கூடாதெனப் பிரத்தியேக உத்தரவிட்டார்கள். அதற்கு முன்னிருந்த சுதேச அரசாங்க காலத்தில் கிறிஸ்தவர்கள் இவ்வாறு தடை செய்யப்படவில்லை. எச்சமயத்திலும், எச்சந்தர்ப்பத்திலும் அரசாங்கத்தாரிடமிருந்து எத்தகைய உதவியையும் எதிர்பார்க்க வேண்டியதில்லையெனக் கிறிஸ்தவர்கள் உணருமாறு செய்யப்பட்டது.

சிறிது தைரியமாகவும், புத்திசாலித்தனமாகவும் ஆட்சி புரிந்த முதலாவது கவர்னர் ஜெனரல் வில்லியம் பென்டிங்க் பிரபு ஆவர் (1828—1835). இந்தியாவில் சீர்திருத்தம் ஏற்பட ஆரம்பித்தது அவர் காலத்தில் தான்..........உடன் கட்டையேறும் கொடிய வழக்கத்தைத் தடுத்தார்; உடன் கட்டை

யேறுவதில் யாரெல்லாம் பங்கு கொள்கின்றார்களோ, அவர்களுக்கெல்லாம் மரணதண்டனை கிடைக்குமெனப் பயமுறுத்தினர்.

இவ்விதச் செயல்களினால் அவர் இந்து மதத்தின் ஆணிவேரிலேயே கைவைத்தார். இதுகாறும் கம்பெனியார் கைக்கொண்டுவந்த அரசாங்க முறைக்கு நேர் விரோதமாக பென்டிங்க் பிரபு அவர்கள் உத்திரவிட்டிருப்பதைக் கேட்டபோது லண்டனிலுள்ள மேலதிகாரிகள் நடு நடுங்கினார்கள். இச்சட்டத்தை ரத்து செய்யும்படி பழைய ஸிவில் உத்தியோகஸ்தர்கள் அவரிடம் கேட்டுக்கொண்டார்கள். ஆனால், பென்டிங்க் பிரபு தைரியமாக இருந்தார். இந்தியாவிலும் குழப்பமெதுவும் ஏற்படாமல் சமாதானமே நிலவிற்று. கிறிஸ்தவ மதத்தைச் சேர்ந்தவர்களுக்கு இதுகாறும் இழைக்கப்பட்டு வந்த அநீதிகளை ஓரளவாகிலும் அகற்ற முதன் முதலாகத் தலையிட்டவரும் பென்டிங்க் பிரபுவே ஆவர். 1832-ம் ஆண்டில் முதலாவதாக, வங்காள தேசத்துக்கு மட்டும் ஒரு விதி வகுத்தார். பிரிட்டிஷ் அரசாங்கத்தின் மதிப்பில் சகல ஜாதியைச் சேர்ந்தவர்களும், சகல வகுப்புகளைச் சேர்ந்தவர்களும் சமமே யென்றும், வித்தியாச மெதுவுமில்லையென்றும், கிறிஸ்தவமதம் உள்ளிட்ட எந்த மதத்தைத் தழுவினாலும் அது காரணமாக யாருடையவும் பிறப்புரிமையோ பிரஜா வுரிமையோ பறிமுதல் செய்யப்படமாட்டாதென்றும் அவ்விதி குறிப்பிட்டது. இம்மாதிரி சீர்திருத்தங்களெல்லாம், இவை இந்துக்களின் நீண்டகால பழக்க வழக்கங்களுக்கு விரோதமாக இருந்தபோதிலும், யாதொரு கஷ்டமுமில்லாமல் நிறைவேற்றப்பட்டன. இது சம்பந்தமாக யாதொரு குழப்பமோ கலகமோ ஏற்படவில்லை. இதுகாறும் கம்பெனி அரசாங்கத்தார் கைக்கொண்டு வந்த முறையைக் கண்டித்து வந்தவர்களுக்கு இந்நிலைமை ஊக்கமளித்தது. சார்ல்ஸ் கிரான்ற் என்பவரின் புத்திரரான கிளனல்க் பிரபு 1833-ம் ஆண்டில், கம்பெனிக்காரர்களுக்கும் விக்கிரக ஆராதனைக்குமிருந்துவந்த தொடர்பை ஒரேயடியாக ஒழித்துவிட வேண்டுமெனத் துணிந்தார். இது வகைக்காக

7-பிரிவுகளடங்கிய ஒரு சட்டத்தை வகுத்தார். அது வருமாறு:—

(1) சுதேசக் கோவில்களின் பூஜை முதலிய காரியாதிகளின் நிர்வாகத்திலும், அனுஷ்டானங்கள், பூசாரிகள் மற்ற வேலைக்காரர்கள் இவர்களுடைய நடபடிகளிலும், தேர் திருவிழாக்கள் நடத்துவதிலும் பொதுவாகக் கோவில் சம்பந்தமான எந்த விஷயத்திலும் பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர்கள் யாரும் தலையிடக்கூடாது.

(2) தீர்த்த யாத்திரை வரி எங்கும் ஒழிக்கப்படும்.

(3) கோவில் வழிபாடு, கோவில்களுக்குக் கொடுக்கப்படும் பணம் முதலிய காணிக்கை யாதொன்றும் இனி பிரிட்டிஷ் அரசாங்க வருமானங்களாகக் கருதப்படமாட்டாது. எனவே ஈஸ்டு இந்தியக்கம்பெனி உத்யோகஸ்தர்கள் இவற்றைச் சேகரிக்கவோ வசூலிக்கவோ கூடாது.

(4) கோவில் சம்பந்தப்பட்ட பண வசூலை வசூலிப்பதிலோ, நிர்வகிப்பதிலோ கம்பெனி உத்யோகஸ்தர்கள் எவ்விதத்திலும் தலையிடக்கூடாது.

(5) கம்பெனி உத்யோகஸ்தர்கள் யாரும் கோயில் ஆதாயங்களிலிருந்து சம்பளமோ வெகுமானமோ பெறக்கூடாது.

(6) கோவில் சம்பந்தமாகவுள்ள வழிபாடு, திருவிழா முதலிய சடங்குகளை யெல்லாம் அந்தந்த மதஸ்தர்களே நடத்திக் கொள்ளும்படி விட்டுவிடவேண்டும்.

(7) கோவில் வழிபாட்டிற்குச் செல்லும் பிரயாணிகளுடைய பாதுகாப்புக்காகப் போலீஸ்காரர்கள் ஏற்படுத்தவேண்டிய அவசியம் ஏற்பட்டால், அந்தச்செலவு அரசாங்கத்தின் பொதுவருமானத்திலிருந்து செலவு செய்யப்படவேண்டும்.

வழக்கப்படி கிளனல்க் பிரபு இயற்றிய இந்த சட்டம் லண்டனிலுள்ள நிர்வாக சபை டயரக்டர்களுடையவும் டயரக்டர்கள் கோர்ட்டினுடையவும் அங்கிகாரம் பெறவேண்டியதிருந்தது. இந்த இரு கூட்டத்தாரும் இந்த சட்டத்தை நடப்பிற்குக் கொண்டுவர முடியாதென மறுத்துவிட்டனர். ஆனால் இவர்களுடைய அங்கிகாரமில்லாமலே இச்சட்டத்தை அமுலுக்குக் கொண்டுவர உரிமையுண்டென்றும் அவர்களுடைய எதிர்ப்பைக்கவனியாமல் நடப்பில் கொண்டுவருவது அவர்களுக்குக் கௌரவக்குறைவாகுமென்றும் கிளனல்க் பிரபு எடுத்துக்கூறினர். எனவே அவருடைய அபிப்பிராயத்துக்கு டயரக்டர்கள் இணங்கவேண்டியதாயிற்று. சட்டமும் இந்தியாவுக்கு அனுப்பப்பட்டது. பழய முறைக்குச் சாதகமான அதிகாரிகளெல்லாம் இதைக்கண்டு திடுக்கிட்டனர். மாகாண அரசாங்கங்கள் இதை அமுலுக்குக்கொண்டுவர ஆசைப்படவில்லை, அவர்களுக்குத்தைரியமுமில்லை. மூன்றுவருடங்கள் கழிந்தன. சட்டம் புதைக்கப்பட்டு மறக்கப்பட்டுவிட்டதுபோல் தோன்றியது. 1836-ம் ஆண்டில் பிஷப் கோரி என்பவர் தலைமையில் ஒரு தூதுக்கூட்டம் சென்னை கவர்னரிடம் சென்று இவ்வித சட்டமிருப்பதை ஞாபகப்படுத்தி அமுலுக்குக் கொண்டுவருமாறு மன்றாடியபோது "கோப தாப உணர்ச்சிகளை அடக்கவேண்டிய பிஷப் தமது ஜோலியைவிட்டு, தேசத்தின் அமைதிக்கும் சமாதானத்துக்கும் ஆபத்தை விளைவிக்கக்கூடிய விஷயங்களில் தலையிடுவது கண்டு கவர்னர் மிகவும் வருத்தப்படுகிறார்" என்று பதிலளிக்கப்பட்டது. இதற்குள்ளாக கிளனல்க் பிரபுவின் சட்டத்தில் தங்கள் வருஷ வருமானத்தில் 30000 பவுன் நஷ்ட மேற்படுமென இங்கிலாந்திலுள்ள டயரக்டர் கோர்ட்டார் கண்டுகொண்டார்கள். இந்திய விக்கிரகவணக்கத்திலிருந்து அவர்களுக்கு அவ்வளவு லாபம் கிடைத்துவந்தது. ஆகவே, சோம்பேறிப்பிரசங்கிகளின் வார்த்தைகளைக் கேட்டு இவ்வளவு பெரிய தொகையை இழக்கமுடியாதென அவர்கள் சொன்னார்கள்.

உடன்தானே சீமையிலிருந்து இந்தியாவுக்கு ஒரு புதிய சட்டம் அனுப்பப்பட்டது. இந்த புதிய சட்டம் 1833-ம் வருஷத்தில் கிளனல்க் பிரபு இயற்றிய சட்டத்தை முற்றும் மாற்றிக் கொஞ்சங்கூட விக்கிரக ஆராதனையை நிலைநிறுத்தச் சாதகமளித்தது. இவ்விஷயம் அளவுமீறிப்போய்விட்டது. இதுகாரணமாக நெல்ஸன் என்ற ஆங்கிலோ இந்திய ஜட்ஜி தமது உத்தியோகத்தை ராஜிநாமாச்செய்தார். சென்னபட்டணத்தைச் சேர்ந்த ஒரு கிறிஸ்தவ முரசுகாரன், திருவிழாவுக்கு முரசடிக்க மறுத்ததற்காக அவனைத் தண்டிக்க உத்தரவிட்டபோது அப்பட்டாளத்தின் சேனாதிபதி ஸர் பெர்கிரின் மெயிட்லன்று (Sir Peregrine Maitland) என்பவர் குற்றவாளியைத் தண்டிக்க முடியாதென்று சொல்லி தமது உத்யோகத்தையும் ராஜிநாமாச்செய்துவிட்டார்.

நெல்ஸன், மெயிட்லன்று ஆகிய இரு உயர்தர உத்தியோகஸ்தர்களின் ராஜிநாமா, இங்கிலாந்து முழுவதும் பெரிய பரப்பை உண்டுபண்ணிற்று. இது காரணமாக, 1833-ல் கிளனல்க் பிரபு இயற்றிய சட்டத்தை அங்கீகரிக்குமாறு 1840-ல் இங்கிலாந்து தேசம் முழுவதும் டயாக்டர் கோர்ட்டாரை ஏகோபித்து வற்புறுத்தியது. எனவே விக்கிரக ஆராதனையோடு அரசாங்கத்திற்கு இருந்து வந்த தொடர்பு படிப்படியாக ஒழிக்கப்பட்டது. தீர்த்தவரிகள் ரத்து செய்யப்பட்டன. கோவில்களெல்லாம் பிராமணர்கள்கையில் ஒப்படைக்கப்பட்டன. திருவிழாக்களுக்கு பிரிட்டீஷ் அதிகாரிகள் விஜயஞ்செய்ய வேண்டுமென்று கோரப்படவில்லை. எனினும், இந்த சீர்திருத்தங்கள் அத்தனையும் அமுலில் வர நீண்டகாலம் பிடித்தது. ஏனென்றால் கம்பெனி அரசாங்கத்தார் ஏராளமான கோவில்களையும் கோவில் சொத்துக்களையும் பரிபாலித்து வந்தார்கள். இந்த ஆதாயங்களையும் வருமானங்களையும் விட்டுவிட மனம் வரவில்லை.

1852-ம் வருஷம் ஏற்பட்ட சிப்பாய் கலககாலத்திலுங்கூட, கம்பெனியாரிடமிருந்து பிரிட்டீஷ் அரசாங்கத்தார் ராஜ்யபாரத்

தை யேற்றுக்கொண்டபோதும், அனேகக்கோவில்கள் கம்பெனியார் ஆதீனத்தில் இருந்தன. எனினும் ஒரு புதிய சகாப்தம் ஆரம்பமாயிற்று. இந்த விஷயத்திலாவது 'பழைய கொள்கை முற்றும் கைவிடப்பட்டது. கடைசியாக 1862-ம் ஆண்டில், ஒரு புதிய சட்டம் ஏற்படுத்தி, கோவில்களையும் பள்ளிகளையும் இந்து முஸ்லீம் சமுதாயத்தார்களிடம் அவரவர் கோவில்களை ஒப்படைத்தார்கள்.

முதற்பாகம் முற்றிற்று.

சித்ரஞ்சன் பிரஸ், கேப் ரோடு, நாகர்கோவில்.